ரகுநாதன்

# புதுமைப்பித்தன் வரலாறு

மீனாட்சி புத்தக நிலையம்

# புதுமைப்பித்தன் வரலாறு

ரகுநாதன்



மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக் கோபுரத் தெரு, மதுரை - 1

கிளை : 228, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை- 5

முதற் பதிப்பு : அக்டோபர் 1951
இரண்டாம் பதிப்பு : பிப்ரவரி 1958
மூன்றாம் பதிப்பு : நவம்பர் 1980
மீனாட்சி—176

விலை ரூ 10-75

PUTHUMAIPPITHAN VARALARU
Tamil Biography
By RAGUNATHAN

3rd Edition, November 1980
Pages 240
10 Pt. Letters
18×12.5. Cms
11.6 Kg D/C
Seshasayee White Printing Paper
Box Board Binding
Vettri Achagam, Madras—5

MEENAKSHI PUTHAKA NILAYAM
60, West Tower Street, Madurai-625 001

Branch : 228, Triplicane High Road, Madras-600 005

# பதிப்புரை

தமிழில் எழுத்தாளர்களைப் பற்றிய வாழ்க்கை வரலாறுகள் மிகவும் குறைவு. வந்துள்ளவற்றிலும் நினைவில் நிற்கக் கூடியவையாகவும், எழுத்தாளர்களைச் சரியான முறையில் இனம் காட்டக் கூடியவையாகவும் உள்ளவை அதிலும் குறைவு. தமிழ்ச் சிறுகதை உலகில் அழியாத புகழையும் ஸ்தானத்தையும் பெற்றுள்ள அமரர் புதுமைப்பித்தனைப் பற்றி ஆசிரியர் ரகுநாதன் எழுதியுள்ள வாழ்க்கை வரலாறு, தமிழில் வெளிவந்துள்ள வாழ்க்கை வரலாற்று நூல்களில் தனிச் சிறப்பு மிக்க படைப்பாகும்.

ஆசிரியர் ரகுநாதன் புதுமைப்பித்தனோடு நெருங்கிப் பழகியவர்; அவரது இதயத்தையும் இலக்கியத்தையும் நன்கறிந்தவர்; ஆழமாகக் கற்றவர். மேலும் புதுமைப்பித்தன் காலமான பின்னர் அவரது புகழைப் பரப்புவதிலும், அவரது நூல்களைத் தொகுத்து அவற்றை வெளிக் கொணரச் செய்வதிலும் அரும்பணி ஆற்றியவர். இந்தத் தகுதிகளும் புதுமைப்பித்தனிடம் அவர் கொண்டுள்ள ஈடுபாடும்தான் இந்த வரலாற்று நூலைச் சிறப்புடையதாக்க அவருக்கு உதவியுள்ளன.

புதுமைப்பித்தன் நூல்கள் அனைத்தையும் முறையாக வெளியிட்டு வரும் பணியை நிறைவேற்றி வரும் நாங்கள், புதுமைப்பித்தனைப் பற்றி ரகுநாதன் எழுதியுள்ள வரலாற்று நூலின் இந்தப் பதிப்பையும் எங்கள் வெளியீடாக வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

செ. செல்லப்பன்

மதுரை

28-11-80

## ஆசிரியரின் பிற நூல்கள்

சிறுகதை : ரகுநாதன் கதைகள்
சேற்றில் மலர்ந்த செந்தாமரை
க்ஷணப்பித்தம்
சுதர்மம்

நாவல் : பஞ்சும் பசியும்
கன்னிகா
புயல்

கவிதை : ரகுநாதன் கவிதைகள்
கவியரங்கக் கவிதைகள்
காவியப் பரிசு

நாடகம் : சிலை பேசிற்று
மருதுபாண்டியன்

விமர்சனம் : இலக்கிய விமர்சனம்
சமுதாய இலக்கியம்
கங்கையும் காவிரியும்
பாரதியும் ஷெல்லியும்
பாரதி : காலமும் கருத்தும்

# முதற் பதிப்பின்

# முன்னுரை

புதுமைப்பித்தனது வாழ்க்கை தமிழ் எழுத்தாளர் ஒருவரின் சோக நாடகம்; உயிருள்ள எழுத்தாளர்களுக்கு ஒரு எச்சரிக்கை.

'புதுமைப்பித்தன்' வரலாறு அவர் காலமான சமயத்திலேயே வெளிவந்திருக்க வேண்டியது. ஆனால், இந்தச் சரிதத்தை எழுதுவதற்கான சில முக்கியத் தகவல்களை என்னால் உடனடியாகச் சேகரிக்க இயலவில்லை. அதற்கே ஒரு வருஷ காலத்துக்கு மேலாகிவிட்டது. சமீபத்தில் புதுமைப்பித்தனின் பெயர் தமிழ்நாடெங்கும் ஒலிக்கத் தொடங்கியது. எனவே இந்தச் சந்தர்ப்பத்தில் இந்நூலை அவசியம் வெளியிட வேண்டும் என்ற ஆசையால், இதை எழுதி முடித்தேன். இதைவிட விரிவாக எழுதவேண்டும் என்பது என் ஆவல். ஆவலைப் பெருக்கி நாளைக் கடத்திக்கொண்டு போவதைவிட, இந்த உருவிலேனும் எழுதி முடிக்க முடிந்ததில் எனக்கு ஒரு திருப்தி; நிம்மதி.

இந்நூலை எழுதத் தொடங்கும்போது எனக்கு ஏற்பட்ட சங்கடங்கள் பல. புதுமைப்பித்தன் நம்மோடு வாழ்ந்து சமீப காலத்தில்தான் மறைந்தவர். அவரது நண்பர்களும் விரோதிகளும் நம்மிடையே இருக்கிறார்கள். மேலும் புதுமைப்பித்தனின் வாழ்க்கை அம்சங்களில் சில, அவரது மனைவிக்கும் நண்பர்களுக்குங்கூட தெரியாத விஷயங்கள். இந்த நூலில் நான் பல பேர்களுடைய பெயர்

களைக் குறிப்பிடாமலும் விட்டிருக்கிறேன்; பலரை குறிப்பிட்டு மிருக்கிறேன். ரசக் குறைவு தரக்கூடிய விஷயங்களைக் கூடியவரை விலக்கி, ரச நிறைவு கொண்ட விஷயங்களையே பெரும்பாலும் எழுதியிருக்கிறேன். சில விஷயங்களை எழுதியிருக்க வேண்டாமே என்று சிலருக்கு நினைக்கத் தோன்றும். எனினும் புதுமைப்பித்தனது சரிதம் சோனிப் பிறவியாக இல்லாமல் நிறைமாசக் குழந்தைப் பிறப்பின் வனப்போடு விளங்க வேண்டுமென்ருல், சில விஷயங்களைக் குறிப்பிடத்தான் வேண்டும். புதுமைப்பித்தன் இன்று இல்லை. எனவே யாரும் இந்த நூலிலுள்ள அந்தச் சில விஷயங்களைப் பொருட்படுத்திப் பேசமாட்டார்கள் என்று நம்புகிறேன்.

இந்நூலை எழுதி முடிப்பதற்கு எனக்கு உதவிய நண் பர்கள், பத்திரிகை ஆசிரியர்கள், எழுத்தாளர்கள் முதலியோர் பலர். ராமனுக்கு உதவிய அணிலைப்போலவும், அனுமனைப் போலவும் சிறிதும் பெரிதுமாக எனக்கு அவர்கள் உதவினுர்கள். அவர்கள் அனைவருக்கும் என் நன்றி. குறிப்பாக இந்நூலை எழுதி முடிப்பதற்கு எனக்குப் பெருந்துணை செய்து ஒத்துழைத்த புதுமைப்பித்தனின் மனைவி கமலாம்பாள், திருவனந்தபுரம் எஸ். சிதம்பரம், புதுமைப் பித்தனின் தந்தை சொக்கலிங்கம்பிள்ளை முதலியோருக்கு என் நன்றியையும், வந்தனத்தையும் கூறக் கடமைப்பட்டிருக் கிறேன்.

செப்டம்பர் 1951. ரகுநாதன்

# இந்தப் பதிப்பும் பற்றி

புதுமைப்பித்தன் அமரராகி முப்பது ஆண்டுகளுக்கு மேலாகி விட்டன. அவர் அமரரான பின் மூன்றாண்டுகளில் எழுதி வெளியிடப்பட்ட வரலாற்று நூல் இது. இந்த நூலின் முதற் பதிப்பு வெளிவந்தபின் கடந்த கால் நூற்றாண்டுக்கும் மேற்பட்ட காலத்தில், இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ள புதுமைப்பித்தனின் சம காலத்தவர் பலரது வாழ்விலும் பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. அவர்களில் பலர் இன்று நம் மிடையிலும் இல்லை. என்றாலும் இந்த மாற்றங்களுக்கேற்ப நான் இந்நூலை எவ்விதத்திலும் திருத்தி எழுதவில்லை. காரணம் இந்த நூல் புதுமைப்பித்தனைப் பற்றிய வரலாறுதான்; மற்ற வர்களைப் பற்றியதல்ல.

புதுமைப்பித்தன் பூத உடம்மை நீத்துப் புகழுடம்பை எய்தி விட்ட நிலையில், இருபதாம் நூற்றாண்டின் முற்பாதி யைச் சேர்ந்த சிறந்த தமிழ் எழுத்தாளர் ஒருவரின் வாழ்க்கை யையும், அவரது ஆயுட்காலத்தில் நிலவிய சூழ்நிலைகளையும், அன்றைய தமிழ் இலக்கிய உலக நிலைமையையும் எடுத்துக் கூறும் முயற்சியாகவே இந்நூல் எழுதப்பட்டது. இந்த முயற் சியில் இந்நூல் வெற்றி பெற்று, இன்றும் அந்த எழுத்தாள ரையும் அவரது காலச் சூழ்நிலையையும் தக்க முறையில் இனம் காட்டி நிற்கிறது என்பதற்கு, தமிழில் வெளிவந்துள்ள வாழ்க்கை வரலாற்று நூல்களை ஆராயப் புகும் ஆசிரியர்கள் எவரும், இந்த நூலை மறக்கவோ, இதன் சிறப்பைப் பாராட்ட மறுக்கவோ முனையவில்லை என்பதே சான்றாகும். மேலும், புதுமைப்பித்தனைப் பற்றிய ஆராய்ச்சிகளில் ஈடுபடுவோர் யாவரும் இந்நூலின் பகுதிகளை அத்தாட்சியாக மேற்கோள் காட்டுவதையும் நான் காண்கிறேன். இவை யாவும் இதன் ஆசிரியரான எனக்கு மனநிறைவும் மகிழ்ச்சியும் அளிப்பன வாகும்.

இந்நூலின் இந்தப் பதிப்பின் இறுதியில் ஈராண்டுகளுக்கு முன்னால் திருச்சி வானொலி நிலையத்தில் நானும் எனது அருமை நண்பரும் எழுத்தாளருமான திரு. சுந்தர ராமசாமியும் புதுமைப்பித்தனைப் பற்றி உரையாடிய நீண்ட பேட்டி நிகழ்ச்சியும் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இந்தப் பேட்டி நிகழ்ச்சியில் புதுமைப்பித்தனைப் பற்றி மேலும் புதிய செய்திகளும், விவரங்களும் இடம் பெற்றிருப்பதை வாசகர்கள் காண முடியும்.

இந்தப் பேட்டியை ஒலிப்பதிவு செய்து புதுமைப்பித்தன் நினைவு நாளையொட்டி ஒலிபரப்பிய திருச்சி வானொலி நிலையத்தார் இதனை அச்சில் வெளியிட்டுக்கொள்ள அனுமதித்ததற்கும், பேட்டியில் பங்கு கொண்ட நண்பர் திரு. சுந்தர ராமசாமி இதனை இந்நூலில் அனுபந்தமாகச் சேர்த்துக்கொள்ள ஒப்புதல் அளித்ததற்கும், புதுமைப்பித்தனின் நூல்களையெல்லாம் முறையாக வெளியிட்டு வரும் மீனாட்சி புத்தக நிலையம் திரு. செ. செல்லப்பன், அனுபந்தத்தோடு கூடிய இந்நூலின் புதிய பதிப்பை வெளியிடுவதற்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நவம். 1980.

ரகுநாதன்

# குல முறை

1946-ம் வருஷத்தில் என்ருே ஒரு நாள் இரவில்.... சென்னை, 170, ராயப்பேட்டை ஹைரோடிலிருந்த 'புதுமைப்பித்தன்' வீட்டில், புதுமைப்பித்தனும் நானும் பேசிக்கொண்டிருந்தோம். அந்தச் சமயத்தில் ஒரு தமிழ் நாட்டுக் 'கவிஞர்' அங்கு வந்து சேர்ந்தார். அவர் எழுதியுள்ள பாடல்கள் புதுமைப்பித்தனுக்குப் பிடிக்காத சரக்கு. வந்தவர் பேசிக் கொண்டிருந்துவிட்டுச் சும்மா போகாமல் புதுமைப்பித்தனைப் பார்த்து, "என்ன சோவி! உங்கள் கதையையும் என் கவியையும் தமிழ் நாட்டார் உணரவேயில்லை. நீங்களும் நானும் ஆயிரம் வருஷம் தப்பிப் பிறந்துவிட்டோம்!" என்று கூறி அங்கலாய்த்துக் கொண்டார்.

புதுமைப்பித்தன் பதில் சொன்னார்:

"ஆமப்பா, நீ ஆயிர வருஷம் பிந்திப் பிறந்து விட்டாய். நான் ஆயிர வருஷம் முந்திப் பிறந்துவிட்டேன். இன்றைய தமிழ் நாடு நம் இருவரையும் எப்படிப் புரிந்து கொள்ளும்?........"

கவிஞருக்குக் கிடைத்த சூடு இருக்கட்டும்.

புதுமைப்பித்தன் தமிழ் நாட்டின் சிறந்த கதாசிரியர். எனினும் தமது மேதையைத் தமிழ் நாடு உணரச் சக்தியற்றுக் கிடக்கிறதே என்ற ஏக்கம் புதுமைப்பித்தனுக்கு இருந்ததுண்டு. ஆனல், இன்று அவரது மறைவுக்குப்பின்

தமிழ் நாடு அவரைப் போற்றுகிறது; விழா கொண்டாடுகிறது. உண்மையிலேயே அவரது மேதையைத் தமிழ் நாடு உணர்ந்து கொண்டுவிட்டது என்று நாம் நம்பினுல், புதுமைப்பித்தன் கூறிய மாதிரி அவர் ஆயிரம் வருஷகாலம் பிந்திப் பிறந்தவரில்லை; ஐந்து வருஷகாலமே பிந்திப் பிறந்துவிட்டார் என்று சொல்லக்கூடும்.

ஆனுல், புதுமைப்பித்தன் என்ற சொ. விருத்தாசலம் ஆயிரம் வருஷமும் பிந்திப் பிறக்கவில்லை; ஐந்து வருஷமும் பிந்திப் பிறக்கவில்லை. இந்த நூற்ருண்டின் ஆரம்ப காலத்தில், சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர்தான் பிறந்தார்.... ...

புதுமைப்பித்தன் இருபதாம் நூற்ருண்டின் தமிழ் இலக்கிய உலகிலே ஒரு தனி ஜாதி; தனி ஜோதி....

* * *

சுமார் நான்கு தலைமுறைகளுக்கு முன்னுல்—

திருநெல்வேலி சரகத்தைச் சேர்ந்த உலகளந்த பெருமாள் பிள்ளை என்னும் சைவ வேளாள குல நபர் ஒருவர் தென்ஞற்காடு ஜில்லாவுக்குச் சென்று அங்கு ஒரு கிராமத்தில் கர்ணம் உத்தியோகம் பார்த்து வந்தார். அப்போது விருத்தாசலத்தில் ஒரு வெள்ளைக்காரத் துரை ஷதர் கோர்ட் கலெக்டராக இருந்தான். பிள்ளையவர்களுக்குத் துரையிடம் மிகுந்த ஈடுபாடு; பக்தி. துரைக்குப் பிள்ளையின் நேர்மையும் விடாமுயற்சியும் உழைப்பும் பிடித்துப் போய்விட்டன. அதன் காரணமாக அவனுக்கு அவர்மீது பெரும் மதிப்பு. எனவே கலெக்டர் துரை உலகளந்த பெருமாள் பிள்ளையைத் தாசில்தாராகவே நியமித்து விட்டான். ஆனுல் அந்த வெள்ளைத்துரைக்கோ, உலகளந்த பெருமாள் பிள்ளை என்ற பெயர் வாயிலேயே நுழையவில்லை. லகர ளகரம் வெள்ளைக்காரனுக்கு அவ்வளவு லேசில் வந்துவிடுமா? அப்புறம் நமது தமிழின் சிறப்பு என்ன ஆவது?

எனவே அந்தத் துரை உலகளந்த பெருமாள் பிள்ளைக்கு, தான் ஆட்சி புரிந்த ஊரின் பெயரையே சூட்டிக்கொள்ளும்படி உத்தரவிட்டான். பிள்ளையவர்களும் துரை தமக்கு அளித்த பதவியின் ஞாபகார்த்தமாக அந்தத் திருநாமகரணத்தை ஒரு சன்னத்தாகவே மதித்து ஏற்றுக்கொண்டார்; விருத்தாசலம் பிள்ளையாகிவிட்டார். இந்த விருத்தாசலம் பிள்ளையின் பேரனுக்குப் பேரனாகப் பிறந்தவரே, சொ. விருத்தாசலம்—அதாவது புதுமைப் பித்தன்! புதுமைப்பித்தனின் முப்பாட்டனார், துரையின் உத்தரவுக்காகத் தம் பெயரை விருத்தாசலம் என்று மாற்றிக்கொண்டார்; சொ. விருத்தாசலமோ கதை எழுதுவதற்காகத் தம் பெயரைப் 'புதுமைப்பித்தன்' என்று மாற்றிக்கொண்டுவிட்டார்!

உலகளந்த பெருமாள் பிள்ளையின் காலம்தொட்டு அவரது வம்ச பரம்பரையார் சர்க்கார் ரெவினியூ இலாகாவில் பரம்பரையாக உத்தியோகம் பெற்று, ராஜ விசுவாசத்தோடு வாழ்ந்து வந்தனர். புதுமைப்பித்தனின் பாட்டனாரும், உலகளந்த பெருமாள் பிள்ளையின் பேரனுமான விருத்தாசலம் பிள்ளை என்பவருக்கும், அவரது மனைவி அழகம்மை என்னும் அம்மையாருக்கும் பிறந்தவரே சொக்கலிங்கம் பிள்ளை; புதுமைப்பித்தனின் தந்தை.

சொக்கலிங்கம் பிள்ளை படித்து பி. ஏ. பட்டம் பெற்று, பர்வதத்தம்மாள் என்பவரை மணம் செய்து கொண்டார். அப்போது அவர் தென்னாற்காடு ஜில்லாவில் நிலப்பதிவுத் தாசில்தாராக இருந்தார். ஆரம்ப காலத்தில் சொக்கலிங்கம் பிள்ளை பல ஊர்களுக்கும் மாற்றுதலாகி வேலை பார்க்க நேர்ந்தது. இப்படி 'தீர்த்த யாத்திரை' உத்தியோகம் பார்த்து வந்த காலத்தில்தான் 1906-ம் வருஷம், ஏப்ரல் மாதம் 25-ம் தேதியன்று கடலூருக்கு அருகிலுள்ள திருப்பாதிரிப்புலியூரில் புதுமைப்பித்தன் தாசில் சொக்கலிங்கம் பிள்ளையின் சீமந்த புத்திரனாக அவதரித்தார். தமிழ் நாட்டுச் சம்பிரதாயப்படி புதுமைப் பித்தனுக்கு அவரது தாத்தா விருத்தாசலம் பிள்ளையின் பெயரே இடப்பட்டது.

புதுமைப்பித்தனின் தாயான பர்வதத்தம்மாள் புதுமைப்பித்தனுக்குப் பிறகு ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுத்துவிட்டு, 1914-ம் வருஷம் காலமானார். தாய் காலமானபோது புதுமைப்பித்தனுக்கு எட்டு வயது. தாயின் பரிபூரணமான அன்பைப் பெறும் பாக்கியம் புதுமைப்பித்தனுக்குக் கிட்டவில்லை. இந்தத் துர்ப்பாக்கியத்தைப் புதுமைப்பித்தன் தாம் சாகும் வரையிலும் மறக்கவில்லை.

புதுமைப்பித்தனின் தங்கையின் பெயர் ருக்மணி என்ற செல்லத்தம்மாள். இந்த அம்மாளுக்கும் விருத்தாசலம் பிள்ளை என்பவருக்கும் பின்னர் திருமணம் நடந்தது. அவர் காட்டுப் பாதுகாப்பு ஆபீசர்; கடப்பை ஜில்லாவில் வேலை பார்த்துவிட்டு, அவர் தம் குடும்பத்தோடு இப்போது பாளையங்கோட்டையில் ஓய்வு பெற்றுக் குடிவாழ்கிறார்.

பர்வதத்தம்மாள் காலமான பின்னர் தாசில் சொக்கலிங்கம் பிள்ளை மறுவிவாகம் செய்து கொண்டார். இரண்டாம் தாரத்தின்மூலம் அவருக்கு மூன்று ஆண்பிள்ளைகள் பிறந்தனர். சொக்கலிங்கம் பிள்ளை இன்று ஜீவியவந்தராக இருக்கிறார்; வயசு தொண்ணூற்றிமூன்று; நல்ல திடகாத்திரர்; கண்ணாடியில்லாமல் வாசிக்கிறார்; கம்பு இல்லாமல் நடக்கிறார்; துடியாகப் பேசுகிறார். அவரைப் பார்த்தால், புதுமைப்பித்தனின் ஞாபகம் வரத்தான் செய்கிறது. ஜாடை, பேச்சு, சிரிப்பு எல்லாம் அப்படித்தான் தோன்றுகின்றன. சொக்கலிங்கம் பிள்ளை வெறும் தாசில்தார் மட்டுமல்ல; புத்தகாசிரியர். இந்திய-ஐரோப்பிய நாட்டு இனங்கள் (Indo - European Races) என்று ஒரு நூலை, பாகம் பாகமாக எழுதியிருக்கிறார். இந்தத் தள்ளாத காலத்திலும் அந்நூலின் மூன்றாம் பாகத்தை எழுதுவதில் முனைந்திருக்கிறார். ஒவ்வொரு பாகமும் ஒரு அகராதியளவு கனம்

புதுமைப்பித்தனின் தந்தையை யாராவது பார்த்து, ""நீங்கள் விருத்தாசலத்தின் தகப்பனாரா?'' என்று கேட்டுவிட்டால் அவருக்கு மனம் குன்றிப் போய்விடும். ""தங்கள்

பிள்ளையா விருத்தாசலம்?'' என்று கேட்க வேண்டுமாம்! சொக்கலிங்கம் பிள்ளை சுத்த சுயம்புவான பத்தொன்ப தாம் நூற்றாண்டின் ராஜவிசுவாசப் பிறவி; வெள்ளைய தோலின் மகிமையில் நிறைந்த ஈடுபாடு. தாம் எழுதிய நூலைக்கூட அவர் ஜார்ஜ் சக்கரவர்த்தி (திர். 5)க்குத் தான் சமர்ப்பணம் செய்திருக்கிறார்.

''விருத்தாசலம்தானே! பயல் துடியானவன்தான். சின்னப்பிள்ளையிலே அவன் கந்தர் கலிவெண்பாவை வைத்துக்கொண்டு பாராயணம் செய்வான். எனக்கு என் நூலை அவனைக்கொண்டு மொழிபெயர்த்து வெளியிட ணும்னு ஆசை. ஆனால், பயல் நம்மை மதிச்சானா, என்ன? என்னமோ அவன் பிறந்த ராசி அப்படி; அடங்காப் பிறவி. இந்தக் காலத்துப் பிள்ளைகளே இப்படித்தான். வயசு வந்தவுடனேயே தகப்பனார் பெட்டிச் சாவியைத் தூக்கிக் கொடுத்திட்டு மண்டையைப் போடணும்னுங்கி றானுக. பிள்ளைக் கன்று தாய்வாழையைக் கொன்று தீர்க் கிறதே, அந்த மாதிரி. நாம் என்ன சொல்லக் கிடக்கு?....''

1948-ம் வருஷம் புதுமைப்பித்தன் காலமான சமயத் தில் அவரை நான் சந்தித்துப் பேசியபோது இப்படியெல் லாம் அவர் என்னிடம் சொன்னார். பேச ஆரம்பித்தால் அவர் லேசில் ஓய்வதில்லை. கடகடவென்று பேசுகிறார்; ஆனால் கேட்பதற்கு அசுணமாச் செவி கூடாது; அசுர சாதகமான பொறுமை தேவை.

# 'பள்ளிப் படிப்பினிலே...

தாசில் சொக்கலிங்கம் பிள்ளை தென்னாற்காடு ஜில்லாவில் வேலை பார்த்து வந்த காலத்தில் புதுமைப்பித்தனின் பாலர் வகுப்புப் படிப்பும் அங்குதான் நடைபெற்றது. ஆனால், தந்தையின் உத்தியோக ஸ்தானம் அடிக்கடி ஸ்தல மாற்றங்களுக்கு ஆளானதால், புதுமைப்பித்தனின் பள்ளிப் படிப்பும் காடாறுமாதம் நாடாறுமாதக் கதையில் தேசாந்திரியாகத் திரிய ஆரம்பித்தது. ஊர்ஊராய் மாறியதால் படிப்பு ஒழுங்காக நடைபெறவில்லை. மேலும், அந்தப் பிள்ளைப் பிராயத்திலேயே புதுமைப்பித்தன் செல்லப்பிள்ளையாக மட்டுமல்லாமல், அடங்காத பிள்ளையாகவும் இருந்தார். அவரது ஆரம்பக் கல்வி செஞ்சி, திண்டிவனம், கள்ளக்குறிச்சி முதலிய ஊர்களில் (சுமாராக 1915—16-ம் வருஷங்களில்) நடைபெற்று வந்தது. ஆனால் புதுமைப்பித்தனுக்குப் பள்ளிப் படிப்பில் சிரத்தை இல்லை; 'மனம் பற்றிடவில்லை.' ''செஞ்சி மலைக்கோட்டையில் சுற்றி வருவதில்தான் எனக்குப் பிரியம்: பள்ளிக்கூடம் எனக்குக் கசந்தது'' என்று புதுமைப்பித்தனே தமது ஆரம்ப காலப் படிப்பைப் பற்றி ஒரு தடவை குறிப்பிட்டார்.

1918-ம் வருஷம் சொக்கலிங்கம் பிள்ளை பென்ஷன் பெற்றார்; அதன்பின் தமது பூர்விக நாடான தென்பாண்டிச் சீமைக்கு, திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தார். தாமிரபருணி யாற்றுக்குக் கீழ்கரையிலுள்ள வண்ணார்பேட்டை

யில் குடியேறி, இன்றும் அங்கேயே வாழ்ந்து வருகிறார். சொக்கலிங்கம் பிள்ளை திருநெல்வேலிக்கு வந்து சேரும் போது புதுமைப்பித்தனுக்கு வயது பன்னிரண்டு. பாலயத்தின் பேதமை மறைந்து அறிவு தெளிந்து உருவேறும் துடியான பருவம். தந்தையின் நிரந்தரமான வாசத்தால், புதுமைப்பித்தனின் பள்ளிப் படிப்பும் 1918-ஆம் வருஷத்துக்குப் பின் நிலைத்து ஸ்திரமாயிற்று, திருநெல்வேலியில் அவர் கல்வி கற்றுக் கொள்ளத் தொடங்கினார். தமிழ் மொழி பொருப்பிலே பிறந்தாலும், தென்னன் புகழிலே வளர்ந்ததுபோல், புதுமைப்பித்தன் திருப்பாதிரிப்புலியூரில் பிறந்தபோதிலும், அவரை ஆளாக்கிவிட்டது தென்னன் புகழ் படைத்த திருநெல்வேலிச் சீமைதான். எத்தனையோ அறிஞர்களையும், புலவர்களையும் எழுத்தாளர்களையும் அன்றும் இன்றும் ஈன்று தந்துகொண்டிருக்கும் தாமிரபருணித் தாய்தான், சொக்கலிங்கம் பிள்ளையின் தலைமகனாக இருந்த சொ. விருத்தாசலத்தை, தமிழன்னையின் தவமகனான புதுமைப்பித்தனாக உருவாக்கி விட்டாள்.

புதுமைப்பித்தனின் பள்ளிப் படிப்பு, திருநெல்வேலி கிறிஸ்தவக் திருச்சபையைச் சேர்ந்த அர்ச். யோவான் ஸ்தாபனக் கல்விக்கூடத்தில் நடந்தேறியது. பள்ளிப் படிப்பைப் பொறுத்தவரை திருநெல்வேலியிலும் அவர் சூட்டிக்கையாக இல்லை. ஒவ்வொரு வகுப்பிலும் ஆர அமர இருந்துதான் அடுத்த வகுப்புக்குப் பாஸ் வாங்குவார். பள்ளிப்படிப்பு இந்தப் புள்ளிக்கு உதவவில்லை யெனினும், பரந்து கிடக்கும் உலகப் பள்ளியின் உள்ளோட்டங்களையும் சலனங்களையும் புதுமைப்பித்தன் நன்கு கிரகித்து, சிறந்த அனுபவக் கல்வியை விருத்தி செய்துகொண்டார். இதனால் அவர் இளமையில் புத்தகங்களை வெறுத்தார் என்று சொல்ல வரவில்லை; பள்ளிப் புத்தகங்களைத்தான் வெறுத்தார். குறிக்குதவாத ஏட்டுச்சுரைகளைத் தயார் செய்துவிடும் கல்வி முறைதான் அவருக்கு ஒட்டவில்லை

பள்ளிப் படிப்பு முடிந்து கல்லூரிப் படிப்புக்குத் தயாரானதும் புதுமைப்பித்தனின் குருகுலம் யோவான் கலாசாலையிலிருந்து, இந்துக் கல்லூரிக்கு இடம் மாறியது.

திருநெல்வேலி ரயில்வே ஜங்ஷனுக்கு எதிராக நிமிர்ந்து நிற்கும் கட்டிடமே இந்துக் கல்லூரி. இந்தக் கல்லூரி தான் மகாகவி பாரதியின் கல்விக்கூடமா யிருந்தது. ' இந்தக் கல்லூரியில்தான் பாரதி உபாத்தியாயரைப் பார்த்து ''காளமேகம் ஆசிரியரின் உத்தரவுக்குப் பணிந்து மழை பொழியாது!'' என்று வீருப்புடன் பதிலளித்தார்.

புதுமைப்பித்தன் கல்லூரிக்குள் பிரவேசித்த காலத்தில் அவருக்கு நல்ல வாலிப தசை; ஆனால் அந்த வயதிலும் அவர் கல்லூரிப் படிப்பில் நாட்டம் செலுத்தவில்லை; மாறாக, நாவல்கள் படிப்பதில் அதிகக் கவனம் செலுத்தினார். நாள் ஒன்றுக்கு, குறைந்த பட்சம் ஒரு துப்பறியும் நாவலாவது படித்து முடிப்பது அவரது வழக்கம். நாவல்களைப் படித்துப் படித்து அவருக்கும் நாவல் எழுத வேண்டும் என்ற ஆசையும் எழுந்தது. கல்லூரியில் படிக்கும் போதே ஒரு துப்பறியும் நாவல் எழுதிப் பார்த்ததாக புதுமைப்பித்தன் என்னிடம் ஒருநாள் சொன்னார். கதை என்ன தெரியுமா? தூத்துக்குடித் துறைமுகத்தில் ஒரு பாரசீக வியாபாரி வந்திறங்குகிறான்; கையிலே ஒரு பெட்டி. தூத்துக்குடியில் ஒரு பெரிய பணக்காரன். அந்த வியாபாரி பணக்காரனிடம் சென்று வியாபாரம் செய்ய முனைகிறான். விற்க வந்த பொருள் வாசனைத் திரவியம். வியாபாரி கொடுத்த அத்தரை முகர்ந்து பார்க்கிறான் பணக்காரன். அவ்வளவுதான்! உடனே மூர்ச்சை போட்டு விழுந்து விடுகிறான். வியாபாரி பணத்தையெல்லாம் சுருட்டிக் கொண்டு ஓடிவிடுகிறான். அவன் கொண்டு வந்தது அத்தர் அல்ல; மயக்க மருந்து! அவன் வியாபாரியல்ல; திருடன்!........

இதுதான் கதையின் ஆரம்பம். பிறகுதான் துப்பறியும் மகத்துவம் இருக்கவே இருக்கிறதே! புதுமைப்பித்தனுக்கே அந்தக் கதை ஆரம்பத்துக்குமேல் ஞாபகத்தில் இருக்கவில்லை. நல்ல வேளையாக, புதுமைப்பித்தன் ஒரு துப்பறியும் நாவலாசிரியராக மாறிவிடவில்லை. வளர்ந்தோங்கி நிமிர்ந்து நின்று பிரகாசிக்க வேண்டிய அவரது மேதையுள்ளம் வடுவூர் ஐயங்காரைப் போலவோ, ஆரணி முதலியாரைப் போலவோ திரும்பி விடவில்லை. அதற்குப்

பதிலாகத் தமிழும் அவரும் உலகமும் பெருமைப்படத் தக்க அருமையான சிறுகதைச் செல்வத்தைச் சிருஷ்டித்துத் தந்தது.

புதுமைப்பித்தனின் நாவல் பைத்தியத்தை அவரது தந்தை அறிவாரா என்ன? பிள்ளைக்குப் படிப்பில் அக்கறை வந்து விட்டது என்றே கருதினார். புதுமைப்பித்தனே இரவு ஒருமணி இரண்டு மணிவரை கண்விழித்து நாவல்களைப் படித்துக் கொண்டிருப்பார். இதைக் கண்டு சொக்கலிங்கம் பிள்ளைக்கு உள்ளூர மகிழ்ச்சி தாண்டவமாடும். பள்ளிக்கூடப் பாடங்களை ஒழுங்காகப் படிக்காத தமது மற்ற பிள்ளைகளைக் கண்டிப்பார்: புதுமைப்பித்தனையோ இரவில் அகாலம் வரையிலும் படித்துக் கொண்டிருப்பதற்காகக் கண்டிப்பார்.

பள்ளிப் படிப்பில் கவனம் இல்லாத காரணத்தால புதுமைப்பித்தன் கல்லூரிப் படிப்பையும் சீக்கிரம் முடிக்க முடியவில்லை. மேலும், கல்லூரியிலும் புதுமைப்பித்தன் குறும்புக்காரப் பிள்ளை. ஒருதடவை தமது ஆசிரியர் ஒருவரைப்பற்றிக் கல்லூரிக் கரும்பலகையில் கிண்டலாக எழுதிவைத்து விட்டார். அந்த ஆசிரியர்தான் பலவருஷ காலமாக இந்துக் கல்லூரியில் பணியாற்றி வந்த வி. பொன்னுசாமிப் பிள்ளை; இந்துக் கல்லூரியின் வைஸ் பிரின்ஸிபால்; சரித்திரப் பேராசிரியர்.

புதுமைப்பித்தன் எழுதிவைத்த குறிப்பு இதுதான்:

*Mussolini is the dictator of Italy;
Our V. P. is the dictator of Notes!

ஷ்ை ஆசிரியர்டம் சரித்திர மாணவர்களாகப் பாடம் பயின்ற மாணவர்களுக்கே இந்த ஹாஸ்யத்தின் உண்மையான சுவை மிகமிக ரசிக்கத்தக்கதாயிருக்கும்!

---

* முஸோலினி இத்தாலியின் சர்வாதிகாரி; நமது வி. பி. யோ 'நோட்ஸ்' ஒப்புவிப்பவர். டிக்டேட்டர் என்ற பதம் சிலேடைப் பிரயோகம்; வி. பி. என்பதும் அப்படியே. வி. பொன்னுசாமிப் பிள்ளை என்பதற்கும், வைஸ் பிரின்ஸிபால் என்பதற்கும் பொருந்தும்.

# இளநீரும் இலக்கியமும்

கல்லூரியில் படித்துவந்த காலத்திலேயே புதுமைப் பித்தனுக்கு இலக்கிய சிருஷ்டியில் நாட்டமுண்டு. எனவே அவருக்கு இலக்கிய நண்பர்களும் இருந்தார்கள். இலக்கிய சிருஷ்டியைத் தவிர, புதுமைப்பித்தனுக்குக் குறும்பிலும் விளையாட்டிலும் நாட்டமிருந்தது. விளையாட்டு என்ருல் பள்ளிக்கூட விளையாட்டுக்களான ஹாக்கி, புட்பால் முதலியனவற்றில் அல்ல. அதில் அவருக்கு நாட்டமே இல்லை. அவர் இயற்கையிலேயே ஒரு நோஞ்சான் பிறவி. உடலுக்கு வலுக்கொடுக்கும் பள்ளி விளையாட்டு அவர் உடம்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை. எனவே அவரது இலக்கிய நண்பர்களே அவரது குறும்புத்தனமான விளை யாட்டுக்குத் தோழர்களாயிருந்து வந்தனர்.

இன்று சென்னை சர்க்காரின் பொருளாதாரப் புள் ளிக் கணக்காயராக இருக்கும் கே. எஸ். சோணுசலம், காரைக்குடி அழகப்பா கல்லூரியில் தமிழ்ப் பேராசிரிய ராக இருந்து சமீபத்தில் காலஞ்சென்ற ஆ. முத்துசிவன், டி. கே. சி. யின் புதல்வரான காலஞ் சென்ற தீத்தாரப் பன் ('தீபன்'), பெங்களூரை யடுத்த மல்லேச்வர வாசி யான கர்மயோகி சதானந்தர், மற்றும் குஹன்பிள்ளை மகாரஜன் ஆகியவர்களெல்லாம் புதுமைப்பித்தனின் இளமைக் காலத் தோழர்கள்.

முத்துசிவன் முதலியோர் வண்ணூர்பேட்டையில் ஒரு அறையில் குடியிருந்து கொண்டு கல்லூரியில் படித்து வந்

தார்கள். புதுமைப்பித்தனுக்கோ அந்த அறைதான் பாசறை. அங்குதான் பெரும்பாலும் அவரைக் காண லாம். அந்தப் பாசறைக்கு உரியவர்கள் யாராயிருந்தா லும் சரி, அதன் தளபதி புதுமைப்பித்தன்தான். அவர் சொல்வது போலத்தான் அங்குள்ளவர்கள் நடக்க வேண் டும். இது கண்டிப்பு.

அறையிலுள்ள நண்பர்களுக்குப் பாயும் படுக்கையும் இருக்கத்தான் செய்தன. இருந்தாலும் புதுமைப்பித்தன் அவற்றை உபயோகிக்க விடமாட்டார், "கட்டையிலே போற கட்டைதானே! சும்மா கட்டையிலேயே படுங் க'வே!" என்று நண்பர்களை யெல்லாம் ஞானதீட்சை செய்து பனங்கட்டைமீது பள்ளிகொள்ளச் சொல்வார்; இல்லையென்றால் தரையில் படுக்கச் சொல்வார். அவரும் படுத்துக்கொள்வார். பிறகு இலக்கிய ஆராய்ச்சி நடக்கும்; அதன்பின் திருட்டு ஆராய்ச்சி நடக்கும். திருட்டு, இலக் கியத் திருட்டல்ல; இளநீர்த் திருட்டு!

நண்பர்கள் குடியிருந்த அறைக்குப் பின்னால் அழகிய தென்னந்தோப்பு. பட்டுப்போல் பால் நிலவு பொழிவதும், தென்னையின் கீற்று சலசலப்பதும், கீற்று வழியே நில வொளி ஒழுகி வடிவதும் இலக்கிய ரசிகர்களான நண்பர் களுக்குப் பெரு விருந்துதான். ஆனால் அந்த விருந்தினால் பசி ஆறுமா? புதுமைப்பித்தனுக்கு அந்தக் காட்சி இன் பத்தைவிட, இளநீரை வெட்டிக் குடிப்பதில்தான் இன் பம் இருப்பதாகப்படும்; பசியும் ஆறவேண்டுமே! எனவே அந்த இன்பத்தைப் பருகுவதற்காகப் புதுமைப்பித்தன் ஆராய்ச்சி நடத்துவார். மரத்திலேறி இளநீர்க் குலைகளை வெட்டித் தள்ளினால் தோட்டக்காரன் சத்தத்தில் விழித் துக் கொள்வான். எனவே அரவமில்லாது இறக்குவதற் காக, இளநீர்க் குலைகளைக் கயிறுகட்டிக் கீழே இறக்கும் வித்தையைப் புதுமைப்பித்தன் நண்பர்களுக்குக் கற்றுக் கொடுத்தார். பிறகு கேட்கவேண்டுமா? இரவோடு இர வாய்த் தேவையான குலைகள் இறக்கப்படும். பிறகு அந்தக் குலைகளை ஆளுக்கொருவராகச் சுமந்துகொண்டு தோப் புக்கு அப்பாலுள்ள வயலுக்குள் கொண்டு சென்று,

தவளைகளின் முணமுணப்பையும், பாம்பின் வாய்ப்பட்ட எலிகளின் சத்தத்தையும் பொருட்படுத்தாமல் இளநீர் களை வெட்டி வயிருரப் பருகுவார்கள், நண்பர்கள்.

இது அவரது நித்திய கருமம்.

நண்பர்கள் கூட்டத்தில் புதுமைப்பித்தனுக்கு வழங்கி வந்த பெயர் பரமஹம்ஸர். ஏன் தெரியுமா? எப்போது பார்த்தாலும் உவமான உவமேயங்களோடுதான் உப தேசம் செய்வார். இந்த உபதேசமெல்லாம் காலை முதல் இரவு ஊரடங்கும் வரையிலும்தான். அதன்பின் அவர் பரமஹம்சரல்ல— திருமங்கை ஆழ்வார்! தேங்காய்த் திருட்டுக்காக அவர் புதிய அவதாரம் எடுத்து விடுவார்.

இளநீர்களை வெட்டிக் குடித்தவுடன் நேராக அறைக் குத் திரும்பி விடுவதில்லை. அப்படிச் செய்வது தரும விரோ தம் என்பார் புதுமைப்பித்தன். தின்றதும் குடித்ததும் செரிக்க வேண்டாமா? எனவே அவர் நண்பர்களை ஆற்று மணலுக்கு அழைத்துச் செல்வார். தாமிரபருணி ஆற்று மணல் சுகநித்திரை செய்வதற்கேற்ற அருமையான நளி னப் பள்ளி. நண்பர் குழாம் ஆற்று மணலில் கண் வள ரும். ஆற்றுக்குச் செல்லாவிட்டால், ஆற்றங்கரையி லுள்ள மாந்தோப்புச் சுடுகாட்டுப் பிரதேசத்துக்கு அழைத்துச் செல்வார். தின்றது செரிக்க மட்டும் அல்ல; திருப்பள்ளி கொள்வதற்கும்தான்! நண்பர் குழாத்தின ரும் வேறு வழியின்றி இந்தப் 'பித்தனை'ச் சுற்றி, பூத கணங்கள் போலச் சுடலைக்குச் செல்வார்கள்.

புதுமைப்பித்தனின் இளமைக் காலம் இப்படித்தான் கழிந்தது; இந்த அனுபவத்தின் சாயையைத்தான் நாம் அவரது 'சாயங்கால மயக்கம்' என்ற கதையில் காண் கிறோம்.

அத்தியாயம் — 4

# திருமணம்

நாவல் படிப்பு, ஞானோபதேசம், இளநீர்த் திருட்டு சுடுகாட்டு நித்திரை - இத்யாதிக் காரணங்களால் புதுமைப் பித்தனின் கல்லூரிப் படிப்பு உரிய காலத்தைக் கடந்து உத்தரவாத காலமும் இல்லாமல் நீள ஆரம்பித்தது. ஒரு மட்டும் 1931-ம் வருஷம் அவர் கல்லூரிப் படிப்பினின் றும் கரையேறினர்; பி. ஏ. என்னும் பட்ட விலாசம் அவ ரது பெயருக்குப் பின்னல் வந்து ஒட்டிக்கொண்டது.

சொக்கலிங்கம் பிள்ளையின் குடும்பத்தாரோ பரம் பரை பரம்பரையாய் சர்க்கார் உத்தியோகத்தில் இருந்து வந்தவர்கள். எனவே 'கால் ரூபாய்ச் சம்பளமானலும் கவர்ன்மென்ட் உத்தியோகம் வேண்டும்' என்னும் மத்திய தர வகுப்பின் சம்பிரதாயப்படி சொக்கலிங்கம் பிள்ளை யும், தம் மகன் பி. ஏ. பட்டம் பெற்றதும், சர்க்கார் உத்தியோகத்தில் இடம் பிடித்து, தம்மைப்போல் பிள்ளை யையும் ஒரு தாசில்தாராக்கிப் பார்த்துவிட வேண்டும் என்று கனவு கண்டு கொண்டிருந்தார். ஆனல் புதுமைப் பித்தன் பி. ஏ. வகுப்பைத் தாண்டுவதற்குள் அவரது வயது இருபத்தைந்தைத் தாண்டிவிட்டது! இருபத் தைந்தை மீறிய பின் சர்க்கார் உத்தியோகத்துக்கு உத்தர வாதம் ஏது? இருந்தாலும் சொக்கலிங்கம் பிள்ளை விட வில்லை. தமது செல்வாக்கை யெல்லாம் உபயோகித்து, சென்னை கவர்னர் வரையிலும் முட்டி மோதிப் பார்த் தார். பலிக்கவில்லை. மேலும், புதுமைப்பித்தனும் கற்ப

லேயும் கவிதையும் ஊறிவரும் தமது பேனாவை, சர்க்காரின் சிவப்பு நாடாச் சேவகத்துக்கு அடிமைப்படுத்த விரும்பவில்லை.

சர்க்கார் உத்தியோகம் கிட்டவில்லை என்பதால் சொக்கலிங்கம் பிள்ளை மனம் சோர்ந்து விடவில்லை. தம் மகனைச் சட்டப் படிப்புக்கு அனுப்பி 'வக்கீல் பிள்ளை' யாக்கிவிட வேண்டுமென்று முடிவு கட்டினார். மேலும் புதுமைப்பித்தனுக்கும் கல்யாணம் ஆகவேண்டிய வயதும் வந்து விட்டது. தலைப் புதல்வன். எனவே சொக்கலிங்கம் பிள்ளை ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை வீழத் தட்டும் யோசனையை மேற்கொண்டார். பெண் கொடுக்கும் சம்பந்தி, மாப்பிள்ளையைச் சட்டப் பரீட்சைக்குப் படிக்க வைக்க வேண்டும் என்பது, அவர் தம் மகனின் கல்யாண பேரத்தில் விதித்த நிபந்தனை. திருவனந்தபுரத்தில் சட்டக் கல்லூரி இருந்ததால் அங்கேயே பெண் பார்த்தார்; கண்டும் பிடித்தார்.

திருவனந்தபுரத்தில் மராமத்து இலாகா சூபர்வைசராக இருந்த பி. டி. சுப்பிரமணிய பிள்ளையின் குமாரத்தி கமலாம்பாளைப் புதுமைப்பித்தனுக்கு மணம் பேசி முடித்தார், சொக்கலிங்கம் பிள்ளை. மாப்பிள்ளையைச் சட்டப் படிப்புக்கு அனுப்புவதாக, பெண்வீட்டார் ஒப்புக் கொண்டதில் சொக்கலிங்கம் பிள்ளைக்குப் பரம திருப்தி. இந்தக் கல்யாணத்தைப் பற்றிப் புதுமைப்பித்தன் ஒரு முறை என்னிடம் ரசமாகச் சொன்னார்: "அந்த வயசிலேயே நான் ஆற்றுக்குப் போகும்போது சுருட்டுப் பிடிப்பது வழக்கம். அன்றைக்கு அவசரம். சுருட்டை எடுத்து மடியில் கட்டிக்கொண்டு மாடியை விட்டிறங்கி ஆற்றுக்குக் கிளம்பினேன். அப்பா இடைமறித்து, கல்யாண விஷயத்தைச் சொன்னார். எனக்கு நின்று பேச நேரமில்லை. சரி, ஆகட்டும் என்று சொல்லி விட்டுப் போனேன். கல்யாணம் நிச்சயமாகி விட்டது. பெண்ணைப் பார்த்ததும் அவள் கண்கள் எனக்குப் பிடித்துப் போய்விட்டன. அந்தக் கண்களுக்காகவே அவளைக் கல்யாணம் பண்ணிக்கொண்டது சரி என்று பட்டது.

கமலாவை நான் கண்ணு என்றுதான் அழைப்பேன்; கண்ணுள் என்றுதான் கடிதம் எழுதுவேன்.''

கொல்லம் ஆண்டு 1107-ல் ஆனி மாதம் 31-ம் தேதி யன்று (ஜுலை, 1931) புதுமைப்பித்தனுக்கும் கமலாம் பாளுக்கும் விவாகம் நடந்தேறியது.

## செல்லும் வழி இருட்டு!

புதுமைப்பித்தனுக்குத் தந்தையின் திட்டப்படி கல்யாணம் முடிந்தது; ஆனால் திட்டத்தின் நிபந்தனை ஷரத்தான சட்டப்படிப்பு மட்டும் முடியவில்லை. ஏற்கெனவே கல்லூரிப் படிப்பில் புதுமைப்பித்தனுக்கு ஒரே கசப்பு; அதிலும் கல்யாணமான பின்னர், கல்லூரிக்குச் சென்று படிப்பதென்பது அவருக்குப் பிடிக்கவில்லை. கல்லூரிப் படிப்பின்போதே இலக்கிய விசாரம் செய்வதில் ஈடுபட்டிருந்த புதுமைப்பித்தன், இலக்கிய நீதியை வரையறுத்துக் காண விரும்பிய புதுமைப்பித்தன், 'இந்தியன் பீனல் கோடை'க் கட்டிக்கொண்டு மாரடிக்க விரும்பவில்லை.

எனவே கல்யாணத்துக்குப் பிறகும் அவர் தம் இஷ்டப்படியே வாழ்ந்து வந்தார். இலக்கிய சர்ச்சை செய்வதற்கு, திருநெல்வேலிப் பாலத்திலுள்ள (ஜங்ஷன்) கடைச் சங்கம் அவருக்கு ஆஸ்தானமாக விளங்கியது. திருநெல்வேலி ஜங்ஷனில் முத்தையா பிள்ளை புத்தகக் கடை என்பது அந்தக் காலத்தில் மிகவும் பிரபலமானது. கடைக்காரருக்கும் இலக்கியத்தில் நல்ல ஈடுபாடு. எனவே திருநெல்வேலியிலுள்ள இலக்கிய கர்த்தாக்கள், ரசிகர்கள் பலரும் ஒன்று கூடுவதற்கு, கூடி இலக்கிய விசாரம் செய்வதற்கு முத்தையா பிள்ளையின் கடை கேந்திர ஸ்தானமாக விளங்கியது. ரசிகர்களின் இந்த 'சத்சங்கம்' அந்தக் கடையில் கூடுவதால் 'கடைச் சங்கம்' என்பது

காரணப் பெயராகிவிட்டது! இந்தக் கடைச் சங்கத்தில் பி. ஸ்ரீ. ஆசாரியா, வையாபுரிப் பிள்ளை முதலியோரும் உண்டு; புதுமைப்பித்தனும் அங்கு செல்வது வழக்கம்.

இலக்கிய சர்ச்சையிலும் சிருஷ்டியிலும் பொழுதைக் கழிக்க முனைந்த புதுமைப்பித்தனின் வாழ்க்கை அவ ருக்குப் பிடித்திருந்தது; ஆனால் அவரது தந்தைக்குப் பிடிக்கவில்லை. தமது ஆசையை யெல்லாம் நிராசையாக்கி விட்டு, சொன்னபடி கேளாமல் சுற்றித் திரிகின்ற மகனின் போக்கு, முதலில் தந்தைக்குப் பிடிக்கவில்லை. 'படிச் சாச்சி. கலியாணம் பண்ணியாச்சி. எங்கேயாவது ஒரு வேலை வெட்டியைப் பார்த்து, நாலுகாசு சம்பாதிக்க வேண்டாமா? சும்மா சுத்திட்டுச் சுத்திட்டு வந்து சோத் தைப் போடுன்னு, யார் போடுறது?' என்று ஒரு தந்தைக் குரிய நியாயமான நீதியைப் போதிக்க ஆரம்பித்து விட் டார் சொக்கலிங்கம் பிள்ளை.

தந்தையின் உதாசீனம் மட்டும் புதுமைப்பித்தனைத் தாக்கவில்லை. தாயை இழந்த புதுமைப்பித்தன் மாற்றாந் தாயின் ஆட்சியில்தான் வளர்ந்து வந்தார். மாற்றாந் தாயின் கொடுமையைப்பற்றிக் கதைகளில் சினிமாக்களில் நாம் பார்த்திருக்கிறோம். அது உண்மையா யிருக்குமா, உயர்வு நவிற்சியா என்றுகூட நமக்குச் சந்தேகம் தட்டுவ துண்டு. ஆனால் உலக வழக்கில் அன்போடிருக்கும் மாற்றாந் தாய் ஆயிரத்தில் ஒருத்தி. புதுமைப்பித்தனின் மாற்றாந் தாய் அந்த ஒருத்தியை நீக்கிய பலரில் ஒருத்தி. எனவே அவர் சிற்றன்னையின் கொடுமைக்கு ஆளாகியே வளர்ந் தார். பின்னர் தந்தையும் அவரைக் கடிந்து உதாசீனம் செய்யத் தலைப்பட்ட நிலைமை, சிற்றன்னையின் கொடு மைக்கு விசாலமாகப் பாதை வகுத்துக் கொடுத்தது. தமது சித்தியிடம் புதுமைப்பித்தன் என்றுமே அன்பைக் கண்டதில்லை. ஆனால் தமக்குக் கல்யாணமான பின்னர் அவளது ஆத்திரத்தையும், அசூயையையும் பிரத்தியட்ச மாகக் கண்டு அவர் மனம் புழுங்கினார்.

கல்யாணமாகி ஒரு வருஷ காலம்தான் முடிந்திருக்கும். அதற்குள் மாமி மருகித் தகராறுகள் கிளம்பி விட்டன.

புதுமைப்பித்தனும் ஒரு வழிக்கும் கட்டுப்பட்டு வராததைக் கண்டு, அவரது சித்தி அவரை மறைமுகமாகவும் நேர்முகமாகவும் கடிய ஆரம்பித்தாள். 'புது மனைவியின் சாகஸம்', 'தலையணை மந்திரம்', 'பெண்டாட்டியாத்தா பெரியாத்தா' முதலிய வார்த்தைகள் அவளது சகஸ்ர நாமார்ச்சனையாகி விட்டன. தந்தையும் சும்மா இருக்கவில்லை. உருப்படாத பயல், தறுதலை, சோம்பேறி, தண்டச் சோற்றுக்காரன், பொறுப்பற்ற ஜென்மம்— இத்தியாதி ரகத்தில் நாமாவளி தொடங்கி விட்டார்.

புதுமைப்பித்தனோ சுதந்திர உள்ளம் படைத்தவர். எனவே தகப்பனாருடைய மிரட்டலுக்கும் வசவுகளுக்கும் தலை குனியாது தம் போக்கில் போக எண்ணினார். அவரது ஆசை யெல்லாம் எங்கேயாவது சென்று பத்திரிகைத் தொழிலில் ஈடுபடவேண்டும் என்பதே. அதையே எண்ணி, அதற்காகவே அலைந்து திரிந்தார்; கதைகள் எழுதினார்; கடிதங்கள் எழுதினார். எப்போது பார்த்தாலும் படிப்பு; எழுத்து; அலைச்சல். எவ்விதச் சம்பாத்தியமுமின்றி இந்த மாதிரிக் காரியங்களில் ஈடுபட்டிருப்பதைக் கண்ட சித்திக்கும் தந்தைக்கும், இவரது போக்கு பைத்தியம் போலவே பட்டது. சொ. விருத்தாசலம் 'புதுமைப்பித்தன்' ஆவதற்கு முன்னால் அவரது வீட்டார்தான் அவரைப் 'பித்தன்' எனக் கருதினார்கள்.

புதுமைப்பித்தனுக்கு வரவரப் பிறந்த வீடு சுடுகாடாக மாறி வருவதாகத் தோன்றியது. சித்தியின் கொடுமை, தந்தையின் கோபம், இவற்றால் ஏற்பட்ட இளக்காரத்தால் வீட்டிலுள்ள மற்றவர்களும் புதுமைப் பித்தனை மதியாது சொன்ன சுடுசொற்கள்— எல்லாம் புதுமைப்பித்தனைச் சுட்டன. அவருக்கு அமைதியில்லை; மனம் கொதித்தது.

உலையிலே கொதிக்கும் தண்ணீர் சூடேறிச் சூடேறி, கடைசியில் பொங்கிக் கொதிக்கிறது. ஆனால் அது எந்த நிமிஷம் கொதிக்கும்? புதுமைப்பித்தனின் நிலை அப்படித்தான் இருந்தது. நாளுக்கு நாள் கொதிப்பேறி வந்த புதுமைப்பித்தனின் உள்ளம், எந்தக் கணத்தில்

கொப்புளித்துப் பொங்கும் என்பது அவருக்கே தெரியாதிருந்தது.

ஆனால், ஒருநாள் இரவு—

வழக்கம் போலவே தந்தையும் சித்தியும் அவர்மீது வசை புராணம் பாடிக் கொண்டிருந்தார்கள். புதுமைப் பித்தன் அத்தனையையும் கேட்டார். சூடேறி நின்ற உள்ளம் — உள்ளுக்குள்ளேயே எரிமலைக் குழம்புபோல் கொதித்து நின்ற உள்ளம் — சீறியெழுந்தது. ''இனிமேல் இந்த வீட்டில் நான் இருக்கப் போவதில்லை'' என்றார் புதுமைப்பித்தன். ''எங்கேயாவது தொலைந்தால் சரிதான்'' என்றார் தந்தை. ஆனால் எதை நம்பி வெளியில் செல்வது? புதுமைப்பித்தனின் கல்யாணத்தின்போது பெண்ணுக்கு நகையாகப் போடுவதற்குப் பதிலாக, பணமாகக் கொடுத்திருந்தார்கள் பெண் வீட்டார். புதுமைப் பித்தன் அந்தப் பணத்தைக் கேட்டார்; தந்தை தர மறுத்தார். வாக்குவாதம் முற்றியது. ஆனால் சொக்கலிங்கம் பிள்ளை கடைசி வரையில் அசைந்து கொடுக்கவில்லை. புதுமைப்பித்தனும் அங்கு இருக்க விரும்பவில்லை.

அவ்வளவுதான். புதுமைப்பித்தன் துண்டை உதறித் தோளில் போட்டார்; கட்டிய மனைவி கமலாம்பாளின் கையைப் பிடித்துக்கொண்டு அந்த அர்த்த ராத்திரியிலேயே நடையைவிட்டுக் கீழிறங்கி விட்டார். தெருவுக்கு வந்து நின்று சிறிது நேரம் கழிந்த பின்னர்தான் அவர் தம் எதிர்காலத்தைப் பற்றிச் சிந்தித்தார்.

கையில் பணமில்லை; வேலையில்லை; வீட்டு ஆதரவும் இனிமேல் கிடையாது. காணக்குறைக்கு, துணைக்கு ஒரு கால்கட்டு—மனைவி. எங்கே போவது? என்ன செய்வது?....எதற்கும் பதில் கிடையாது.

செல்லும் வழி இருட்டு
செல்லும் மனம் இருட்டு
சிந்தை அறிவினிலும்
தனி இருட்டு!

என்று புதுமைப்பித்தன் பாடியிருக்கிறாரே! அந்த 'இருட்டில்' தான் அவர் நின்றார். ஒன்றும் தோன்றாமல், ஒன்றும் பேசாமல் மனைவியின் கையைப் பிடித்தவாறு அந்த அர்த்தசாம வேளையில் வண்ணார்பேட்டை சாலைத்தெருவைக் கடந்து நடந்தார் புதுமைப்பித்தன். எங்கு செல்வது? முதலில் இரவு தங்குவதற்கு இடம் வேண்டுமே! எந்தவித யோசனையும் இன்றி முருகன்குறிச்சியை நோக்கிச் செல்லும் சாலையில் நடந்தார். கடைசியாக, வண்ணார்பேட்டையிலிருந்து இரண்டு மைல் தூரத்தில் பாளையங்கோட்டையில் குடிவாழும் தம் சித்தப்பா சுப்பிரமணிய பிள்ளையின் வீட்டில் போய் நின்றார். அன்றிரவும் அதற்கு பின் சில நாட்களும் அங்கேயே தங்கியிருந்தார் புதுமைப்பித்தன்.

சொக்கலிங்கம் பிள்ளைக்கு, தம் பிள்ளை தம் தம்பி வீட்டில் நிழல் தேடியிருக்கும் விஷயம் மறுநாளே எட்டி விட்டது. சுப்பிரமணிய பிள்ளையோடு சண்டை போட்டு, புதுமைப்பித்தனை அங்கிருந்தும் விரட்டும்படி ஏவினார். புதுமைப்பித்தனின் சித்தப்பா அதற்கு இணங்கவில்லை. எனினும் அவர்தான் புதுமைப்பித்தனையும் கமலாம்பாளையும் எத்தனை நாளைக்கு உடன் வைத்திருக்க முடியும்? புதுமைப்பித்தனும் அங்கு தாற்காலிகமாகத்தான் தங்கினார். ஆனால் தாற்காலிகத்துக்கும் ஒரு முடிவு வேண்டுமே!

எனவே புதுமைப்பித்தன் திருநெல்வேலிச் சீமையை விட்டுத் திருவனந்தபுரத்துக்குப் பயணமானார். கசப்பு நிறைந்த மனத்தோடு சென்ற புதுமைப்பித்தனுக்குத் தன்னை அவமதித்து நடத்திய தம் குடும்பத்தாரைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்ற உணர்ச்சியே மிஞ்சி நின்றது. திருவனந்தபுரத்திலும் புதுமைப்பித்தனால் அதிக நாட்கள் இருக்க முடியவில்லை. சம்பாத்தியமில்லாத மருமகனை வைத்துச் சாப்பாடு போடவா பெண்ணைக் கட்டிக் கொடுப்பார்கள்? எனவே அவர் அங்கிருந்தும் மனைவியுடன் வெளியேறினார். வெளியேறும்போது எங்கு செல்லப் போகிறோம் என்பது அவருக்கும் தெரியாது; அவரது மனைவிக்கும் தெரியாது. இருவரும் ரயில் ஏறி

ஞர்கள். மதுரையில் சில நாட்கள்; திண்டுக்கல்லில் சில நாட்கள். அந்தந்த ஊரிலுள்ள இன பந்துக்களின் வீடுகளில்தான் அவர்கள் தங்கியிருந்தார்கள். பிறந்த வீடும் புகுந்த வீடும் ஒன்று சேர்ந்து புறக்கணித்த ஜீவன்களை, பிழைப்புக்கு வழியற்ற தம்பதிகளை, பந்து ஜனங்கள் மதிப்பார்களா? 'மாப்பிள்ளைச் சோறு' போடுவார்களா? புதுமைப்பித்தனுக்கு ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகம்; நரக வேதனை. முடிவில் அவர் மனைவியை மட்டும் திருவனந்தபுரத்துக்கு அனுப்ப வழி செய்தார்; வேலை கிடைத்தவுடன் அழைத்துக் கொள்வதாகச் சொன்னர். தாமும் வெளியேறினர்.

## 'சென்னைக்கு வந்தும் சிவமானேன்!'

வீட்டை விட்டு வெளியேறி எண்ணற்ற துன்பங்களை அனுபவித்த போதிலும் புதுமைப்பித்தனின் இலக்கிய தாகமும் லட்சிய வேட்கையும் அடங்கவில்லை; அவர் அவற்றைக் கைவிடவில்லை.

இந்தக் காலம் 1930-ம் வருஷத்துக்குப் பிந்திய காலம். இந்திய நாட்டு அரசியல் உலகிலும் இலக்கிய உலகிலும் ஒரு விழிப்பும் புதுக் கோணமும் ஏற்பட்டு வந்த காலம். மகாத்மா காந்தி தேசிய இயக்கத்தைப் பொதுஜன இயக்கமாக மாற்றினார்; அந்த மாறுதலின் காரணமாக, காங்கிரஸ் மக்களின் பலத்தைப் பெற்று நாடு முற்றிலும் வலுப்பெற்று ஓங்க ஆரம்பித்தது. காந்தி மகானின் லட்சியங்களைப் பேசி, சுதந்திர தாகத்தோடு பத்திரிகைகளெல்லாம் அரசியல் இயக்கத்தில் ஈடுபட்டன. தமிழ்நாட்டில் இதற்கு முன்பே பாரதி, 'என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்?' என்று பாடிச் சென்றுவிட்டார். பாரதியின் பாடல்களுக்கு மவுசும் புதுச்சக்தியும் இந்தக் காலத்தில் ஏற்பட்டன. அரசியல் விழிப்பு காரணமாக, பொதுஜன ஆதரவைப் பெறுவதற்காக, மக்களுக்குப் பயன்படும் பத்திரிகைகள் தோன்றின. இந்தப் பத்திரிகைகளில் மூன்று குறிப்பிடத்தக்கவை.

1. காந்தி - ஆசிரியர் : டி. எஸ். சொக்கலிங்கம்
2. மணிக்கொடி - ஆசிரியர் : கே. சீனிவாசன்

3. சுதந்திரச் சங்கு - ஆசிரியர்: சங்கு சுப்பிரமணியன்

இந்த மூன்று பத்திரிகைகளிலும் மணிக்கொடி பிற்பட்ட பிறவி. 1933-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் தான் மணிக்கொடி பத்திரிகை பிறவி யெடுத்தது. காந்தியும், சுதந்திரச் சங்கும் மணிக்கொடிக்கு மூத்தவை. காந்திப் பத்திரிகை காரசாரமான தமிழில், பாமர ரஞ்சகமான முறையில் ஏகாதிபத்தியத் துவேஷத்தை வளர்த்து வந்தது. ஆரம்ப காலத்தில் காந்திப் பத்திரிகையில் இலக்கியத்துக்கே இடமில்லை. இலக்கிய விழிப்பும் பூர்ணமாக ஏற்படவில்லை. மேலும் அரசியல்தான் எதையும் விட முக்கிய பிரச்னையாக இருந்தது. முழுக்க முழுக்க அரசியல் விஷயங்களையே வெளியிட்டு வந்த காலத்தில், மணிக்கொடிப் பத்திரிகை அரசியலை மட்டுமல்லாமல் இலக்கியத்தையும் வளர்க்க எண்ணிப் பிறந்தது. இதனால் தான் மணிக்கொடிப் பத்திரிகைக்காரர்கள் தங்கள் பத்திரிகையைத் 'தமிழ் நாட்டின் வெள்ளி முளைப்பு' என்று சொல்லிக் கொண்டார்கள்.

'மணிக்கொடி' பத்திரிகையை கே. சீனிவாசன் (ஸ்டாலின் சீனிவாசன் என்று அழைக்கப் பெற்ற மணிக்கொடி சீனிவாசன்) ஆசிரியராக இருந்து நடத்தி வந்தார். சீனிவாசனுக்குத் துணையாக வ. ரா. வும் பாமர ரஞ்சகமான கட்டுரைகளையும் நடைச் சித்திரங்களையும் எழுதி இலக்கிய சேவை செய்து வந்தார். அப்போதெல்லாம் விஷய அழுத்தம் பிரதானமாகக் கருதப் படவில்லை. என்றாலும், இந்தப் பத்திரிகைகள் எல்லாம் நேர்மையான உத்வேகமும் துடிப்பும் குடிகொண்டு வெளிவந்தன. 'மணிக்கொடி பரம்பரை' என்று இன்று சொல்லிக் கொள்ளும் எழுத்தாளர்கள் சிலரும் இந்த சமயத்தில்தான் தலையெடுத்தார்கள். பி. எஸ். ராமையா, ந. பிச்சமூர்த்தி பெ. கோ. சுந்தரராஜன் ('சிட்டி') முதலியோரின் எழுத்துக்கள் கதை, கட்டுரை, வசனகவிதை என்றெல்லாம் மணிக்கொடியில் வெளிவர ஆரம்பித்தன. தி. ஜ. ர., சங்கு சுப்பிரமணியம் முதலியோர் சுதந்திரச் சங்குடன் ஐக்கியப் பட்டிருந்தார்களாதலால், மணிக்கொடி பரம்பரை என்

னும் சங்கப் பலகையோடு சம்பந்தப்படாத தனி ஆஸ்தான நபர்களாகப் போய் விட்டார்கள்.

அந்தக் காலத்துப் பத்திரிகைகளின் நிலைமை இன்றைய நிலைமையைவிட மோசம். குறைந்த முதலீடு; நிறைந்த ஆர்வம். ஆர்வத்துக்கு என்றைக்குத்தான் நமக்குப் பஞ்சம்? அச்சடித்த பத்திரிகைகள் அனைத்தும் விற்றுலே பெரிய வெற்றி. அப்படியே விற்றுப் போனாலும், அதில் செட்டிப் பிள்ளையைப்போல் வட்டிக்கணக்குப் பார்த்தாலும் லாபக் கலம் பூஜ்யம். இந்த மாதிரி நிலைமையில்தான் புதுமைப்பித்தன் பத்திரிகைத் தொழிலைத் தம் ஜீவனோபாயமாகக் கொள்ள நினைத்தார். மணிக்கொடி, காந்தி - இரு பத்திரிகைகளுக்கும் தமது சிருஷ்டிகளை அனுப்ப முனைந்தார். விஷயதானம் செய்தார். தானம்தான்! ஆரம்ப எழுத்தாளன் தன் சிருஷ்டி வெளி வந்தால் போதும் என்று கருதுகிறவன். சன்மானத்தை அநேகமாக எதிர்பார்ப்பவன் அல்ல. புதுமைப்பித்தன் அந்தச் சமயத்தில் இலக்கிய உலகத்தில் புது நபர்; ஆரம்ப எழுத்தாளர். ஆரம்பம்தான் என்றாலும், 'பிறந்தவுடனேயே நஞ்சுக் கொடியைத் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டு தெருவழியாகக் கோஷமிட்டுக் கொண்டு வரும் குழந்தையின் அசாதாரணத் தன்மை' பெற்றிருந்ததாக, தமது 'அவதாரம்' என்ற கதையில் இசக்கி முத்துவை வருணிக்கிறாரே, அதுபோலத்தான் புதுமைப்பித்தனும் அந்த மாதிரியான அசாதாரணப் பிறவியாகவே இலக்கிய உலகில் புகுந்தார். என்றாலும் புதுமைப்பித்தனுக்குப் பணத் தேவை இருந்தது; அந்தத் தேவையைப் பூர்த்தி செய்யக் கூடிய நிலையில் பத்திரிகைகள் இல்லை.

அப்போது 'காந்தி'ப் பத்திரிகையில் 'கண்டதும் காதல் —பொய்யா? மெய்யா?' என்ற 'அந்தக் காலத்துப் புதிய விழிப்பை'ப் பற்றி ருசிகரமான விவாதம் ஒன்று ஆரம்பமாயிற்று. புதுமைப்பித்தன் இந்த விவாதத்தின் மூலமாக இலக்கிய உலகில் காலடி எடுத்து வைத்தார். 'குலோப் ஜான் காதல்' என்ற தலைப்பில் 'கண்டதும் காதல்' விவகாரத்தைக் கிண்டல் செய்து அருமையாக எழுதி அனுப்பினார்.

அந்தக் கட்டுரை காந்தியில் வெளிவந்தது. இந்தக் கட்டுரையின் மூலம்தான் டி.எஸ். சொக்கலிங்கத்துக்கும் புதுமைப் பித்தனுக்கும் தொடர்பு ஏற்பட்டது. வ. ரா. இந்தக் கட்டுரையைப் படித்துவிட்டு, புதுமைப்பித்தனைப் பாராட்டி ஒரு கடிதமும் எழுதிவிட்டார். அதுமுதல் புதுமைப்பித்தனுக்கும் வ. ரா. வுக்கும் கடிதப் போக்கு வரத்து ஏற்பட்டது.

காந்தியில் எழுதியதுபோலவே புதுமைப்பித்தன் மணிக்கொடியிலும் கதைகள் எழுத ஆரம்பித்தார். 'கற்பு கற்பு என்று கதைக்கிறீர்களே. இதுதானய்யா பொன்ன கரம்!' என்றுகூறி அம்மாளுவை அறிமுகப்படுத்திவைக் கும் 'பொன்னகரம்', 'என்னை என்ன பிச்சைக்காரின்னு நினச்சே?' என்று கேட்கும் 'தொழில் யுவதி'க் கதையான 'கவந்தனும் காமனும்', சொந்த மனைவியிடமே விபசாரம் புரிந்து விட்டுப்போன, தெம்பும் திராணியுமற்ற கோழைப் பிறவி சீமாவை அறிமுகப்படுத்தும் 'ஆண்சிங்கம்' முதலிய கதைகள் எல்லாம் மணிக்கொடியில் வெளிவந்தன. கதைகள் வெளிவந்த காலத்திலேயே புதுமைப்பித்தன் இலக்கிய உலகில் ஒரு விவாதப் பிரச்னையாகி விட்டார். சிலர் புதுமைப்பித்தனது சிருஷ்டிகளைக் கண்டு மிரண்டு நடுங்கினார்கள்; சிலர் அவரது சிருஷ்டிகளின் அசாதார ணத் தன்மை, அக்னி வேகம், புதிய கோணம் முதலியவற் றைக் கண்டு பாராட்டினார்கள்.

புதிய இலக்கிய கர்த்தாக்களின் மத்தியில் புதுமைப் பித்தன் தனித்ததொரு பரிதி வட்டம்போல் விளங்கினார். சந்திர வளையமாக அல்ல. சந்திரனாக இருந்தால், தாரகை மண்டலமும் தெரியும். புதுமைப்பித்தன் தம்மைச் சுற்றி யுள்ள மினுக்கு நட்சத்திரங்களை ஒளியற்றுப் போகச் செய்யும் பரிதியொளி போலத் திகழ்ந்தார். இதனால் புதுமைப்பித்தன் என்ற பெயர் இலக்கிய வட்டாரத்தில் ஒரு கிளர்ச்சியை உண்டாக்கியது. 'புதுமைப்பித்தன் என்பவர் யார்? யார்?' என்ற கேள்வி இலக்கிய ஆசிரியர் களின் மந்திர கோஷமாக ஒலித்தது.

புதுமைப்பித்தன் இப்படி அருமையான இலக்கியத்தை, தாம் வீட்டைவிட்டு வெளியேறி, வேகும் நெருப்பில் வாழ்வதுபோல் இருந்து வந்த காலத்தில்தான் சிருஷ்டித்தார். நித்த நித்தம் நித்ய தேவைப் பிரச்னை. மணிக்கொடியும் காந்தியும் புதுமைப்பித்தனின் விஷயதானத்தை ஏற்க முடிந்ததே யொழிய, அவரை வேலைக்கு அமர்த்திக் கொள்ளச் சக்தியற்றிருந்தன. ஆனால் புதுமைப் பித்தனுக்கோ சென்னைக்கு வந்துதான் தீரவேண்டும் என்றிருந்தது. வ. ரா.வுக்கு மாறி மாறிக் கடிதங்கள் எழுதினார். வ. ரா.வோ வர வேண்டாம் என்பதற்கான நிலைமையை எடுத்துக் கூறி வற்புறுத்தினார். ஆனால் தில்லை நோக்கிய நந்தனைப்போல் தவித்த புதுமைப்பித்தனை, எந்தச் சக்தியும் தடுத்து நிறுத்தவில்லை.

புதுமைப்பித்தன் சென்னைக்கு வருவதால் வ. ரா. வுக்கும், சொக்கலிங்கத்துக்கும் எந்தவித நஷ்டமும் கிடையாது. வந்து என்ன செய்வது என்பதுதான் பிரச்னை. சென்னையில் 'மணிக்கொடி' பட்டொளி வீசிப் பறந்தாலும், அதன் ஓங்கி வளர்ந்த கம்பம் எப்போதும் ஆட்டம் கண்டு கொண்டே யிருந்தது. மூலதனப் பலமில்லை. எனவே மணிக்கொடிப் பத்திரிகை உயிர் வாழும் போராட்டத்தில் தான் ஈடுபட்டிருந்தது. பத்திரிகை மட்டுமல்ல, பத்திரிகையோடு சம்பந்தப்பட்டவர்களும் அப்படித்தான். எனவே 'சென்னைக்கு வந்து சிவமாகி' நிற்கும் இலக்கிய சேவகர்கள் தமது தொண்டர் படையில் புதுமைப்பித்தனையும் ஒருவராகச் சேர்த்துக் கொள்ளத் துணியவில்லை.

இந்த மாதிரி நிலைமையில்தான், ஒருநாள் புதுமைப் பித்தன் திடுதிப்பென்று தெய்வப் பிரசன்னம் மாதிரி சென்னையில் வந்து நின்றுவிட்டார். வந்தவுடன் வ. ரா. வையும் சொக்கலிங்கத்தையும் சந்தித்தார். அன்று முதல் புதுமைப்பித்தனும் அந்த இலக்கியத் தொண்டர் படையோடு ஐக்கியமாகி விட்டார். ஊர் தேடிவந்த புதுமைப் பித்தனை உதறித் தள்ளவும் முடியாது; உதவி செய்யவும் இயலாது. இது மணிக்கொடி சம்பந்தப் பட்டவர்களின் தர்ம சங்கடமான நிலைமை. என்றாலும் லட்சிய வேட்கை

கொண்ட புதுமைப் பித்தனோ அல்லது மணிக்கொடி நிர் வாகஸ்தர்களோ இதைப்பற்றிக் கவலைப் படவில்லை. 'பசிர்ந்து உண்டால் பசியாறும்' என்ற சமதர்மக் கொள்கை அவர்களது நடைமுறையாயிருந்த போதிலும், பகிர்ந்து கொள்வதற்கோ பசியைத் தவிர வேறு எதுவும் அவர்க ளிடம் இருக்கவில்லை.

புதுமைப்பித்தன் சென்னைக்கு வந்து சேர்ந்த வைப வத்தைப் பற்றி வ. ரா. பின்வருமாறு என்னிடம் சொன்னார்:

''ஆசாமி திடீரென்று ஒருநாள் வந்து நின்றார். எங்கள் நிலைமைதான் தெரியுமே. தள்ள முடியுமா? வந்த வருக்குக் கைச்செலவுக்காக இரண்டு ரூபாய் கொடுத்தோம். செலவு என்றால் மேல் செலவுக்கா? சாப்பாட்டுச் செல வுக்கு. மனுஷன் என்ன செய்தார் தெரியுமோ? வெளியே போனார். திரும்பி வரும்போது மூர்மார்க்கெட்டுப் பழைய புஸ்தகக் கடையில் ஒண்ணேகால் ரூபாய்க்கு மாப்பஸான் கதைப் புஸ்தகம், மீதிக் காசுக்கு ஸ்பென்ஸர் சுருட்டு, இவற்றை வாங்கிக் கொண்டு வந்துவிட்டார். 'என்ன வோய், இப்படிப் பண்ணினீர்? செலவுக்கு என்ன பண்ணு வீர்?' என்று கேட்டேன். அதைப் பற்றி அவர் கவலைப் படவில்லை. பேசாமல் சுருட்டைப் பற்றவைத்துக் கொண்டு வாங்கி வந்த புஸ்தகத்தைப் படிக்க ஆரம்பித்துவிட்டார்.''

புதுமைப் பித்தனின் சென்னை வாழ்க்கை இப்படித் தான் ஆரம்பமாயிற்று.

அத்தியாயம் — 7

## 'ஊழியன்'னில் ஊழியம்

மணிக்கொடி என்னும் சத்திய சோதனையில் பங்கெடுத்த புதுமைப்பித்தன் அங்கேயே இருக்கவில்லை; சம்பளமில்லாத மணிக்கொடி சேவகத்தின்போது, சம்பளத்தோடு ஊழியம் செய்வதற்கு அவருக்கு ஒரு சந்தர்ப்பம் கிட்டியது. காரைக்குடியில் ராய. சொக்கலிங்கம் 'ஊழியன்' பத்திரிகையை நடத்தி வந்தார், புதுமைப்பித்தனுக்கு அந்தப் பத்திரிகையின் உதவியாசிரியர் பதவி கிடைத்தது. இது நடந்தது 1934-ம் வருஷம். அந்த வருஷ மத்தியில்தான் ஊழியன் காரியாலயம் சென்னைக்கு இடம் மாறியது.

ஊழியன் பத்திரிகையில் அப்போது சமூகச் சீர்திருத்த விஷயங்களும், ராய. சொக்கலிங்கத்தின் அம்மானை, ஊசல் முதலிய பழைய பந்தாப் பாடல்களும், சில கதை கட்டுரைகளும் வெளிவந்து கொண்டிருந்தன. ஊழியனின் போக்கு, புதுமைப்பித்தனின் போக்கோடு ஒத்துக் கொள்ளாவிட்டாலும், சென்னை யென்னும் வெயிலில் நின்ற புதுமைப்பித்தனுக்கு, 'ஊழியன்' கஷ்டகாலத்தில் உபசாந்தி யளிக்கும் நிழலாகப் பட்டது. ஊழியனில் வேலை பார்த்து வந்த காலத்தில்தான் 'அகல்யை', தேக்கங் கன்றுகள்', 'தெருவிளக்கு' முதலிய அவரது கதைகள் ஊழியனில் வெளி வந்தன.

ஆனால், ஊழியனின் உதவியாசிரியர் பதவியும் புதுமைப்பித்தனுக்கு நிலைக்கவில்லை. காரணம் அவரது

சுதந்திரமான போக்குத்தான். ஊழியனில் அப்போது இ. சிவம் (இசக்கிமுத்து சிவம்) என்ற நாகர்கோயில் ஆசாமி ஒருவரும் வேலை பார்த்து வந்தார். புதுமைப் பித்தனுக்கு அவர் சீனியர். மேலும் அவரும் கதைப் பகுதியில்தான் கவனம் செலுத்தி வந்தார். எனவே தம்மைவிட நன்றாகக் கதைகள் எழுதும் ஒருவர் தம்முடன் ஒரே ஸ்தாபனத்தில் வேலை பார்ப்பது அவருக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. இந்தச் சங்கடத்தின் காரணமாக, புதுமைப்பித்தனுக்கும் அவருக்கும் இருந்த தொடர்பு கர கரத்தது. புதுமைப்பித்தனை அவர் அடக்கியாள எண்ணி னார். புதுமைப்பித்தனோ அந்த இடத்தை விட்டே வெளி யேற எண்ணினார். அதற்கான சந்தர்ப்பத்தையும் எதிர் நோக்கி யிருந்தார். மேலும், முதன்முதல் கிடைத்த 'பிருஹஸ்பதி' பதவியை உதறித் தள்ளிவிட்டுத் தெருவில் இறங்கி நிற்பதா என்று அவருக்கு யோசனை. என்றாலும், முன்னும் பின்னும் வரப்போவதைக் கவனித்துப் பார்க் காத அவரது பிறவிக் குணம், புதுமைப்பித்தனுக்கும் ஊழியனுக்கும் இருந்த தொடர்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. வெளியேறிவிட்டார்.

தாம் வெளியேறியதற்குரிய இந்தக் காரணத்தை, புதுமைப்பித்தன் பொதுவாகத் தம் நண்பர்களிடம் கூறுவ தில்லை; வெளியேறிய சந்தர்ப்பத்தைத்தான் குறிப்பிடு வார். "ஒரு நாள் ஏதோ மொழிபெயர்ப்பு வேலைக்காக டிக்ஷனரி (அகராதி) கேட்டேன். ஆபீசுக்கும் ஒரு அக ராதி இருந்தால் நல்லது என்றேன். 'நீர்தான் பி. ஏ. படிச்சவராச்சே. உமக்கு எதுக்கு டிக்ஷனரி?' என்று கேட்டார்கள். 'ஏதேது, இது ரொம்ப மோசமான இடம் போலிருக்கு. சேச்சே! இது ஆபத்து!' என்று நினைத் தேன்; வெளியேறிவிட்டேன்" என்று தமக்கே உரிய ஹாஸ்ய ரசத்துடனும், தூக்கியெறிந்து பேசும் வாய் வீச்சுடனும் பேசுவார் புதுமைப்பித்தன்.

ஊழியனை விட்டு வெளியேறிய புதுமைப்பித்த னுக்கோ மீண்டும் எங்காவது நிழல் தேட வேண்டிய

நிர்ப்பந்தம்; என்ன செய்வது என்று தெரியவில்லை. பழையபடியும் சென்னைக்கே வந்து சேர்ந்தார்.

சென்னை வந்து சேர்ந்த புதுமைப்பித்தனைக் கண்டு வ. ரா. கேட்டார்: ''என்ன வோய்! இ. சிவம் எப்படியிருக்கார்?''

புதுமைப்பித்தன் வயிற்றெறிச்சலோடு பதில் சொன்னார்: ''ஈ சிவம் இப்போ எறும்பு சிவமாப் போயிட்டார். பிச்சிப் பிடுங்கிட்டார்!''

வ. ரா. சிரித்தார். புதுமைப்பித்தனும் சிரித்தார்.

இதன் பின்னர் புதுமைப்பித்தன் சென்னையிலேயே தங்கிவிட்டார்.

## மணிக்கொடியின் காலட்சேபம்

'கெட்டும் பட்டணம் சேர்' என்பது பழமொழி. ஆனால் பழமொழியை நிருபணம் செய்யும் அளவுக்குச் சென்னை நகரம் அன்னதானச் சத்திரமாகவோ, அமுதசுரபியாகவோ அன்றும் இருந்ததில்லை; இன்றும் இருக்கவில்லை. சம்பாதிக்க எண்ணுபவன் எங்கும் சம்பாதிக்க முடியும். ஆனால் வயிற்றுப் பசியும் வாழ்க்கை லட்சியமும், எந்த இடத்திலிருந்தாலும், முரண்பட்ட தத்துவங்களாகத்தான் இன்றைய சமுதாயத்தில் இருக்க முடியும். எனவே லட்சிய வேட்கையோடு நடத்தப்பட்டு வந்த காந்திப் பத்திரிகை சர்க்காரின் ஜாமீனுக்கு ஆளாவதும், நிதி வசதியற்று நின்று போவதும் அதிசயப்படத்தக்கதல்ல. 1934-ம் வருஷத்தின் இறுதியில் காந்தி, மணிக்கொடி என்ற இரண்டு சோதனைகளுக்குப் பதிலாக, காந்திப் பத்திரிகை மணிக்கொடியுடன் 'இணைக்கப்பட்டது. இந்த இணைப்பினால் வ. ரா., கே. சீனிவாசன், டி. எஸ். சொக்கலிங்கம்—மூவரது முக்கூட்டு இணைப்புத்தான் பலப்பட்டதே தவிர, மணிக்கொடி எந்த விதத்திலும் பலப்பட்டு விடவில்லை. நித்த நித்தம் சத்திய சோதனைதான்.

இந்த மாதிரி நிலைமையில்தான் புதுமைப்பித்தன் சென்னைக்கு மீண்டும் வந்து சேர்ந்தார். மணிக்கொடிப் பத்திரிகையின் நிதி நிலைமை ஏற்கெனவே மோசம்; நாளுக்குநாள் அது முழு மோசமாகிக் கொண்டு வந்தது. மேற்கூறிய மூவரோடு புதுமைப்பித்தனும், பி. எஸ். ராமையாவும் துணை நின்றார்கள். • மணிக்கொடியோடு சம்பந்தப்பட்ட

இத்தனை பேர்களும் அன்றுடம் காய்ச்சிகளைப் போலத் தான் வாழ்ந்து வந்தார்களேயன்றி, 'மாத்தைப் படி' என்று வாங்குவதற்குரிய நிலைக்குத் தக்கவாறு மணிக் கொடி உயரவேயில்லை. இருந்தாலும் இவர்கள் அனைவ ருக்கும் ஆர்வத்துக்குக் குறைச்சலில்லை. இலக்கியத்தைப் புதிய வழியில் எப்படியேனும் கைதூக்கி விடவேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டார்கள். இதன் காரண மாக போட்டிப் பரிசு எல்லாம் வைத்தார்கள். பகுத் தறிவுப் போட்டியல்ல! பகுத்தறிவுப் போட்டிக்கு மணிக் கொடிக்காரர்கள் பரம எதிரிகள். இந்த எதிர்ப்பின் காரணமாக 'ஆனந்த விகட'னில் அப்போது ஆசிரியராக இந்த 'கல்கி'க்கும் மணிக்கொடி எழுத்தாளர்களுக்கும் காரசாரமான கடிதப் போக்குவரத்தும் கட்டுரைச் சண்டைகளும் நடைபெற்றன. அது ஒரு தனிக் கதை. மணிக்கொடியாளர்கள் வெளியிட்ட போட்டி கட்டுரைப் போட்டி; கதைப் போட்டி. மணிக்கொடியின் வளர்ச்சியில் அக்கறை கொண்டவர்கள் தங்கள் சொந்தப் பணத்தி லிருந்து சிறு சிறு தொகையையும் பரிசளிக்க முன் வந்தார் கள். ஒரு சிறு கதைப் போட்டித் திட்டம் வெளிவந்தது. 'நெருக்கடியான நிலைமையில் சக்தியை எப்படி வளர்ப்பது?' என்பது கதையின் கருத்தாக இருக்க வேண்டும் என்பது நிபந்தனை. பரிசு ரூபாய் பத்து!

இந்தப் பரிசுத் திட்டத்தில் வெற்றி பெற்றார் ஒருவர். 'சோதனை' என்ற கதையை எழுதி, பரிசைத் தட்டிக் கொண்டுபோன அந்தக் கதாசிரியர்தான் ஆதிகுடி. கி. ராமச்சந்திரன் என்பவர்; விளங்கும்படிச் சொன்னால், இன்று 'ஜெமினி' கதை இலாகாவில் ஒருவராக இருக்கும் கி. ராமச்சந்திரன் என்னும் கி. ரா.. மற்ற போட்டித் திட்டங்களில் யார் யார் பரிசு பெற்றார்கள், போட்டி நடந்ததா முடிந்ததா என்பதெல்லாம் மணிக்கொடியாளர் களுக்கே தெரியாத விஷயங்கள்.

மணிக்கொடியின் பொறுப்பாளர்கள் என்னென் னவோ வித்தைகள் செய்தும் பத்திரிகையின் நிலைமை, அதாவது ஜீவாதாரமான நிதி நிலைமை சரிப்பட்டு வரவே

யில்லை. சிலேஷ்ம நாடிதான் உயர்ந்து துடித்து, அந்திம தசையின் கரகரப்போடு இயங்கிக் கொண்டிருந்தது. எனவே மணிக்கொடியைத் தொடங்கி நடத்திய அதன் ஆசிரியரும் நிர்வாகஸ்தருமான கே. சீனிவாசன் 'பாம்பே ஸ்டாண்டர்டு' பத்திரிகைக்கு ஆசிரியராகப் புறப்பட்டுப் போனார்; டி. எஸ். சொக்கலிங்கம் 'தினமணி'க்கு ஆசிரியரானார்; அந்தத் தத்தாத் ரேயரில் ஒருவரான வ. ரா. சிறிது காலம் 'சுதந்திரச் சங்'கோடு தொடர்பு கொண்டிருந்து விட்டு, பின்னால் கொழும்பு 'வீரகேசரி' பத்திரிகைக்கு உதவியாசிரியராகச் சென்றார்.

மணிக்கொடியுடன் தொடர்பு கொண்டிருந்தவர்கள் எல்லோரும் இப்படித் திசை காவலர்களைப் போலப் பிரிந்து சென்றாலும், மணிக்கொடி பத்திரிகை மட்டும் நிற்கவில்லை; புதுமைப்பித்தன், பி. எஸ். ராமையா முதலியோருக்கு மணிக்கொடி நின்றுவிட்டால் அடுத்தபடி என்ன செய்வது என்பது லகுவில் விடை காண முடியாத மாபெரும் கேள்விக் குறியாகத் தோன்றியது. எனவே அவர்களுக்கு ஆதார ஸ்ருதியாக மணிக்கொடியும், மணிக்கொடிக்கு ஆதார ஸ்ருதி யாக அவர்களும் இருக்க நேர்ந்தது. பி. எஸ். ராமையா, புதுமைப்பித்தன் முதலானோர் பத்திரிகை நிறுத்தப்படுவதை விரும்பவில்லை. தாங்கள் முழுமூச்சுடன் செய்துவரும் இலக்கியப் பணி தடைப்பட்டுப் போய் விடுமே என்ற கரிசனை மட்டுமல்ல; அவர்களுக்கும் ஜீவனோபாயத்துக்கு ஒரு சாதனம் தேவையாயிருந்தது. மணிக்கொடிப் பத்திரிகை தங்களுக்கு ஒரு அமுதசுரபியாக உதவும் என்று நம்பாத அளவுக்கு அவர்கள் புத்திசாலிகளா யிருந்தாலும் மனசுக்குப் பிடித்த ஒரு சேவையைச் செய்வதன் மூலம் திருப்தியோடாவது இருக்கலாமே என்பதுதான் அவர்களது ஆத்ம சமாதானம்.

எனவே சீனிவாசன் பிரிந்து சென்ற பிறகும், மணிக் கொடிப் பத்திரிகையை அவரது பெயராலேயே மணிக் கொடிப் பரம்பரை எழுத்தாளர்கள் நடத்தத் துணிந்தார் கள். அவர்கள் பத்திரிகையை எப்படி நடத்தினர்கள் என்ற விஷயத்தை புதுமைப்பித்தன் என்னிடம் ஒருநாள் ரசமாகச் சொன்னார்:

"மணிக்கொடிப் பத்திரிகை எங்கள் ராச்சியத்துக்கு வந்தது. வரும்போது அச்சடிக்கிறவனுக்குக் கொடுபட வேண்டிய பாக்கி பதினெட்டே முக்கால் ரூபாய். வர வேண்டிய பணமும் அதிகம் ஒன்றுமில்லை. ஒழுங்காக வருவது மில்லை. பசி, பட்டினி என்பவை பிரச்னைகள் அல்ல; பழகிப் போன விவகாரம். இந்தச் சமயத்தில் கி. ரா. வும் எங்களோடு வந்து சேர்ந்து இலக்கிய சேவைக்குத் துணிந்து விட்டார். பிரஸ்காரனே பணத்துக்கு நெருக்குவான். ஆபீஸ் நாற்காலி, மேசை அத்தனையும் வாடகைச் சரக்கு; வாடகை என்பது பெயரளவில்; நடைமுறையில் அனுபோக பாத்தியதை கொண்டாடுவதுதான் எங்களால் முடிந்த காரியம். நாங்களோ 'பத்திரிகை அச்சாகிப் போனால்தான் பணம் புரளும்' என்று பிரஸ்காரனை மிரட்டுவோம். அச்சுசடித்துக் கொடுப்பான். என்றைக்காவது எங்கிருந்தாவது ஒரு நாணயஸ்தனான ஏஜண்டோ அல்லது அப்பாவிச் சந்தாதாரரோ மூன்று அல்லது நாலு ரூபாய் மணியார்டர் அனுப்பி விடுவான். மணியார்டர் வந்துவிட்டால் உடனே நாங்கள் எல்லாம் குபேரப் பிரபுக்கள்தான். நேரே ராம கிருஷ்ணா லஞ்ச் ஹோமுக்குப் போவோம்; திரும்பிவந்து இலக்கிய சேவையில் ஈடுபடுவோம். மணியார்டர் பியூன் வராத நாட்களில் இன்னொரு நண்பரை எதிர்பார்ப்போம். மணிக்கொடியில் எழுதி வந்தவர்களில் சிதம்பர சுப்பிரமணியன் வேறு இடத்தில் வேலை பார்த்து மாதா மாதம் சம்பளம் வாங்கும் ஆசாமி. அவர் வந்தால் ஏதாவது காசு புரளும்; காப்பி உண்டு; சாப்பாடு உண்டு. ஒரு சமயம் நானும் ராமையாவும் இந்தத் தொழிலை விட்டுவிட்டு பெப்பர்மிண்ட் விற்கலாமா, பீடி விற்கலாமா என்றுகூட யோசித்ததுண்டு...."

மணிக்கொடிப் பத்திரிகை புதுமைப்பித்தன், பி. எஸ். ராமையா முதலியோரின் ஆளுகைக்கு வந்த பின்னர் அதன் பழைய விஸ்வரூபம் குறுகி, கைக்கு வசதியான வாமன ரூபம் பெற்றது. அதுமட்டுமல்லாமல் அரசியல் விஷயங்கள், பொருளாதாரக் கட்டுரைகள் மற்றும் பலவித விஷயங்

களைச் சுமந்துவந்த மணிக்கொடி முழுக்க முழுக்க சிறு கதைப் பத்திரிகையாகவே மாறி விட்டது. மணிக்கொடி அரசியல் - இலக்கியப் பத்திரிகையாக இருந்த காலத்திலேயே பிச்சமூர்த்தி, கு. ப. ரா., சிட்டி, சி. சு. செல்லப்பா, இளங் கோவன் முதலிய எழுத்தாளர்கள் அதில் எழுத ஆரம்பித்தார் கள். பின்னர் கதைப் பத்திரிகையாக மாறி மாதமிருமுறை வெளி வந்த காலத்தில் சிதம்பர சுப்பிரமணியன், க. நா. சுப்பிரமணியன், பி. எம். கண்ணன், 'மௌனி' முதலிய எழுத் தாளர்களும் மணிக்கொடியின் குடும்பத்தார் ஆனுர்கள்.

ஊக்கமும் உற்சாகமும் உயிர்வாழும் போராட்டமும்தான் மணிக்கொடிப் பத்திரிகை நடப்பதற்கு ஏதுவாயிருந்தன. ஆனுல் வெறுங்கை முழம் போடுமா? எனவே கே. சீனிவாசன் பிரிந்து போன காலத்திலேயே நின்று போகவிருந்த மணிக் கொடி அந்தக் கண்டத்தைத் தப்பிப் பிழைத்தாலும், 1936-ம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் திடீரென்று நின்று போய்விட்டது. மணிக்கொடிப் பத்திரிகை நின்றுபோனவுடன் அதனுேடு சம்பந் தப்பட்டவர்களுக்கு ஜீவனுேபாய மார்க்கத்தைப் பற்றியதர்ம விசார நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அந்தச் சமயத்தில் கொழும்பு 'வீரகேசரி' என்னும் தினசரிப் பத்திரிகை அதிபரான செட்டி யார் ஒருவர் சென்னைக்கு வந்தார். வீரகேசரியில் ஏற்கெனவே வ. ரா. வேலை பார்த்து வந்தார். சென்னைக்கு வந்த செட் டியார் வ. ரா. வோடு சம்பந்தப்பட்டிருந்த எழுத்தாளர்கள் சிலரைத் தமது பத்திரிகைக்கு உதவியாசிரியர்களாகச் சேர்த்துக் கூட்டிப்போக எண்ணினுர். இப்படி கொழும்பி லிருந்து செட்டியார் ஆசிரியர்களைச் சேர்க்க வரும் வைபவத் தைப் பற்றிப் புதுமைப்பித்தன் ஒரு தடவை என்னிடம் கூறினுர்: "செட்டியார் ஆசிரியர்களைச் சேர்ப்பதில்லை. ஆள் பிடிக்கத்தான் வந்திருந்தார். தேயிலைத் தோட்டத்துக்குக் கூலியாட்களைச் சேர்க்க, கங்காணி வந்து ஆள் பிடித்துக் கொண்டுபோகிறுனே, அந்த மாதிரிதான்!"

எனவே புதுமைப்பித்தன் வீரகேசரிக்குப் போக விரும்ப வில்லை. இருந்தாலும் பிழைப்புக்கு என்ன வழி என்று தெரியா

மல் தவித்துக் கொண்டிருந்த புதுமைப்பித்தனுக்கு வீரகேசரி செட்டியாரின் வரவு தேவதாப் பிரசன்னம் மாதிரியே பட்டிருக்க வேண்டும். புதுமைப்பித்தன் கொழும்பு செல்லத் தீர்மானித்தார். ஆனால் அதற்கு முன்பு டி. எஸ். சொக்கலிங்கத்தைக் கண்டு தமது முடிவைக் கூறி விடை பெற்றுக் கொள்ள போனார். போன இடத்தில் புதுமைப்பித்தனின் வாழ்க்கையிலேயே ஒரு புதிய மாறுதல் காத்திருந்தது.

''நான் கொழும்புக்குப் போகப் போறேன். வீரகேசரிக்கு!'' என்றார் புதுமைப்பித்தன்.

''*போறதுன்னே தீர்மானிச்சாச்சா?*'' என்றார் சொக்கலிங்கம்.

''வேறெ வழி?''

''*பிழைப்புக்குத்தானே? 'தினமணி' யில் சேர்கிறீர்களா?*''

புதுமைப்பித்தன் யோசித்துப் பார்த்தார். 'கொழும்புக்குப் போவானேன்? ஆளும் புதுசு; இடமும் புதுசு' என்று நினைத்தார். அவ்வளவுதான். சொக்கலிங்கம் ஆசிரியராக இருந்து நடத்திவந்த தினமணியில் புதுமைப்பித்தன் உதவியாசிரியராகச் சேர்ந்து விட்டார். 1936-ம் வருஷத்தில் தினமணி ஸ்தாபனத்தில் வேலைக்கமர்ந்த புதுமைப்பித்தன் 1943-ம் வருஷத்தின் இறுதியில், சொக்கலிங்கம் தினமணியை விட்டு விலகியபோது அவருடன் கூட விலகிய ஆசிரியர் குழாத்தில் தாமும் ஒருவராக விளங்கினார்.

அத்தியாயம்—9

## புனர் ஜென்மமும், புனர் மரணமும்

1936-ம் வருஷத்தின் இடையிலே நின்றுபோன மணிக்கொடிப் பத்திரிகை ஒரேயடியாக நின்று போய்விடவில்லை. பி. எஸ். ராமையாவும், கி. ரா. வும் அதை எப்படியும் மீண்டும் உயிர்த்தெழச் செய்ய வேண்டும் என வைராக்கியம் கொண்டார்கள். இந்த வைராக்கிய சித்தத்தின் வெற்றியாக, மணிக்கொடி மீண்டும் அதே வருஷம் செப்டம்பர் மாதத்தில் ஆரம்பமாயிற்று.

எண்ணற்ற கஷ்டங்களுக்கிடையே வளர்ந்து மறைந்த மணிக்கொடியை மீண்டும் பழைய குசேலப் பிறவியாகத் தோற்றுவிக்க விரும்பவில்லை. அதற்கு வழியும் இல்லை. எனவே மணிக்கொடி என்ற பத்திரிகையை ஒரு ஸ்தாபனமாக்கி, அந்த ஸ்தாபனத்தின் வெளியீடாக மணிக்கொடிப் பத்திரிகையையும், இலக்கிய, அரசியல் புத்தகங்களையும் வெளியிடுவது என முடிவு செய்து, அதற்கான முயற்சியில் சுமார் ஒரு வருஷ காலம் பி. எஸ். ராமையாவும் அவரது சகாக்களும் பாடுபட்டு வந்தார்கள். அந்த முயற்சி ஒரு மட்டும் பலித்தது. அதன் பலனாக, 'நவயுகப் பிரசுராலயம்' என்னும் லிமிட்டெட் ஸ்தாபனம் உருப்பெற்றது. 20, 000 ரூபாய் மூலதனத்துடன் தொடங்க எண்ணிய அந்த ஸ்தாபனம் பல பேருடைய ஒத்துழைப்பின்மூலம் உருவாயிற்று. இது நடந்தது 1937-ம் வருஷத் தொடக்கத்தில்.

நவயுகப் பிரசுராலயத்தின் நிர்வாகஸ்தர்கள் பத்திரிகைத் தொழிலில் நல்ல அனுபவம் பெற்றவர்கள். பாம்பே ஸ்டாண்டர்டில் இருந்த மணிக்கொடி சீனிவாசன், அன்று 'இண்டியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகை ஆசிரியராக இருந்த கே. சந்தானம், இண்டியன் எக்ஸ்பிரஸின் அந்தக்கால மானேஜரான எஸ். வி. சாமி, அன்றைய தினமணியின் உதவியாசிரியராகவிருந்த இன்றைய தினமணி ஆசிரியர் ஆ. நா. சிவராமன், வத்தலகுண்டு பி. எஸ். சங்கரன், பி. எஸ். ராமையா ஆகியோர் ஸ்தாபனத்தின் ஆரம்பகால டைரக்டர்கள். தினமணி ஆசிரியராக இருந்த டி. எஸ் சொக்கலிங்கம் அதன் மானேஜிங் டைரக்டர்; பி. எஸ். ராமையா பிரசுராலயத்தின் நிர்வாக ஆசிரியர்.

இந்தப் புதிய அமைப்பின்கீழ் மணிக்கொடி மீண்டும் வெளிவர ஆரம்பித்தது. மணிக்கொடியில் எழுதி வந்த எழுத்தாளர்களே மீண்டும் எழுதினார்கள்; புதுமைப்பித்தனும் எழுதினார். 'பக்த குசேலா,' 'நாசகாரக் கும்பல்' முதலிய அருமையான நாடகம், கதையெல்லாம் அந்தச் சமயத்தில் எழுதியவைதாம். நவயுகப் பிரசுராலயம் மணிக்கொடியை வெளியிட்டதோடு, புத்தக வெளியீட்டையும் தொடங்கி வைத்தது. எட்டணா விலையில் மலிவுப் பிரசுரங்களை வெளியிடத் தொடங்கியது. நவயுகப் பிரசுராலயத்தின் முதல் வெளியீடாக ஆ. நா. சிவராமனின் 'மாகாண சுயாட்சி' வெளிவந்தது. அதன்பின் பல புத்தகங்கள் வெளிவந்தன; கிராக்கியையும் சம்பாதித்தன.

நவயுகப் பிரசுராலயம் வேலை தொடங்கி நன்கு நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது, இன்று திருநெல்வேலியில் முனிசிபல் சேர்மனாக இருக்கும் எழுத்தாளர் ப. ராமஸ்வாமி (ப. ரா.) சென்னை வந்து சேர்ந்தார். ப. ராமஸ்வாமி சென்னைக்கு வந்தபின், கம்பெனியின் நிர்வாக டைரக்டர் சொக்கலிங்கம் ப. ரா. வை நவயுகப் பிரசுராலயத்தின் பதிப்பாசிரியராக நியமனம் செய்தார். மணிக்கொடியின் ஆசிரியராக இருந்த பி. எஸ். ராமையாவுக்கும், ப. ரா. வுக்கும் ஒத்துக் கொள்ளவில்லை. இதன் காரணமாக ப. ரா. சொக்கலிங்கம் இருவர்மீதும் ராமையாவுக்குக் கசப்பு

ஏற்பட்டது. அதன் விளைவாக சொக்கலிங்கம் தாம் கம்பெனியின் நிர்வாக டைரக்டர் என்ற ஹோதாவில் ராமையாவை ஆசிரியர் பதவியை விட்டு நீக்கி விட்டார்.

மணிக்கொடிப் பத்திரிகை மணிக்கொடி பரம்பரை எழுத்தாளர்களின் ஆதிக்கத்திலிருந்து, ப. ரா. வின் ஆட்சிக்குக் கை மாறியது; ப. ரா. வின் ஆதிக்கத்தில் மணிக்கொடி சில வருஷ காலம் நடந்தது; பிறகு நிரந்தரமாக நின்று போய் விட்டது. இப்படி நின்று போன மணிக்கொடியை சமீபத்தில் பி. எஸ் ராமையா குழிப்பிள்ளையாகத் தோண்டி எடுத்துப் பார்த்துவிட்டு சில மாத காலத்தில் பழையபடியும் புதைத்து மூடிவிட்டார்.

மணிக்கொடியைப் பற்றிப் புதுமைப்பித்தன் தமது 'ஆண்மை' என்ற கதைத் தொகுதியின் முன்னுரையில் பின்வருமாறு ரசமாகக் குறிப்பிட்டிருக்கிறார்:

''மணிக்கொடிப் பத்திரிகையானது வெளிவரும் முன்பு எத்தனையோ பத்திரிகைகள் இருக்கத்தான் செய்தன. ஆனால் புதிய பரிசீலனைகளுக்கு இடங்கொடுக்கும், உத்சாக மூட்டும், வரவேற்கும் பத்திரிகைகள் அதற்கு முன்போ பின்போ கிடையாது. அந்தப் பத்திரிகையை ஆரம்பித்த லட்சியவாதியான கே. ஸ்ரீனிவாசன் அவருடைய 'அந்தக் குற்றத்திற்காக' (?) பாஷைப் பிரஷ்டம் செய்யப்பட்டவர் போல, வேற்று மாகாணத்திலே, வேற்று பாஷையிலே பத்திரிகைத் தொழில் நடத்தும் பாக்கியம் கிடைக்கப் பெற்று வாழ்ந்து வருகிறார். காலத்துக்கேற்றபடி உடுக்கடிக்கும் கோட்டான்களும், ஆவேசத்தோடு சீறுவதுபோல் 'பம்மாத்து' செய்து கொண்டு இருக்கும் கிழட்டுப் புலிகளும், பாஷையையும் பாஷையின் வளர்ச்சியையும் பாழ்படுத்திக் கொண்டிருக்கும்படி அனுமதித்து வரும் தமிழரின் பாஷாபிமானத்தைக் கோயில் கட்டித்தான் கும்பிட வேண்டும். அன்று மறுமலர்ச்சி என்ற ஒரு வார்த்தை புதிய வேகமும் பொருளும் கொண்டது. அதைச் சிலர் வரவேற்றார்கள்; பலர் கேலி செய்தார்கள். பெரும்பான்மையோர் அதைப் பற்றி அறியாதிருந்தார்கள். மணிக்கொடி பொருளாதார நிர்ப்பந்தம் என்ற நபரால் சிசுஹத்தி செய்யப்பட்டு அசிரத்தை

என்ற முனிசிபல் குப்பைத் தொட்டியில் எறியப்பட்டது. மூச்சுப் பேச்சற்றுக் கிடந்த அந்தக் குழந்தையை எடுத்து வந்து, ஆசை என்ற ஒரே அமுதூட்டி வளர்ப்பதற்காக நானும் பி. எஸ். ராமையா என்ற நண்பரும், எங்களைப் போலவே உத்சாகத்தை மட்டும் மூலதனமாகக் கொண்ட இன்னும் சில சக எழுத்தாளர்களும் சேர்ந்து நடத்தி வந்தோம். அது இரண்டு மூன்று வருஷங்களில் கன்னிப் பருவம் எய்திக் கண்ணை மயக்கும் லாவண்யத்தைப் பெறும் சமயத்தில் அதைக் கைப்பிடித்து இழுத்துக்கொண்டு ஓடும் நண்பரைப் பெற்றோம். அவர் அவளை ஒருவருக்கு விற்றார். விற்றவுடனே அவளுக்கு ஜீவன்முக்தி இந்தக் கலிகாலத்தில் கிடைத்தது. இதுதான் மணிக்கொடியின் கதை. இதுதான் தமிழில் புதிய பரிசீலனைகள் செய்யவேண்டும் என்று கோட்டை கட்டியவர்களின் ஆசையின் கதை.'' (1947)

மணிக்கொடியை விலைக்கு வாங்கிய நவயுகப் பிரசுராலயம் தன் பெயருக்கொப்ப, புதுமுறை இலக்கிய முயற்சிகளைப் புத்தக உருவில் வெளியிட்டு வந்தது. அப்படி வெளியிட்ட புத்தகங்களில் இன்றைய தலைமுறையின் சிறந்த சிறுகதை இலக்கியமாகவும், தமிழ் இலக்கிய வளர்ச்சியிலேயே ஒரு அசுர சாதனையாகவும் விளங்கும் 'புதுமைப்பித்தன் கதைகள்' என்ற நூலும் ஒன்று. புதுமைப்பித்தனின் சிருஷ்டிகள் முதன் முதலில் புத்தக உருவம் பெற்றது இந்தத் தொகுதியில்தான்; அது மட்டுமல்ல. தமிழ் நாட்டின் சரித்திரத்திலேயே ஆசிரியர் பெயரையே நூலின் தலைப்பாகக் கொண்டு வெளியிடும் பாக்கியத்தையும் துணிவையும் பெற்ற முதல் கதாசிரியரும் புதுமைப்பித்தன்தான். இந்தத் தொகுதியைத் தொடர்ந்து புதுமைப்பித்தனின் 'உலகத்துச் சிறுகதைகள்,' 'நாசகாரக் கும்பல்' 'பக்த குசேலா,' 'ஆறு கதைகள்,' 'பேஸிஸ்ட் ஜடாமுனி', 'கப்சிப் தர்பார்' முதலிய நூல்களையெல்லாம் நவயுகப்பிரசுராலயம் வெளியிட்டது. இதனால் புதுமைப்பித்தனுக்கும் நவயுகப் பிரசுராலயத்துக்கும் தமிழ் வாசகரிடையே பிரபலமும் பேரும் கிட்டி வந்தன.

அத்தியாயம்—10

## தினமணியும், தினசரியும்

சொக்கலிங்கத்தின் விருப்பப்படியே புதுமைப்பித்தன் தினமணியில் உதவி ஆசிரியராகச் சேர்ந்தார். தினமணியில் சேரும்போது புதுமைப்பித்தனுக்கு மிகவும் குறைந்த சம்பளம்; விலகும் காலத்திலும் அவரது வருமானம் அப்படியொன்றும் அதிகமில்லை. தேவைக்குக் காணாத சம்பளம். எனவே புதுமைப்பித்தன் தினமணியில் ஸ்திரமான ஸ்தானத்தைப் பெற்றிருந்தார் என்பதைத் தவிர குறிப்பிடத்தக்க வாழ்க்கை வசதிகள் எதுவும் அவருக்குக் கிட்டவில்லை. மணிக்கொடி சேவையின்போது 'அடுத்த வேளைச் சாப்பாடு எங்கே?' என்று தெரியாத நிலையிலிருந்த புதுமைப்பித்தன், தினமணி சேவையின்போது 'குறை மாதத்தையும் எப்படிப் போக்குவது' என்ற நிலையில்தான் இருந்தார். செலவுக்குக் கட்டாத வருவாய், அசுரப் பசி கொண்ட தினசரிப் பத்திரிகையின் நித்திய கருமமான தர்ஜுமாத் தொழில் இரண்டும் புதுமைப்பித்தனின் சிருஷ்டி சக்தியைப் பேரளவில் கட்டிப் போட்டிருந்தன என்றே சொல்ல வேண்டும். மணிக்கொடிக் காலத்தில் அசுரவேகத்தில் இலக்கியம் படைத்த புதுமைப்பித்தனின் பேனா, 'அஸோஸியேட்டெட் பிரஸ்,' 'ராய்ட்டர்' தந்திகளைத் தமிழாக்கும் காரியத்தில் சிக்கித் தவித்தது. இருந்தாலும், தினமணிப் பத்திரிகையின் வருஷாந்திர மலர்கள் அனைத்தும் புதுமைப்பித்தனின் மேற்பார்வையில் புதுமைப்பித்தனின் சிருஷ்டிகளையும் தாங்கி வெளி வந்தன 'நினைவுப்பாதை'

போன்ற உயர்ந்த கதைகள் அக்காலத்துப் படைப்புக்கள் தாம்.

தினமணியின் மதிப்புரைப் பகுதியில் புதுமைப்பித்தனின் நக்கீர அவதாரத்தை வாசகர்கள் காண முடிந்தது; புத்தகாசிரியர்கள் கண்டு, 'அஞ்சுவதஞ்சி' அடங்க முடிந்தது. இந்த அவதாரத்தின் விஸ்வரூப தரிசனத்தை, 'ரசமட்டம்' என்ற புனைபெயரில், புதுமைப்பித்தன் 'கல்கி' ஆசிரியரோடு நடத்திய கட்டுரைப் போரின்போது வாசகர்கள் காண முடிந்தது. 'ரசமட்ட'த்தின் விமர்சனம் தமிழ்நாட்டு வாசகர்களிடையே பெரும் பரபரப்பை உண்டாக்கி விட்டது.

1943-ம் வருஷத்தில் தினமணி ஆசிரியர் சொக்கலிங்கத்துக்கும் தினமணி நிர்வாகஸ்தர்களுக்கும் நடந்த உரிமைப் போராட்டத்தின் பலனாக, தினமணி ஆசிரியரும் ஆசிரியர் குழாத்தில் பலரும் தினமணியை விட்டு வெளியேறிய ராஜிநாமாக் கதை பிரசித்த சம்பவம். சொக்கலிங்கத்திடம் பெரு மதிப்பு வைத்திருந்த புதுமைப்பித்தனும் தமது ஆசிரியருடனேயே வெளியேறினார்.

1944-ம் வருஷத் தொடக்கத்தில் சொக்கலிங்கத்தின் 'தினசரி' பத்திரிகை ஆரம்பமாயிற்று; புதுமைப்பித்தனின் வாழ்க்கையிலும் மற்றொரு புதிய கட்டம் தொடங்கியது. பற்றாக் குறைச் சம்பளம் பெற்று வந்த புதுமைப்பித்தன் தினசரியில் நியாயச் சம்பளம் பெற ஆரம்பித்தார். உரிமைப் போராட்டத்தின் காரணமாக வெளிவந்த பத்திரிகாசிரியர்களின் கூட்டு ஸ்தாபனம்போல் விளங்கி வந்த தினசரி, தொழிலாளர்களுக்கு நியாயச் சம்பளம் கொடுக்க முன்வந்தது. ஆனால் மணிக்கொடியில் வரும்படியே இல்லாது கதைகள் எழுதி வந்த காலத்தில், புதுமைப்பித்தனுக்கு ஆத்ம திருப்தியாவது இருந்தது; தினசரியில் தேவைக்குப் போதுமான வருவாய் இருந்த போதிலும் அவருக்கு ஆத்ம திருப்தி அற்றுப் போய்விட்டது.

அதனால்தான் அவர் தினசயிலிருந்தும் விலகினார். தினசரியிலிருந்து விலகிய பின்னர் சிலகாலம் கழித்து

சினிமாத்துறையில் புகுந்தார். பத்து வருஷ காலத்துக்கு மேலாக, பத்திரிகைத் தொழிலில் பழகிய பின்னர், நல்ல வருமானமும் நிரந்தர ஸ்தானமும் உள்ள பதவி பெற்ற பின்னர், அதை ஏன் உதறிவிட்டு வெளியேறினுர் என்பது அவரது நண்பர்கள் பலருக்குமே ஆச்சரியமாய்த் தானிருந்தது. அதைப்பற்றி அவரிடம் யாராவது கேட்டால் ''நானும் பத்து வருஷமாய்ப் பத்திரிகைத் தொழிலில் செத்தேன். ஒன்றும் மிச்சத்தைக் காணும். எனக்கு ஒரு பெண்டாட்டி இருக்கிருள்; பிள்ளை இருக்கிறது. சினிமாத் துறையில் இறங்கினுல் ஏதாவது மிச்சம் பார்க்கலாம் என்று விலகினேன்'' என்று சொல்வார்.

இது பொய்யல்ல; உண்மைதான். புதுமைப்பித்தனேடு உழைத்த பல எழுத்தாளர்களும் சினிமாத் துறையில் புகுந்து நல்ல முறையில் சம்பாத்தியம் செய்து கொண்டிருந்தார்கள். 'இளங்கோவன்' பிரபல வசனகர்த்தா என்று பெயரெடுத்து விட்டார்; பி. எஸ். ராமையா வசனகர்த்தாவாக மட்டுமல்லா மல், சினிமா டைரக்டராகவும் மாறிவிட்டார்; கி. ரா. ஜெமினி கதை இலாகாவில் சேர்ந்து விட்டார். 'என்னிடம் திறமை இருக்கிறது. சந்தர்ப்பத்துக்காகக் காத்துக் கொண்டிருப் பானேன்? சந்தர்ப்பத்தை உண்டாக்கிக் கொள்வதே நல்லது' என்று புதுமைப்பித்தன் எண்ணியிருக்கலாம். மேலும், அவரது மனைவி கமலாம்பாளும் 'கணவன் நன்ருகச் சம்பாதிக்க வேண்டும்; இத்தனை காலமாகப் பட்ட கஷ்டத்துக்கு இனி மேலாவது சுகம் பிறக்க வேண்டும்' என்று கருதியிருந்தாலும், அதுவும் லௌகிக சுபாவத்துக்குப் புறம்பானதல்ல. எனவே புதுமைப்பித்தன் கூறிவந்த காரணம் உண்மையாக இருக்க முடியும். ஆனுல் அது முழு உண்மை அல்ல.

தினமணியில் சேர்ந்த காலத்திலிருந்து புதுமைப்பித்த னுக்குச் சொக்கலிங்கம் பிள்ளையிடம் பெருமதிப்பு. அவருக் கும் இவரிடம் நிறைந்த ஈடுபாடு. புதுமைப்பித்தனின் மேதையை அவர் நன்கு உணர்ந்து, அவருக்குத் தம் மனசில் மட்டுமல்லாமல், எழுத்துச் சுதந்திரத்திலும் அவருக்கு நல்ல ஸ்தானமே கொடுத்திருந்தார். ஆசிரியருக்கும் உதவியாசிரி

யருக்கும் இருந்த ஒட்டுறவு குடும்ப ஒட்டுறவு போன்றிருந்தது. இரு வீட்டுப் பெண்களும் கூட அப்படித்தான் பழகினார்கள். புதுமைப்பித்தனின் மனைவி கமலாம்பாள் சொக்கலிங்கம் பிள்ளையை 'அப்பா' என்று அழைப்பது வழக்கம். அத்தனை சௌஜன்யம். அதனால்தான் கொள்கை வேறுபாடு, உரிமைப் போர் முதலிய காரணங்களால் சொக்கலிங்கம் பிள்ளை தின மணியை விட்டு விலக முனைந்தபோது, புதுமைப்பித்தன் கச்சையை வரிந்து கட்டிக்கொண்டு முன்னணியில் நின்றார். 'ஆசிரியருக்காக எதுவும் செய்யலாம். அது கடமை' என்று தான் புதுமைப்பித்தன் கருதினார்; வெளியேறினார்.

தமிழில் இரண்டு பழமொழிகள்: 'பழகப் பழகப் பாலும் புளிக்கும்'; 'மாங்காய் புளித்ததோ, வாய் புளித்ததோ'. இரண் டையும் ஒட்டவைத்து விசாரித்தால், ஒரு உண்மை புலப்படும். பால் புளிப்பதாகத் தோன்றுவதற்குப் பழக்கம்தான் காரணம் என்ற நியதி இல்லை; நாக்கும் புளித்திருக்கலாம். புதுமைப் பித்தன் தினசரியில் சேர்ந்த பிறகு, அவருக்கும் சொக்கலிங்கத் துக்கும் இடையில் நிலவிய இனிமை புளிப்புக் கண்டுவிட்டது. புளிப்புக் கண்டதற்குக் காரணம் பழக்க தோஷம் இல்லையெனக் கொண்டாலும், யாருடைய உணர்ச்சியில் புளிப்புத் தட்டியிருந் தது என்பதை அறிவதோ ஆராய்வதோ ரசவிகாரத்துக்குரிய விஷயம்; வேண்டாத விஷயம்.

தினசரியின் துணையாசிரியர் ரா. வேங்கடராஜுலு நாயுடு வுக்கும் புதுமைப்பித்தனுக்கும் சௌஜன்யத் தொடர்பில்லை. புதுமைப்பித்தனோடு எந்தவித சுமுக பாவம் கொண்டிருந் தாரோ, அதே சுமுக பாவத்தோடு சொக்கலிங்கம் நாயுடு வோடும் பழகி வந்தார். இந்த நிலையில் புதுமைப்பித்த னுக்கும் ஆசிரியர் சொக்கலிங்கத்துக்கும் இடையே நிலவிய உறவு கிரீச்சிட்டது. சாதாரணமாக இரண்டு நபர்களுக் கிடையில் நிலவும் சுமுக பாவத்தைக் கரகரக்கச் செய்வது மூன்றாவது சக்தியாகவே இருப்பது உலக வழக்கு. புதுமைக் பித்தனின் வாழ்க்கையில் நான்காவது சக்தியொன்றும் குறுக் கிட்டது.

சரித்திரக் கதைகளை எழுதும் ஒரு கதாசிரியர்தான் அந்த நான்காவது நபர். சிலர் ஏதாவது பிரதிபலனை உத்தேசித்துத் தான் இரு நபர்களுக்குக்கு இடையிலுள்ள தொடர்பை முறிக்க வினை செய்வார்கள்; சிலர் எந்த விதப் பிரதிபலனையும் எதிர் பாராமல், இயாகோவைப்போல் அந்த முறிவில் ஆனந்தம் காணும் குணவிகாரப் பிறவிகளாகவும் இருக்கக் கூடும். சம்பந்தப்பட்ட கதாசிரியர் எந்த ரகப்பிறவி யென்பதை ஆராயத் தேவையில்லை. இந்த நான்காவது நபரின் தலையீட்டால் சொக்கலிங்கத்துக்கும் புதுமைப்பித்தனுக்கும் இடையில் நிலவி வந்த இனிமை திடீரென்று திரைதட்டிப் புளித்து விட்டது. சந்தேகத்தைவிட கொடிய விஷம் வேறு கிடையாது. அது படுவதும் தெரியாது; உள்ளத்தில் பரவுவதும் தெரியாது. புதுமைப்பித்தனுக்கும் சொக்கலிங்கத்துக்கும் மனசில் கறை யுண்டாக்கிய சந்தேகம் விஷய விளக்கத்திற்கோ தெளி விற்கோ கட்டுப்பட்டு இறங்காத அளவுக்குப் பரவி நீலம் பாரித்து விட்டது.

இந்தமாதிரிச் சந்தர்ப்பத்தில் தினசரியில் ஒரு கதாசிரியர், இலக்கிய வெளியீடுகளைப்பற்றிச் சர்ச்சை செய்து ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அந்தக் கட்டுரையின் மூலமாக அந்தக் கதாசிரியர் சொக்கலிங்கத்துக்கு மிகவும் வேண்டிய ஒரு பதிப் பகத்தாரை, ஒரு விதத்தில் சொக்கலிங்கத்தையே, தாக்கி எழுதியிருந்தார். அந்தக் கட்டுரை புதுமைப்பித்தனின் மேற் பார்வைக்கு உட்பட்டு வெளிவந்தது. இந்த விஷயம் சொக்க லிங்கத்துக்குத் தெரிய வந்தது. உடனே அவர் புதுமைப் பித்தனைக் கூப்பிட்டு விசாரித்தார். பிறகு, "இதற்கு ஒரு மறுப்புக் கட்டுரை எழுதி வெளியிடுங்கள்" என்றும் உத்தர விட்டார். புதுமைப்பித்தனும் எழுதி வெளியிட்டார். ஆனால் அந்த மறுப்பு, ஆசிரியருக்குத் திருப்தி அளிக்கவில்லை. புதுமைப்பித்தனை மீண்டும் அழைத்து, இன்னும் காரசாரமாக எழுதும்படிச் சொன்னார். "இதற்கு மேல் எழுத விஷயம் இல்லை" என்றார் புதுமைப்பித்தன்.

"சரிதான். தினமணியில் 'ரசமட்டம்' என்று எழுதும் போது மட்டும் கை வலிக்கவில்லை. இதற்கு மட்டும் வலிக் கிறதோ?" என்றார் ஆசிரியர்.

‘‘உங்களிடம் வேலை பார்த்தே என் கை வலித்துப் போய்விட்டது. நான் வருகிறேன்!’’ என்று வெளியே வந்தார் புதுமைப்பித்தன்.

‘தினமணி’யை விட்டு ராஜிநாமா செய்து வந்த புதுமைப் பித்தனின் ‘தினசரி’ ராஜிநாமாக் கதை இப்படித்தான் முடிந் தது. ஆனால் எப்படி ஊழியனிலிருந்து விலகியபோது அதற் குரிய உண்மைக் காரணத்தை அவர் பொதுவாக யாரிடமும் கூறுவதில்லையோ, அதுபோலவே தினசரியிலிருந்து வெளி யேறியதன் உண்மைக் காரணத்தையும் அவர் பொதுவாக யாரிடமும் சொல்லியதில்லை.

புதுமைப்பித்தனின் பத்திரிகைச் சேவை இத்துடன் முடிவு கண்டது.

# விடுதலைப் பத்திரம்

திருநெல்வேலியில், 1933-ம் வருஷத்தில், தந்தையிடம் ஏற்பட்ட கசப்பின் காரணமாக, பத்திரிகைத் தொழிலையே லட்சியமாகக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறினார் புதுமைப்பித்தன்; அதே புதுமைப்பித்தன் இடைப்பட்ட பதினேரு வருஷ காலத்தில் தமது லட்சியமான பத்திரிகைத் தொழிலையும் பார்த்து முடித்து, 1944-ம் வருஷம் அதே லட்சியத்தைக் கைவிட்டு, தினசரியிலிருந்து வெளியேறினார். அன்று திருநெல்வேலியை விட்டு வெளியேறிய போதும், அவருக்கு வாழ்வது எப்படி என்பதுதான் பிரச்னை; பதினேரு வருஷங்களுக்குப் பிறகும், கிட்டத் தட்ட நாற்பதாவது வயதிலும் அதே பிரச்னைதான் அவர் முன் மீண்டும் எழுந்து நின்றது. ஆனால், ஒரே ஒரு வித்தியாசம் இருந்தது. அன்று புதுமைப்பித்தன் வெறும் சொ விருத்தாசலம்; தினசரியை விட்டு வெளியேறியபோது புதுமைப்பித்தன் தமிழர்களிடையே தமது எழுத்தின் மூலம் அறிமுகமாகி, புகழ் என்ற மூலதனத்தைச் சம்பாதித்த கதாசிரியர் புதுமைப்பித்தனாக இருந்தார். ஆனால் இந்த மூலதனம் மட்டும் வயிற்றுக்குச் சோறிடுமா? எனவே ஒரு வகையில் புதுமைப்பித்தனின் நிலை நிர்க்கதியான நிலைதான். இருந்தாலும் திருநெல்வேலியை விட்டு வெளியேறிய புதுமைப்பித்தனுக்குத் தாற்காலிக சாந்திக்குக்கூட வழியில்லாமல் இருந்தது; தினசரியை விட்டு வெளியேறிய புதுமைப்பித்தனுக்கு எதிர்காலம் அவ்வளவு தூரம் இருளடித்துப் போகவில்லை. 'தினசரி ராஜிநாமா' என்ற விடுதலைப் பத்திரத்தால் ஏற்பட்ட சிரமத்தை, இன்னொரு விடுதலைப் பத்திரம் பரிகாரம் செய்து குறைத்தது. அது

தான் புதுமைப்பித்தன் தம் தந்தையோடு கொண்டிருந்த வாரிசுத் தொடர்பைப் பொருளாதார ரீதியில் அறுத்துக் கொண்ட விடுதலைப் பத்திரம்.

1943-ம் வருஷம் சென்னை நகரம் ஜப்பானியக் குண்டு வீச்சுக்குப் பயந்து நடுநடுங்கிக் கொண்டிருந்த காலம். சென்னை மக்கள் அனைவரும் பயபீதியால் கிராமாந்திரங் களுக்குக் குடியைக் கிளப்பிக்கொண்டு போக முயன்ற காலம். இந்தக் காலத்தில் புதுமைப்பித்தன் தமது மனைவியை மட்டும் திருநெல்வேலியில் விட்டு வைக்க நினைத்தார். இதனால் அவருக்குத் திருநெல்வேலிப் பய ணம் லபித்தது. திருநெல்வேலியில் அவர் மனைவி குடியிருக்க ஒரு வீடு தேவை. சென்னையில் ஒரு வீடு, திருநெல்வேலியில் ஒரு வீடு என இரண்டு வீடுகளுக்கும் வாடகை கொடுத் துக் கொண்டிருக்கக் கூடிய நிலையில் தமிழ் நாட்டு உத விப் பத்திரிகாசிரியன் பெறும் ஊதியம் இடம் தராது. எனவே புதுமைப்பித்தன் தம் தந்தை சொக்கலிங்கம் பிள்ளையை அணுகினார். தந்தையோ முதல்தர நெஞ் சழுத்தக்கார ஆசாமி. அவருக்குத் திருநெல்வேலியில் மூன்று நான்கு வீடுகள் இருந்தன. ஏதாவது ஒரு வீட் டைக் குடியிருக்கக் கொடுத்திருக்கலாம். ஆனால் மகன் குடியேறினால் எங்கே அதைத் தன் சுவாதீனத்துக்கு உள்ளாக்கி விடுவானோ என்று உள்ளூர அவருக்குப் பயம். எனவே வீடு தர மறுத்தார். ஏற்கெனவே இரு துருவங் களாகத் தந்தையும் மகனும் பிரிந்து சென்றவர்கள். எனவே அந்த இரு துருவங்களும் ஒன்றையொன்று சந்திக்க முனைந்தபோது மோதல்தான் ஏற்பட்டது. புதுமைப்பித்தன் தந்தையோடு சண்டை பிடித்தார். வீடு தர வேண்டும் அல்லது பாகப் பிரிவினை நடந்தாக வேண் டும் என்பதே புதுமைப்பித்தனின் கோரிக்கை. சொக்க லிங்கம் பிள்ளையோ வீடு தர மறுத்தார். இந்தச் சமயத் தில் கமலாம்பாள் அம்பாசமுத்திரத்தில் ஒரு உறவினர் வீட்டில் இருந்தாள். திருநெல்வேலியில் தந்தைக்கும் மக னுக்கும் நடந்த லடாய் கமலாம்பாளுக்குத் தெரியாது.

புதுமைப்பித்தனுக்கோ ஏற்கெனவே தந்தையின் மீது வஞ்சம் தீர்க்க வேண்டும் என்ற எண்ணம். எனவே, 'பாகப் பிரிவினை செய்துதான் ஆகவேண்டும்' என்று ஒற்றைக் காலில் நின்றார். பிதிரார்ஜிதச் சொத்தைத் தவிர, தமது சுய சம்பாத்தியத்தில் ஒத்தைக் காசு விட்டுக் கொடுக்க, சொக்கலிங்கம் பிள்ளை முன்வரவில்லை. புதுமைப் பித்தன் தமது கல்யாணச் சமயத்தில் மனைவியின் சார்பாகக் கொடுத்த பணத்துக்காக வாதாடினார். எதுவும் சொக்கலிங்கம் பிள்ளையை அசைத்து விடவில்லை. இரண்டிலொன்று பாராமல் போவதில்லை என்பது புதுமைப்பித்தனின் வைராக்கியம். எனவே சொக்கலிங்கம் பிள்ளை பிதிரார்ஜிதச் சொத்தை மட்டும் பகிர்ந்து கொடுக்க முன் வந்தார். ஆனால் ஒரு வீட்டைக் கொடுக்கவோ அல்லது ரொக்கமாகப் பணத்தைக் கொடுக்கவோ முன்வரவில்லை. இந்தச் சம்பவத்தின் காரணமாக, புதுமைப்பித்தனுக்கு அவர் முக்கால் அல்லது ஒரு கோட்டை விதைப்பாடு நஞ்சை நிலத்தைச் சாசனம் பண்ணிக் கொடுத்தார். மீதப் பங்குக்கு, புதுமைப்பித்தன் பணமாகக் கேட்டார். தந்தையோ பணம் தரவில்லை. அதற்குப் பதிலாக ஒரு யோசனை சொன்னார்.

''பணம் வேணுமின்னு, எங்கிட்ட இப்போ கிடையாது. வேணுமின்னு, என் புத்தகங்களை (அதாவது அவர் எழுதியுள்ள Indo—European Races என்ற புத்தகத்தை) எடுத்துக்கொள்; வித்துப் பணம் எடுத்துக்கோ'' என்று சாதுரியமாகப் பேசினார் சொக்கலிங்கம் பிள்ளை.

புத்தகம் எழுதுவதுதான் புதுமைப்பித்தனின் தொழிலே தவிர, புத்தகம் விற்பது அவர் விரும்பாத தொழில். அதிலும் தந்தையின் புத்தகத்தைக் கண்டால் அவருக்கு ஒரே வெறுப்பு. அந்த விற்காத மூட்டையை இடம் மாற்றிக் கொள்ளப் புதுமைப்பித்தன் சம்மதிக்கவில்லை.

''உங்க புஸ்தகமாவது விக்கிறதாவது? இந்தத் தலையணையை எவன் வாங்குவான்?'' என்றார் புதுமைப் பித்தன்

கடைசியாக, சொக்கலிங்கம் பிள்ளை தருவதாக ஒப்புக்கொண்ட தொகைக்கு, புதுமைப்பித்தன் கோர்ட்டில் டிகிரி வாங்கித்தான் காரியத்தைச் சாதித்துக்கொள்ள முடிந்தது. அது வேறு கதை. புதுமைப்பித்தன் தந்தையோடு பாகப் பிரிவினை செய்து கொண்டவுடன், தந்தைக்கும் தமக்கும் இனி யாதொரு வாரிசுப் பாத்தியதையும் இல்லை என்பதற்கு விடுதலைப் பத்திரமும் எழுதிக் கொடுத்து விட்டார்.

ஆனால் புதுமைப்பித்தன் தமக்குக் கிடைத்த நிலத்தைக்கூடக் காப்பாற்றிக் கொள்ளவில்லை. அதையும் ''தினசரி'' யை விட்டு விலகிய காலத்தில் விற்று விட்டார். அவரது பாகத்துக்குக் கிடைத்த நிலப்பகுதியைச் சுற்றி, உற்றார் உறவினர், தந்தை முதலியோருடைய நிலப்பகுதிகள் இருந்தாலும், அவர் தமது பாகத்தை ஒரு முகம்மதியருக்குக் குறைந்த விலைக்கு விற்று விட்டார். 'குடும்பச் சொத்தை ஒரு துலுக்கனுக்குப் போயா விற்பது?' 'நமது வயலுக்கு மத்தியிலே அயல் சாதிக்காரனைப் புகுத்திவிட்டானே, பாவி!' 'குலத்துரோகி' முதலிய விருதுகள் புதுமைப்பித்தனுக்கு வந்து சேர்ந்தன.

இந்தப் பாகப் பிரிவினையைப் பற்றிப் புதுமைப்பித்தன் பின்வருமாறு கூறுவார்: ''அவர்களைப் பழிக்குப் பழி வாங்க எனக்கு இந்த ஒரு வழிதான் திறந்து கிடந்தது. உபயோகப்படுத்தி விட்டேன். என் குடும்பத்தார் என்னைத் தவிக்க விட்டார்கள். அந்தப் பாவத்தின் கறையை ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கட்டும் என்றுதான் அவர்களுடைய தொடர்ச்சியான நிலத்தைத் துண்டாக்கி, இடையே வேறு ஒரு சொந்தக்காரனைச் சொருகி விட்டேன். தினம் தினம் அவர்கள் நினைக்கட்டும்; சங்கடம் வரும் போதாவது நினைக்கட்டும்.'' இதுவே அவர் ஆத்மார்த்தமாகக் கூறிக்கொள்ளும் சமாதானம்; வெளிப்படையாகக் கூறிக்கொள்ளும் வஞ்சினம்!

புதுமைப்பித்தன் தமது நிலத்தை விற்றுக் காசாக்கியபோது அவரது சித்தப்பா சுப்பிரமணிய பிள்ளை ஒரு யோசனை சொன்னார். வீணாகப் பணத்தைச் செலவு

செய்து விடாமல், ஒரு ஜீப் கார் வாங்கி வாடகைக்கு விடச் சொன்னார். அப்போது யுத்தம் முடிகின்ற அல்லது முடிந்துவிட்ட பருவம். சரசமான விலைக்கு உறுதியான ஜீப் கார்கள் கிடைத்துக் கொண்டிருந்தன. எனவே அப்படி ஒன்று வாங்கினால் ஏதாவது பிரயோஜனகரமாய் இருக்கக் கூடும் என்பது அவர் எண்ணம்.

ஆனால் அதற்குப் புதுமைப்பித்தன் சொன்ன பதில் என்ன தெரியுமா?

''ஜீப் வாங்குவதில் ஆட்சேபணை இல்லை. ஆனால், ஒரே ஒரு நிபந்தனை; வாங்கியவுடனேயே அதை என் அப்பா மேலேதான் விடுவேன். சம்மதமா?''

இந்தப் போக்கிரித்தனமான பதிலைக் கண்டு சுப்பிர மணிய பிள்ளை என்ன செய்வார்? பேசாதிருந்து விட்டார்.

புதுமைப்பித்தன் தினசரியை விட்டு விலகி வேலை யில்லாதிருந்த காலத்தில் அவருக்கு ஓரளவு உதவி வந்தது இந்தப் பணம்தான். ஆனால், சம்பாத்தியமே இல்லாது கைமுதலைக் கொஞ்சம் கொஞ்சமாய்க் கரைத்துக் கொண்டு, அதிலும் யுத்தகால வாழ்க்கைத் தரத்தின் சங்க டங்களோடு, சென்னை நகரில் குடியிருந்தால், அந்த வாழ்க்கை எத்தனை நாளைக்கு ஓடும்?

எனவே புதுமைப்பித்தன் தமது எதிர்காலத்தைப் பற்றி விசாரப்பட வேண்டிய நிர்ப்பந்தம் நெருங்கிப் பய முறுத்தியது.

# வாழ்வா, இலக்கியமா?

“என்னுடைய கதைகள்................பிற்கால நல்வாழ்வுக்குச் சௌகரியம் பண்ணி வைக்கும் இன்ஷ்யூரன்ஸ ஏற்பாடும் அல்ல” என்று புதுமைப்பித்தன் ‘காஞ்சனை’ என்ற கதைத் தொகுதியின் முன்னுரையில் கூறியிருக்கிறார். அவரது கதைகள் மனித குலத்தின் பிற்கால நல்வாழ்வுக்குச் சௌகரியம் செய்யுமோ, இல்லையோ? அது வேறு விஷயம். ஆனால் அவரது கதைகள், அவர் புரிந்து வந்த இலக்கிய சேவை, பத்திரிகைத் தொழில் – எதுவுமே அவரது பிற்கால நல்வாழ்வுக்கான எந்தச் சௌகரியத்தையும் செய்து வைக்கவில்லை. தினமணி, தினசரி ஆகிய பத்திரிகைகளில் தர்ஜுமாக் கூலியாக, உதவியாசிரியராக உழைத்து, அவரது உள்ளமும் உடலும் சோர்ந்து போய்விட்டன. பதினேரு வருஷ காலப் பத்திரிகைத் தொழிலுக்குப் பிறகும், அவருக்கு அடுத்தாற்போல் என்ன செய்வது, அதாவது பிழைப்புக்கு என்ன செய்வது என்பதுதான் பிரச்னையாக நின்றது. இனி என்ன செய்தால் தமது பொருளாதார நிலை உயரக்கூடும் என்பதே அவர் சிந்தனை. சிந்தித்ததில் ஆச்சரியமில்லை; குற்றமும் இல்லை; தவறும் இல்லை.

அவருக்குத் தெரிந்த தொழிலோ இலக்கிய சிருஷ்டி. அதற்குரிய சாதனம் பத்திரிகை. தமிழ் நாட்டில் சுயேச்சை எழுத்தாளனாக இருந்து வயிற்றுப் பிரச்னையைக் கழுவி விடலாம் என்று ஒரு நல்ல எழுத்தாளன் நம்புவது அன்றும் இன்றும் நடவாத காரியம்; நம்புவது முட்டாள்தனம். புதுமைப்பித்தன் புத்திசாலியாகத்தான்

இருந்தார். யாரோ சொன்ன மாதிரி, 'எழுத்தாளன் என்றால் முழுப் பட்டினி; பத்திரிகாசிரியன் என்றால் அரைப் பட்டினி' என்ற சொல் பொய்யல்ல. புதுமைப் பித்தனும் அதை உணர்ந்திருந்தார். பத்திரிகையில் பல வருஷ காலம் உழைத்தும், நடை முறையில் அவர் கண்ட பலன் தீராத தொண்டைப் புகைச்சலும் ஓயாத மனப் புகைச்சலும்தான்.

எனவே 'வாழ்வா, இலக்கியமா?' என்னும் கேள்வி தான் அவர் முன் கொக்கியிட்டு நின்றது. அவர் இரண்டையும் விரும்பினார். வாழ்வும் செழிக்கவேண்டும்; இலக்கியமும் செழிக்கவேண்டும். ஆனால் இலக்கியம் செழிக்க வேண்டுமானால், முதலில் எழுத்தாளனின் வாழ்வு செழிக்க வேண்டும்; செழிப்பதற்கான நம்பிக்கையாவது வேண்டும். புதுமைப்பித்தன் இவ்வாறெல்லாம் கணக்கிட்டுப் பார்த்தாலும் பார்க்காவிட்டாலும், இந்த எண்ணம்தான் அவரது மனத்தை ஆட்கொண்டது. எனவே முதலில் வாழ்வு செழிக்கவேண்டும். அதற்கான தொழில் என்ன? இது புதுமைப்பித்தனின் சிந்தனை; பிரச்னை.

வாழ்வு செழிக்க, உன்னதம் பெற, திருப்திகரமாகக் கொண்டு செலுத்தப் - பணம் வேண்டும். தொட்டும் துடைத்தும் ஒரு மாதிரியாக வாழ்வை ஓட்டிவர உதவிய கொஞ்ச நஞ்ச வருவாயும், பத்திரிகைத் தொழிலை விட்டு விலகியவுடன், தானும் விலகிவிட்டது. பணம் எப்படி வரப்போகிறது என்பதே அவரது அன்றாடக் கேள்வி; கவலைக்கும் மன உளைச்சலுக்கும் எல்லையே காட்டாமல் அந்தக் கேள்வி குறுக்கே நின்றது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அவரது மனசில் சினிமாத் தொழிலைப் பற்றிய அபிப்பிராயம் உரம் பெற்றது.

'சினிமாவுக்குக் கதை வசனம் எழுதினால் என்ன? நமக்குத் தெரிந்த ஒரே தொழிலான இலக்கியத்தை உபயோகப் படுத்தவும் இடமுண்டு; பணவசதிக்கும் வருவாய்க்கும் இடமுண்டு: லட்சியம் லட்சியம் என்று கூறி வயிற்றை இறுக்கிக் கட்ட முடியாது; இலக்கியத்தை விலை பேசாமல், விற்காமல் முடியாது. சுவர் இருந்தால்தான்

சித்திரம் வரைய முடியும்; முதலில், சுவர் நிலைக்கவேண்டும். அதற்குப் பணம் தேவை. பணம் வந்துவிட்டால் பிறகு லட்சியத்தையும் அதன் துணைகொண்டு நிறைவேற்றப் பார்க்கலாமே! பணம் எந்தத் தொழிலால் வருகிறது என்பது இப்போது பிரச்னையல்ல. பணம்தான் தேவை. நாய் விற்ற காசு குரைக்கவா செய்யும்? பெரிய பேச்சுப் பேசி, புராணமே பிடிக்காது என்று சொல்பவர்களே திரைமறைவிலிருந்து திரைப்படங்களுக்குக் கதை வசனம் எழுதத் துணியும்போது நாம் மட்டும் ஏன் துணியக் கூடாது?....'

புதுமைப்பித்தன் சினிமா உலகத்துக்குள் புகும்போது இப்படியெல்லாம் யோசித்ததுண்டு. கடைசியில் அவர் சினிமாவுக்குக் கதை வசனம் எழுதுவதையே தொழிலாக மேற்கொள்ள விரும்பினுர். சினிமாவுக்குக் கதை வசனம் எழுதுவது இலக்கிய சேவைக்குப் புறம்பட்டதல்ல. ஆனுல் இன்று தமிழ் நாட்டில் சினிமாவுக்குக் கதை வசனம் எழுதும் தொழில் இருக்கின்ற நிலைதான், அதாவது மக்களுக்கு நல்லறிவு புகட்ட வேண்டும் என்பதைவிட, தமது பாங்க் இருப்பில் எத்தனை இலக்கத்தைக் கூட்டமுடியும் என்று படமுதலாளிகள் கருதுகின்ற நிலைதான் புதுமைப்பித்தனை இத்தனை தூரம் சிந்திக்கச் செய்தது. அவர் எவ்வளவு தான் சிந்தித்தாலும், இன்றைய சமுதாய அமைப்பில் அவர் உயிர் சுமந்து வாழவேண்டுமென்றுல், பணத்தின் சந்நிதியில் தலை வணங்குவதைத் தவிர வேறு மார்க்கம் அவருக்குக் கிடையாது; தனி மனிதனின் லட்சியம் செல்லுபடியாகாது. எனவே புதுமைப்பித்தன் கதை வசனம் எழுத முன் வந்ததில் ஆச்சரியமில்லை.

வாழ்வுப் பிரச்னைக்கு புதுமைப்பித்தன் சினிமாவை ஒரு வழியாகக் கண்டார்; ஆனுல், அதே சமயம் அவர் தமது இலக்கியப் பிரச்னையையும் மறந்து விடவில்லை. பத்திரிகைத் தொழிலை விட்டு விலகினுரே ஒழிய, இலக்கியத்தைக் கைகழுவி விடவேண்டும் என்று அவர் விரும்பியதில்லை. காலமும் வசதியும் ஏற்படும்போது, அதாவது சினிமாத் துறையின் மூலம் கையில் காசு பணம் நன்கு புரள ஆரம்பித்தால், சொந்தத்திலேயே ஒரு பத்திரிகை வெளி

யிட்டு, அதில் தமது அற்புத சிருஷ்டிகளை வெளியிட்டு வரவேண்டும் என்ற ஆசையும் அவருக்கு இருந்தது. ஒரு தடவை அவர் என்னிடம் சொன்னார்: "'ராசா, கையில் பணம் சேரட்டும். நாம் ஒரு பத்திரிகை ஆரம்பிப்போம். இலக்கியப் பத்திரிகை. பத்திரிகையின் பெயர் என்ன தெரியுமா? 'சோதனை!'"

'சோதனை'யைப் பற்றிய எண்ணம் அவரை மிகவும் ஆட் கொண்டிருந்தது. 1946-ம் வருஷம் அவருக்குத் தமது வாழ்க்கை நிலையை ஓரளவு கவலையற்றதாக்கி விட முடியும் என்ற நம்பிக்கையும், பத்திரிகையை ஆரம்பிப்ப தற்கான செளகரியங்கள் வாய்ப்பதற்கான சந்தர்ப்பங் களும் பெருகி வந்தன. அந்தச் சமயத்தில் நான் திருநெல் வேலிக்குச் சென்றிருந்தேன். அப்போது புதுமைப்பித்தன் எனக்கு ஒரு கடிதம் எழுதினார்:

"....நமது யோசனைகள், திட்டங்கள் யாவும் ஆசைப் பருவத்திலிருந்து ஏழாவது மாசக் கரு மாதிரி உருவமும் உயிர்ப்பும் பெற்று வருகின்றன. சீராகப் பிரசவமாகும் என்பது பூரண நம்பிக்கை. நீ அங்கிருந்து கொண்டு மனசில் ஆயிரம் 'அழிவு—கோட்டை' கட்டிக் கொண்டு அவதிப் படாதே. இங்கே எனக்கு மேலுக்குமேல் வேலை வருகிறது. நமது பத்திரிகையின்மீது என் கவனம் குறையுமோ என நானே பயப்படும்படியாக இருக் கிறது...."

எனவே புதுமைப்பித்தன் பணத்தாசையினால்தான் சினிமாத் துறையில் புகுந்தார் என்று எவரேனும் கருதினால், அது தவறு. புதுமைப்பித்தனுக்குக் குபேரப் பிரபுவாகி, கோயில் கட்டவேண்டும் என்ற பேராசை இருந் ததே கிடையாது. பின்னொரு சமயம் அவர் பணக் கஷ்டத் துக்கு ஆளானபோது, ஒரு நண்பரிடம் தமது துயரத்தை வெளியிட்டார். அப்போது அவர் சொன்னது இதுதான்: "எனக்கு விளையாடப் பணம் வேண்டாம்; ஆனால் வேளா வேளைக்குச் சாப்பிடவாவது பணம் வேண்டாமா?" புதுமைப்பித்தனின் இந்தக் கூற்றிலுள்ள வேதனை இருக்

கட்டும். அவர் விரும்பியது தேவைக்குப் பணம்; சொகு சுக்குப் பணம் அல்ல.

ஆனால், அவரது பிற்கால வாழ்க்கை அவரை ஏமாற்றி விட்டது. அவரது 'சோதனை' ஆசைக் கருவிலேயே அழிந்தும் போயிற்று; அதற்குப் பதிலாக அவரது வாழ்வே பெருஞ் சோதனையாக மாறிவிட்டது!

## அத்தியாயம்—13

# சினிமாத் துறையில்

புதுமைப்பித்தன் சினிமாத் துறையில் புகுவது என்று முடிவு கட்டினூர். ஆனல், யாரை அணுகுவது, எப்படி அணுகுவது என்பதே அடுத்த பிரச்னையாக இருந்தது. ஆனல், இந்தப் பிரச்னை தீர்வதற்கு அவருக்கு வெகுநாள் பிடிக்கவில்லை. புதுமைப்பித்தன் தினசரியை விட்டு விலகி விட்டார் என்பதும், அவர் நல்ல எழுத்தாளர் என்பதும், சினிமாத் துறையில் புக விரும்புகிருர் என்பதும் ஊர் அம்பலமாகாத ரகசியம் ஒன்றுமல்ல. எனவே சினிமாத் துறையில் இடம் கிடைப்பதில் அவருக்குச் சிரமம் ஒன்று மில்லை. எடுத்த எடுப்பிலேயே, இவராகப் போவதற்கு முன் சீதேவி இவரைத் தேடி வந்தாள்.

அப்போது மாம்பலத்தில் ஒரு புதிய சினிமாக் கம்பெனி உருவாகியது. அதன் பெயர் பாலகோபால் சினிமாக் கம்பெனி என்பது; அதன் உரிமையாளர் பால கோபால் நாயுடு என்பவர். அவர் புதுமைப்பித்தனைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரிடம் வந்து சேர்ந்தார். அவர் வந்து சேர்ந்த வேளை புதுமைப்பித்தனுக்கு வறட்சிக் காலம். வந்தவர் புதுமைப்பித்தனை ஒரு சினிமாக் கதை எழுதித் தரும்படியாகச் சொல்லி ஐநூறு ரூபாய் அட்வான்சும் கொடுத்துவிட்டுப் போனூர். வறண்ட பூமிக்குத் தூவானமே பெரிதல்லவா? செழிப்பு வரத் தொடங்கி விட்டது, நல்ல காலம் பிறந்து விட்டது எனக் குதூகலம் கொண்டார் புதுமைப்பித்தன். ஆனல், பால

கோபால் நாயுடுவின் விஷயம் திரிசங்கு நிலையாகிவிட்டது. அதற்குக் காரணம் நாயுடுவல்ல; புதுமைப்பித்தன்தான்!

சினிமா டைரக்டர் 'முருகதாஸா' (ஏ. முத்துஸ்வாமி) அப்போது ஜெமினி ஸ்டூடியோவில் வேலை பார்த்து வந்தார். மறுமலர்ச்சி இலக்கியத்திலும், மறுமலர்ச்சி இலக்கிய கர்த்தாக்களிடமும் அவருக்கு ஈடுபாடு உண்டு. இன்று ஜெமினி கதை இலாகாவிலிருக்கும் கி. ரா., வசன கர்த்தாவாகவும் டைரக்டராகவும் மாறிவிட்ட பி. எஸ். ராமையா போன்ற மறுமலர்ச்சி எழுத்தாளர்களைச் சினிமாத் துறையில் இழுத்து விட்டவர் அவரே. புதுமைப்பித்தனின் சிருஷ்டிகளில் 'முருகதாஸா'வுக்கு அமோகக் கவர்ச்சி; ஈடுபாடு. கி. ரா. புதுமைப்பித்தனோடு மணிக்கொடி என்ற சத்திய சோதனைக் காலத்தில் பசியையும் பட்டினியையும் பகிர்ந்து கொண்ட நண்பர்களில் ஒருவர். எனவே புதுமைப்பித்தனுக்கு ஜெமினி ஸ்டூடியோவிலிருந்து அழைப்புக் கிடைத்ததில் வியப்பில்லை. ஜெமினியில் அவ்வையார் சரித்திரத்தைப் படமாக்கத் திட்டமிட்டார்கள். புதுமைப்பித்தனை அவ்வையார் படத்துக்கு கதை வசனம் எழுத அழைத்தார்கள். கி. ரா. வும் புதுமைப்பித்தனுமாகச் சேர்ந்து எழுதுவதாகத் திட்டம். ஜெமினியில் புதுமைப்பித்தனுக்கு ஒப்பந்தமும் ஆயிற்று. ஜெமினி ஒப்பந்தத்தின் மூலம் புதுமைப்பித்தனுக்குக் கிடைத்த தொகை, பெருந்தொகை என்று சொல்ல முடியாது. என்றாலும், புதுமைப்பித்தனை இரண்டு விஷயங்கள் மயக்கின. ஒன்று: அவ்வையாரின் சரித்திரத்தை எழுத நேர்ந்ததில் ஒரு திருப்தி; பிடித்தமான விஷயம் என்ற ஆத்ம சாந்தி. இரண்டு: ஜெமினி ஸ்டூடியோ நல்ல ஸ்தாபனம்; முன்னேற்றத்துக்கு வழி உண்டு என்ற நம்பிக்கை. இத்தனைக்கும் மேலே தேவை என்ற நிர்ப்பந்தம். புதுமைப்பித்தன் அவ்வையை உருவாக்குவதில் பெருமகிழ்ச்சி கொண்டார். இதன் காரணமாகத்தான் பாலகோபால் நாயுடுவின் கதை திரிசங்கின் கதியை அடைந்தது.

அவ்வைக்குக் கதை வசனம் எழுதும்போது நான் புதுமைப்பித்தனுடன் இருநதேன்; அவ்வப்போது தாம்

ஏழுதி முடித்ததையெல்லாம் என்னிடம் காட்டாமல் அவர் அனுப்புவதில்லை. 'அவ்வை'யில் அவர் எழுதிய வரிகள் பல எனக்கு இன்றும் ஞாபகம் இருக்கின்றன. அவ்வையை அவர் அறிமுகப் படுத்துகின்ற முதல் காட்சியைப் படிக்கும்போதே உடம்பு புல்லரித்தது. அவ்வை சோழராஜ்யத்திலுள்ள பாழ்மண்டபத்தில் குடியிருந்த பேயை 'எற்ருே மற்றெற்ருே மற்றெற்று' என்ற ஈற்றடியுடன் நான்கு வெண்பாக்களால் விரட்டுகிருளே, அதில்தான் காட்சி ஆரம்பம். இருட்டிலே ஆரம்பம். அவ்வை இருட்டிலே அறிமுகமாகிருள். சோழன் நகர் சோதனைக்காக இருட்டிலே வருகிருன். இருவரும் இருளில் ஒருவரையொருவர் இனம் தெரியாமல் சந்திக்கிருர்கள். பேயை விரட்டிய காட்சியை மன்னன் பார்க்கிருன். இருட்டிலே முகம் தெரியாமற் போனுலும் அவ்வையின் அகத்தை உணர்கிருன். 'தாயே, இந்தப் பாழ்மண்டபத்திலா தங்க வேண்டும்? அரண்மனைக்கு வாருங்கள்' என்கிருன் சோழன். 'பாழா? இந்த உலகமே பாழிலிருந்து பிறந்தது தானே' என்கிருள் அவ்வை. அவ்வையின் கதையை புதுமைப்பித்தன் இப்படித்தான் ஆரம்பித்தார். இது போலவே அதியமான் அவ்வைக்குச் சாகாவரம் தரும் நெல்லிக்கனியைத் தர முனையும்போது, அவ்வை அவனைப் பார்த்துக் கேட்கிருள்: 'மன்னு! உலகத்துக்குள் வர ஒரு வழிதான் உண்டு; போவதற்கோ பல வழிகள் இருக்கின்றன. அத்தனை வழிகளையும் இந்த நெல்லிக்கனி அடைத்து விடுமென்று எதிர்பார்க்கிருயா?'

உதாரணத்துக்குத்தான் இவற்றைச் சொன்னேன். புதுமைப்பித்தனின் 'அவ்வை' இம்மாதிரி பொருள் ஆழம் மிகுந்த வசனங்களால் செழிப்புற்று விளங்கியது. புதுமைப்பித்தனின் 'அவ்வை' வசனத்தை ஜெமினி ஸ்தாபனத்தார் பயன்படுத்திக் கொள்ளவில்லை. ஆனுல், அவர் எழுதிய அவ்வையின் சரித்திரம் புத்தக உருவிலாவது வெளிவருமானுல் அது ஒரு சிறந்த இலக்கியப் பொக்கிஷமாகவே தமிழர்களுக்குப் பயன்படும் என்பது உறுதி.

புதுமைப்பித்தன் அவ்வைக்கு வசனம் எழுதிக்கொண்டிருக்கும் காலத்திலேயே முருகதாஸாவின் ஆதரவினுல்,

வேறொரு படத்துக்குக் கதை வசனம் எழுதும் பொறுப் பும் புதுமைப்பித்தனுக்குக் கிட்டியது. பாஸ்கர் பிக்சர் ஸின் முதலாளி நந்தலால் என்பவர் புதுமைப்பித்தனோடு 'காமவல்லி' என்ற படத்துக்குக் கதை வசனம் எழுதித்தர ஒப்பந்தம் செய்துகொண்டார். புதுமைப்பித்தனுக்குக் காமவல்லியில் கிடைத்த பணம் ஜெமினியிலிருந்து கிடைத்ததைவிட அதிகம்.

'காமவல்லி' திரைக் கதைக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்த சமயத்தில், ஒரு ருசிகரமான சம்பவம் நடந்தது. காமவல்லி படத்தின் டைரக்டரும், புதுமைப் பித்தனும், நானும் அந்தப் படத்தில் நடிக்கவிருந்த ஒரு நடிகையின் வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்றோம். அந்த நடிகையோ தெலுங்கு பேசும் நபர். தமிழ் நாட்டிலே தமிழ்ப் படத்தில் தமிழ் நடிகைகளைவிட, நன்றாகத் தமிழ் பேசும் தெலுங்கு நடிகையர்கள் சிலர் இருக்கத்தான் செய் கிறார்கள். ஆனால், அந்த நடிகையோ சுத்தத் தெலுங்கு; கொச்சைத் தமிழ்: கொலைத் தமிழ்! புதுமைப்பித்தன் அவளோடு கதை சம்பந்தமாக ஏதோ பேசுவதற்காகவே செல்ல நேர்ந்தது. அவளது வீட்டை விட்டு வெளியே வந்து காரில் ஏறியவுடன் புதுமைப்பித்தன் டைரக்டரைப் பார்த்துச் சொன்னார்: ''டைரக்டர் ஸார்! எனக்கு ஒரு யோசனை தோணுது. இந்த அம்மாதான் கதாநாயகியாக நடிக்கணும்னா, நான் என் கதாநாயகியை ஊமையாகவே மாற்றி விடுகிறேன். வீணாகத் தமிழ் சாக வேண்டாம்!'' ஆனால் கதாநாயகியை ஊமையாக மாற்றுவதோ, அல்லது வேறு யாரையேனும் கதாநாயகியாக நடிக்க வைப்பதோ இவர்கள் இருவர் அதிகாரத்திலா இருக்கும்? எனவே புதுமைப்பித்தனின் வயிற்றெரிச்சல் நிறைந்த ஹாஸ்யத் தைக் கேட்டுச் சிரித்ததோடு எல்லோருமே அதை மறந்து விட்டோம்.

அவ்வை, காமவல்லி என்னும் இரண்டு படங்களுக்கு வசனம் எழுதும் சந்தர்ப்பம் 1946-ம் வருஷத்தின் முன் பாதியிலேயே புதுமைப்பித்தனுக்குக் கிட்டியது. இதனால், தமக்கு இனி மேலும் மேலும் சந்தர்ப்பங்கள் பெருகும் என நம்பினார் புதுமைப்பித்தன். எனவே தமது எதிர்

காலத்தைப் பற்றிப் பெரிதும் நம்பிக்கை கொண்டார் அவர். புதுப்பணம். கையில் அதற்குமுன் இவ்வளவு பணம் புரண்டு பார்த்ததில்லே. கிடைத்த பணத்தை என்ன செய்வது என்று தெரியாமல், சந்தோஷத்திஞல் திகைத்தார் புதுமைப்பித்தன். மனைவிக்குப் பட்டும் சேலேயு மாக எடுத்தார்; அந்த வருஷத்தில் பிறந்த தம் குழந் தைக்கு—தினகரிக்கு—உயர்ந்த விலேயில் ஒரு பதக்கம் வாங்கினர். சௌகரியமாக இருந்தார்.

ஆனல், 1946-ம் வருஷத்தைப்போல் அடுத்த வருஷம் இருக்கவில்லே. சினிமாத் துறையே ஒரு தினுசான பிர பஞ்சம். ஷேர் மார்க்கெட் நிலவரத்தின் ஏற்ற இறக்கங் களேக்கூட, பொருளாதார ரீதியில் கணித்தறிந்து, அதற் குத் தக்கபடி நடந்துகொள்ள முடியும். ஆனல் பட முதலாளிகளின் விருப்பு வெறுப்புக்களுக்கு எந்த அளவு கோலும் இல்லே. க்ஷணப்பித்தம், க்ஷணச்சித்தம் என்பார் களே, அது இந்த நாட்டுப் பட உலகக் கர்த்தாக்களின் நிலே. எனவே புதுமைப்பித்தனுக்கு 1946-ம் வருஷத்தைப் போல் 1947-ம் வருஷமும் இருக்கவில்லே என்பதில் அதிசயப்படத்தக்கது ஒன்றுமில்லே.

காமவல்லி, அவ்வை—இரண்டுக்கும் பிறகு, புது மைப்பித்தனே யாரும் நெருங்கவில்லே எனச் சொல்ல முடியாது. கோயமுத்தூரிலிருந்து குப்புராஜ் என்பவர் வந்தார். லக்ஷ்மி விஜயமோ, சரஸ்வதி விஜயமோ— எனக்கு ஞாபகமில்லே. 'லக்ஷ்மி, சரஸ்வதி—இருவரில் யார் சிறந்தவர்' என்பதைக் கருத்தாகக் கொண்டு புது மைப்பித்தனேக் கதை எழுதக் கேட்டுக் கொண்டார். புதுமைப்பித்தன் கதையும் எழுதினர்; படப் பிடிப்பு சம் பந்தமாக மதுரை சித்ரகலா ஸ்டூடியோவுக்கு ஷியாருடன் புறப்பட்டுச் சென்ருர். மதுரையில் ஒரு ஹோட்டலில் தங்கி, புதுமைப்பித்தன் கதை வசனம் எழுத ஆரம்பித் தார். ஆனல், அங்கு நிலேமை எதுவும் சீர்ப்பட்டு வராத தாலோ, நம்பிக்கை தராததாலோ, திடீரென்று ஒருநாள் புதுமைப்பித்தன் சென்னேக்கு வந்து சேர்ந்து விட்டார். அவரது வருகையை எதிர்பார்த்திராத நான் விஷயம்

என்ன என்று கேட்டேன். 'ருசிகரமான விஷயம் இருக்கு' என்றார் புதுமைப்பித்தன்.

''ஆசாமி வரவே காணோம். நான் புறப்பட்டு வந்து விட்டேன். வரும்போது, அவர் வந்தால் பார்க்கட்டு மென்று ஒரு பாட்டு எழுதி, வைத்துவிட்டு வந்தேன். நீ பாட்டைக் கேள். மற்ற விஷயம் ஒன்றும் சுவாரசிய மில்லை'' என்றார் புதுமைப்பித்தன்.

புதுமைப்பித்தன் மதுரை ஹோட்டலில் விட்டு விட்டு வந்த பாடல் நறுக்கு இதுதான்:

வருகின்றேன் சென்னைக்கு; வந்தவுடனே கதையைத்
தருகின்றேன்; தவணை சொலித் தப்பாதே—உருவான
பாதிக்கதை இங்கே, பஞ்சணையின் கீழிருக்கு;
மீதிக்கதை அங்கே வந்து!

பாட்டைக் கேட்டவுடனேயே எனக்கு விஷயம் புரிந்து விட்டது.

புதுமைப்பித்தன் அந்தப் படக் கதையை எழுதி முடித்து விட்டார்; பெரும்பாகம் வசனமும் எழுதி முடித் தார். ஆனால் படம்தான் உருவாகவில்லை; எனவே புது மைப்பித்தனுக்குப் பணமும் ஒழுங்காகக் கிடைக்கவில்லை. இந்தப் படக் கதைதான் பின்னர் 'வாக்கும் வக்கும்' என்ற தலைப்பில் புத்தகமாக வெளிவந்தது. படத்தைப் பார்க்கக் கொடுத்து வைக்காத பாவத்துக்கு, அதன் கதையாவது படிக்கும் பாக்கியத்தைத் தமிழர்கள் பெறக்கூடுமல்லவா?

'லக்ஷ்மி விஜயம்' என்ற கதை புதுமைப்பித்தனின் பொறுப்பில் எப்படி வருவதுபோல் காட்டி ஓடிப் போய் விட்டதோ, அதுபோலவே லக்ஷ்மி கடாக்ஷமும், அதாவது பொருள் வருவாயும் புதுமைப்பித்தனை ஆசை காட்டி மயக்கி விட்டுப் பின்வாங்கி விட்டது. 1947-ம் வருஷத்தின் முன்பகுதியில் புதுமைப்பித்தனிடம் மீண்டும் வறட்சி குடி புகுந்து விட்டது. இதற்குக் காரணம் புதுமைப்பித்தனின் ஊதாரித்தனம் என்று குற்றம் கூற முடியாது. புதுமைப் பித்தன் கைப்புருவை வைத்து மணிப் புருவைப் பிடிக்கும்

ஓர் அசட்டுக் காரியத்தில் இறங்கினர்; அதன் பலனாக மணிப்புரு சிக்காதது மட்டுமல்ல, கைப்புருவும் பறந்தோடி விட்டது. அது ஒரு சோகக் கதை.

நட்சத்திரம் திடீரென்று பாய்ந்து விழுவதுபோல், புதுமைப்பித்தனின் பொருளாதார வாழ்வில் ஒரு பிரகாசமான ஒளி தோன்றியது; ஆனால் கொஞ்ச காலத்திலேயே அது மறைந்து விட்டது. கைமுதலையும் இழந்து எந்த விதமான வரும்படியுமற்ற வறிய நிலையில் புதுமைப்பித்தன் பட்ட துயரங்கள் கொஞ்சமல்ல. இம்மாதிரியான நிலையில் அவர் பலமாதம் காலம் தள்ளினர்.

இந்த நிலைக்கும் ஒரு மாற்றம் நிகழ்ந்தது. பாலகோபால் நாயுடு மீண்டும் வந்தார், புதுமைப்பித்தனைத் தாம் கேட்டிருந்த கதையை முடித்துத்தர வேண்டுமாறு கேட்டுக் கொண்டார். அவசரப் படுத்தினர். ஆனால் பாலகோபால் நாயுடு வரும் சகுன பலன் புதுமைப்பித்தனுக்கு ஒரு நல்ல காலத்தையும், நாயுடுவுக்கு ஏமாற்றத்தையும் கொடுக்கின்ற ராசியோ, என்னவோ? முதலில் அவர் வந்தபோது, புதுமைப்பித்தனுக்கு ஜெமினியில் சந்தர்ப்பம் கிடைத்தது. இரண்டாம் தடவை அவர் வந்தபோது, புதுமைப்பித்தனுக்கு வேறொரு அரிய சந்தர்ப்பம் எதிர் நோக்கி வந்தது.

அந்தச் சந்தர்ப்பம்தான் புதுமைப்பித்தன் கடைசியாக எழுதிச் சென்ற 'ராஜ முக்தி' என்ற படம்.

'ராஜ முக்தி' எம். கே. தியாகராஜ பாகவதர் எடுத்த சொந்தப் படம்; பாகவதரின் ஆட்கள் புதுமைப்பித்தனை 'ராஜ முக்தி' படத்துக்குக் கதை வசனம் எழுதுவதற்காகக் கேட்க வந்தனர். புதுமைப்பித்தனும் ஒப்புக் கொண்டார். வந்தவர்களின் நடவடிக்கைகள் அனைத்துமே ஒரே மர்மமாக இருந்தன. புதுமைப்பித்தனோடு பேசியதுகூட ரகசியமாகவே நடந்தது. புதுமைப்பித்தனை பாகவதரின் இருப்பிடமாகிய திருச்சிக்கு அழைத்துச் சென்றதும் ரகசியமாக நடந்தது; ரயிலில் புதுமைப்பித்தனுக்கு இடவசதி 'புக்' செய்ததுகூட, வேறு யார் பெயரிலேயோ நடந்தது. இதெல்லாம் எதற்கு என்பது சம்பந்தப்பட்டவர்களின்

தொழில் ரகசியம். புதுமைப்பித்தன் திருச்சி சென்ளுர். திருச்சியில் ராஜ முக்திக்கான ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று; கையில் முன்பணம் வந்தது. புதுமைப்பித்தன் சென்னை திரும்பினுர். வாடிக் கிடந்த கொடி தலை நிமிர்வதற்குச் சிறு தூற்றல் போதாதா? புதுமைப்பித்தனின் மனம் நிமிர்ந்தது; மகிழ்ச்சி துள்ளாடியது. அந்த உற்சாகத்தில் சென்னையில் வசதியுள்ளவர்கள் தங்கும் ஹோட்டலான உட்லண்ட்ஸில் மனைவியோடு தங்கினுர். அங்கிருந்து கொண்டு ராஜ முக்தி வேலையைப் பார்க்கத் தொடங்கினுர்.

இந்தச் சமயத்தில் பாலகோபால் நாயுடு வந்து சேர்ந்தார். அவர் புதுமைப்பித்தனிடம் முன்பணம் கொடுத்துக் கிட்டத்தட்ட இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன. எனவே அவரும் கண்டித்துக் கதையைக் கேட்க முனைந்தார். புதுமைப்பித்தனுக்கோ எரிச்சல்தான் மூண்டு வந்தது. காரணம், பாலகோபால் நாயுடுவை அவர் எதிர்பார்க்கவில்லை. மறுநாள் காலையில் அவர் பாகவதரின் சகாக்களோடு புனுவுக்குப் புறப்பட வேண்டும். ஒரே ஒருநாள் இரவில் ஒரு சினிமாக் கதையை எழுதி முடிப்பதென்பது, மகாபாரதத்தை எழுதிய யானைக் கொம்பன் வந்தாலும் முடியாத காரியம்; மேலும் புதுமைப்பித்தனின் மனநிலை அந்த வேலையை எடுத்துச் செய்யக்கூடிய ஸ்திதிரியில் இல்லை. இருந்தாலும் தமக்கு வந்த ஆத்திரத்தில் "உங்க ஸ்கிரிப்டை நாளைக்கே முடித்துத் தருகிறேன். வந்து வாங்கிக் கிடுங்க!" என்று சொல்லிவிட்டார். இரவு முழுவதும் கண்விழித்து பாலகோபால் நாயுடுவுக்குக் கதை எழுத உட்கார்ந்தார். சுக்கு கண்ட இடத்தில் பிள்ளை பெற முடியாது; அப்படியே பெற்ருலும், அந்தப் பிள்ளையும் சுக்குப் போலவேதான் இருக்கும். புதுமைப்பித்தன் நாயுடுவுக்காக எழுதிய கதையும் அப்படித்தான் இருந்தது. காலையில் அவர் தமது மனைவியிடம் "கமலா, நாயுடு வந்தால் இதைக் கொடு" என்று கூறிவிட்டு, ரயிலேறி விட்டார்.

காலையில் நாயுடு வந்தார். எழுதியிருந்த கதையைப் பார்த்தார். "என்னம்மா இது? அட்வான்சு வாங்கிய கடனைத் தொலைக்கவா இப்படி எழுதியிருக்கிருர்? பாருங்

கம்மா. சினிமா ஸ்கிரிப்ட் அஞ்சு பக்கத்தில் முடிஞ்சா இதை வச்சிக்கிட்டு என்ன செய்ய?'' என்று அங்கலாய்த்தார். ஆனல் நாயுடுவோ தும்பையும் விட்டு விட்டார்; வாலையும் விட்டு விட்டார். எனவே வேறு வழியில்லாமல் திரும்பிச் சென்ருர். பாலகோபால் நாயுடுவின் கதை இதற்கு மேலும் தொடரவில்லை; ஏனெனில் புதுமைப்பித்தன் புனவுக்குச் சென்றபோது அவரைத் தொடர்ந்து எமனே செல்ல ஆரம்பித்து விட்டான்!

## பர்வதகுமாரி

பர்வதம் என்ற சொல் புதுமைப்பித்தனுக்குப் புனித மான திருநாமம்; பக்தி மயமான பெயர். காரணம், அது அவரது தாயின் பெயர். தந்தையின் உதாசீனத்துக்கும் சித்தியின் எதேச்சாதிகாரத்துக்கும் ஆளாகி அவதிப் பட்ட புதுமைப்பித்தன் தம்மை இளவயதில் விட்டுவிட்டு மறைந்து சென்ற தம் தாயின் நினைவையும், தாய் இல்லாத குறையையும் வாழ்நாள் முழுவதும் நெஞ்சில் வளர்த்து வந்ததில் ஆச்சரியமில்லை. எனவேதான் அவர் விட்டுச் சென்ற தமது ஒரே ஒரு குழந்தையான தினகரிக்கு, தமது தாயின் பெயரையும் சூட்டியிருந்தார். தினகரியின் மற் ருெரு பெயர் பர்வதகுமாரி. இந்த அத்தியாயத் தலைப்பு தினகரியைக் குறிப்பிடவில்லை; இது வேறு. பர்வதகுமாரி புரொடக்ஷன்ஸ்!

'பர்வதகுமாரி புரொடக்ஷன்ஸ்' என்பது புதுமைப் பித்தன் ஆரம்பித்து நடத்துவதாக இருந்த சினிமாக் கம் பெனி. தினகரி பிறந்த அதே ஆண்டில், அதாவது 1946-ம் வருஷத்தில், புதுமைப்பித்தன் ஒரு 'புரொடக்ஷன்ஸ்' ஆரம்பித்தார். 'சினிமாத் துறையில் புகுந்த ஒரே வருஷ காலத்தில் புதுமைப்பித்தன் சொந்தத்தில் கம்பெனி ஆரம் பித்தாரா? அவ்வளவுக்கு அவரது பணவசதி உயர்ந்து விட்டதா? புதுமைப்பித்தன் முதலாளியாஞரா?' என் றெல்லாம் ரசிகர்களும் நண்பர்களும் மூக்கின்மீது விரலை வைத்துக் கேட்கக் கூடும்.

ஆனால், பர்வதகுமாரி புரொடக்ஷஸ் என்னும் புதுமைப்பித்தனின் அசட்டுத் தனமான அக்னிப் பரீட்சை அவரது எதிர்காலத்தையே சுட்டுச் சாம்பலாக்கி, அவரையும் பொசுக்கித் தள்ளி விட்டது. பர்வதகுமாரி என்னும் இந்தப் புதிய முயற்சி அவரது ரத்தத்தை உறிஞ்சித் தீர்த்த காட்டு மோஹினி; அவரது உயிருக்கே உலை வைக்க வந்த ஏழரைச் சனி! பர்வதம் என்ற சொல் புதுமைப் பித்தனின் மனத்தில் எவ்வளவு பவித்திரமும் புனிதத் தன்மையும் கொண்டு குடியிருந்ததோ, அதை யெல்லாம் இழந்ததோடு மட்டுமல்லாமல், கொஞ்ச காலத்தில் நினைத் தாலே குலை நடுங்கும் பேய்க்கனவாக, ரத்தக் காட்டேரியாக மாறிவிட்டது.

1946-ம் வருஷத்தின் பிற்பகுதி என ஞாபகம். அப்போது நான் சென்னையில் நண்பர் ப. முத்தையா நடத்தி வந்த 'முல்லை' எனும் மாசிகையின் ஆசிரியப் பொறுப்பை ஏற்று வேலை பார்த்து வந்தேன். புதுமைப்பித்தனும் நானும் அந்தக் காலத்தில் பேசாத நாளெல்லாம் பிறவா நாட்களாகக் கருதி, தினம் தினம் பேசிக் கொண்டிருந்ததுண்டு. ஒருநாள் அவர் என்னைப் பார்த்துத் திடீரெனக் கேட்டார்:

''என்ன ராசா, குற்ருலக் குறவஞ்சிக் கதையை சினிமாவுக்கு எழுதினால் எடுக்குமில்லா? என்ன சொல்றே?''

''ஏன், எவனாவது கேட்டிருக்கிருனா? எடுக்குமோ எடுக்கலையோ—பணம் வந்தால் சரிதான்'' என்றேன் நான்.

''இது ஊரானுக்கு இல்லையப்பா. சொந்தப் படம்!''

என்னால் பதிலே பேச முடியவில்லை. புதுமைப்பித்தனோடு நான் பழகிய முறையில் எனக்குத் தெரியாத எந்த வித அந்தரங்கமும் அவரிடம் கிடையாது. திடீரென்று சொந்தப் படம் என்று சொன்னதும் எனக்கு அது புரியாத புதிராக இருந்தது.

''என்ன முழிக்கே? இருக்கு. விஷயம் இருக்கு!'' என்று மிகவும் நம்பிக்கை தரும் குரலில் அழுத்திக் கூறி விட்டுத் தலையை ஆட்டினார் புதுமைப்பித்தன்.

புதுமைப்பித்தனிடம் சொந்தத்தில் படம் எடுக்கும் தன்மையில் கையில் பணம் இல்லை; திடீரென அப்படி ஒரு தன்மை வந்து குதிக்கப் போகிறது என்ற அசட்டு நம்பிக்கைக்கும்கூட, இடம் இல்லை. இத்தனைக்கும் மேலாக, ஐந்து ரூபாய் விலை சொல்லும் ஒரு சாமானைப் பேரம் பேசி நியாயமான விலைக்குக்கூட வாங்கத் தெரியாத புதுமைப்பித்தன், ஐந்து லட்ச ரூபாய் வியாபாரத்தில் இறங்கப் போகிறார் என்று தெரிந்து கொள்வது மகிழ்ச்சிக்குரிய விஷயம் அல்ல; பரிதாபத்துக்கும் அனுதாபத்துக்கும் உரிய சங்கதி.

பர்வதகுமாரி புரொடக்ஷன்ஸ் என்ற விஷப் பரிசோதனையின் ஜன்ம ரகசியத்தையோ, அந்தரங்கங்களையோ நான் அன்றும் அறியவில்லை; இன்றும் அறியவில்லை. புதுமைப்பித்தனோடு நெருங்கிப் பழகிய இலக்கிய நண்பர்களான கி. ரா., லோகநாதன் முதலியவர்களுக்கும் கூடத் தெரியாது. புதுமைப்பித்தன் இந்த விஷயங்களை மறைத்தது அவரது சொந்த விருப்பினாலா, அல்லது தூண்டுதலினாலா என்பதும் எங்களுக்கெல்லாம் தெரியாது. சாக்கடை யாகட்டும், சாம்பிராணி யாகட்டும், அது எங்கிருக்கிறது என்பது தெரியாமல் போனாலும் அதன் நாற்றத்தையோ வாசனையையோ பூட்டி வைத்துவிட முடியாது. மற்றவர்களின் புலனுணர்ச்சியை அது தொடத்தான் செய்யும். புதுமைப்பித்தன் தமது அந்தரங்க முயற்சி என்று சொல்லி வந்த பர்வதகுமாரி புரொடக்ஷன்ஸின் போக்கு எங்கள் போன்றவர்களுக்கு ஓரளவு புரிந்தே வந்தது.

சினிமாத் துறையில் நடிகராகவோ, காமிரா நிபுணராகவோ, வசன கர்த்தாவாகவோ புகுந்து விட்ட ஆசாமிகளில் சிலருக்கு சொந்தத்தில் ஒரு படம் எடுத்துப் பார்க்க வேண்டும் என்ற ஆசை திடீரென எழுவதுண்டு. அந்த ஆசை கலையின் மீதுள்ள ஆர்வமாகவும் இருக்கலாம்; காசின் மீதுள்ள காதலாகவும் இருக்கலாம். இப்படித் தோன்றுகின்ற ஆசை சிலருக்கு இஷ்ட பூர்த்தியாகவும், சிலருக்கு நிராசையாகவும், சிலருக்கு நப்பாசையாகவும் பிற்காலத்தில் மாறிவிடுவதுண்டு. புதுமைப்பித்தனின் சினிமா உலகப் பிரவேசத்தால் அவருக்குச் சில கத்துக்

குட்டித் தேவதைகளின் சிநேகம் கிட்டியது. கூளிக்கணங்கள் போல, அவர்கள் புதுமைப்பித்தனைச் சுற்ற ஆரம்பித்தார்கள். மேற்கூறிய ஆசைக்கு அடிமையான இந்தத் தேவதைகள் புதுமைப்பித்தனையும் காலக்கிரமத்தில் 'ஞானஸ்நானம்' செய்து தங்களோடு சேர்த்துக் கொண்டது மட்டும் அல்லாமல், புதுமைப்பித்தனையே தங்கள் ஆசையைப் பூர்த்தி செய்துவைக்க முன்வரும் கருவியாகவும் பயன்படுத்தி விட்டார்கள். 'அன்பர் பணிக்குத் தம்மை ஆளாக்கி விட்டு விட்ட' புதுமைப்பித்தனும் எப்படியோ இந்தச் சூதாட்டத்தில் சிக்கினர்; சீரழிந்தார்.

'ஆண்டிகள் கூடி மடம் கட்டுவது' என்பது பழமொழி. ஆண்டிகளின் திருக்கூட்டம் உஞ்ச விருத்திக்காகக் கலைந்து செல்லும்போது, அந்த மடமும் காற்றிலே பிறந்தது போலவே காற்றிலேயே மறைந்துவிடும். பர்வத குமாரி புரொடக்ஷன்ஸ் ஆண்டி மடமாகப் போயிருந்தால் அதிசயப்படுவதற்கோ, வருத்தப்படுவதற்கோ இடமில்லை. புதுமைப்பித்தனே எப்பாடு பட்டேனும் மடத்தை உருவாக்கியே தீருவது என்று தீர்மானித்தார். ஆனால் அஸ்திவாரம் வேண்டாமா? படம் எடுக்கப் பணம் வேண்டும். பணத்துக்காகப் புதுமைப்பித்தனும் அவரது பரிவாரங்களும் அலைந்தார்கள். சிக்கந்திராபாத், திருநெல்வேலி, திருவனந்தபுரம்—இப்படி எத்தனையோ ஊர்கள் அவர்களது இலக்காயின. ஆனல் இங்கெல்லாம் செல்வதற்குப் பணம் வேண்டுமே! புதுமைப்பித்தன் தமது சினிமா உலகப் பிரவேசத்தால் ஏதோ மிச்சம் கண்டிருந்த பணம் இதற்குப் பயன்படுத்தப் பட்டது. பணம் விரயமானது தான் மிச்சம். கைப்புருவும் பறந்தோடி விட்டது; மணிப்புருவும் அகப்படவில்லை.

எனது நண்பர் ஒருவர் சொல்வார்: 'பிளேக் கிருமிகள்கூட, மனிதன் செத்த பிறகு அவனிடமிருந்து ஓடிப்போய்விடும். சில மனிதர்கள் அப்படியல்ல. அவன் உயிரோடிருக்கும்போது அவனைத் தின்று கொண்டிருப்பார்கள்; செத்த பிறகும்கூட அவனை விடமாட்டார்கள்.' புதுமைப்பித்தனைச் சுற்றியிருந்த இந்தத் தேவதைகள் பிளேக் கிருமிகளின் மறு பிறவிகள். புதுமைப்பித்தன்

ஆடியோடி அயர்ந்துபோன காலத்திலும் அவரை விட்டு நீங்கவில்லை. அவரது மனத்துக்குக் காயகல்பம் செய்து செய்து, தங்கள் காரியத்தைப் பார்த்துக் கொண்டார்கள். 'விளம்பரத்தைப் போட்டுவிட்டால், எவனுவது பணம் நம்பித் தருவான்' என்று போதித்தார்கள். 'அதற்கென்ன, போட்டால் போகிறது' என்ருர் புதுமைப்பித்தன். பர்வத குமாரி புரொடக்ஷன்ஸ் விளம்பரம் சில பத்திரிகைகளில் விளம்பரப் படுத்தப்பட்டது. முதல் படம்: வசந்தவல்லி. கதை வசனம்: புதுமைப்பித்தன். பிரதம நடிகர்: நாகர்கோயில் மகாதேவன்—இவை போல்வன விளம்பர விஷயங்கள்.

விளம்பரம் போடுவதற்கு முன்னுல் நடந்த ஒரு சம்பவத்தை நினைத்தால், இன்றுகூடத் துக்கம் கலந்த சிரிப்பு வருகிறது. தீபாவளிச் சமயம் என ஞாபகம். புதுமைப் பித்தன் ஊருக்குச் செல்ல நினைத்தார். கையில் பணமில்லை. அன்றிரவு அவர் கிளம்பியாக வேண்டும். அவரது பையில் அன்றிருந்த நிதியின் மொத்தத் தொகை ஒண்ணே காலணு. அந்தச் சமயத்தில் நாகர்கோயில் மகாதேவனும் மற்றும் அவரது கணங்கள் யாவரும் புதுமைப்பித்தனது வீட்டில் இருந்தனர். நானும் இருந்தேன். 'விளம்பரத்தில் நாகர்கோயில் மகாதேவனின் பெயரை வெளியிடுவதற்கு முன்னுல் அவருக்கு அட்வான்ஸ் கொடுத்துவிட்டுச் செய்வதுதான் முறை' எனப் புதுமைப்பித்தன் சொன்னுர். அட்வான்ஸாக எதைக் கொடுப்பது? பக்கத்திலிருந்த குட்டித் தேவதை ஒன்று ஒரு வெள்ளி ரூபாயை எடுத்து நீட்டியது. 'பட முதலாளி' யான புதுமைப்பித்தன் அந்த ரூபாயை வாங்கி, நாகர்கோயில் மகாதேவனிடம் கொடுத்தார். மான சீகமான பரஸ்பர நம்பிக்கையோடு ஒப்பந்தம் நிறைவேறியது. இதன் பிறகு புதுமைப்பித்தன் ஊர் செல்லும் விஷயம் யோசிக்கப்பட்டது. மாலை நாலு மணி சுமாருக்கு புதுமைப் பித்தனுக்கு நூறு ரூபாய் எங்கிருந்தோ கடனுக வரவழைக்கப்பட்டது. புதுமைப்பித்தன் ரயிலுக்குக் கிளம்பினுர். ரூபாய் வந்து சேர்ந்த ஒரு மணி நேரத்துக்குள் கையில் மிஞ்சிய பணம் பத்து ரூபாய்கூட இல்லை. டாக்ஸி, ஊருக்கு வாங்கிச் செல்லும் பழ வர்க்கங்கள் முதலியவற்றுக்குப்

பத்துப் பதினைந்து ரூபாய் ஆகியிருக்கும். இது ஒன்றும் அதிகச் செலவும் அல்ல; அநாவசியச் செலவும் அல்ல. ஆனால் புதுமைப்பித்தன் அன்று ரயிலில் முதல் வகுப்பில் — கிட்டத்தட்ட எழுபத்தைந்து ரூபாய் டிக்கெட்டில் — பிரயாணம் செய்தார். 'பட முதலாளி' அல்லவா?

இந்த மாதிரியான சந்தர்ப்பங்கள் ஒன்றல்ல; இரண்டல்ல. எதை நினைத்துத் துக்கப்படுவது, எதை நினைத்துச் சிரிப்பது என்பதே தெரியவில்லை.

''தெரிந்த தொழிலை வைத்து லோகத்திலே பிழைக்க முடியாது போலிருக்கே'' என்று புதுமைப்பித்தன் சிருஷ்டித்த கடவுள் கந்தசாமிப் பிள்ளையிடம் பேசுகிருர். புதுமைப்பித்தன் தமக்குத் தெரிந்த தொழிலை வைத்துப் பிழைக்க முயன்றிருந்தால், நன்ருகவே பிழைத்திருக்கக் கூடும். ஆனல், 'தெரிந்த தொழிலை வைத்து ஓரளவாவது பிழைக்கலாம்; தெரியாத தொழிலை வைத்துப் பிழைக்கவே முடியாது' என்ற உண்மையை, பர்வதகுமாரி புரொடக்ஷன்ஸ் என்ற பகற்கனவு புதுமைப்பித்தனுக்குக் கற்றுக் கொடுத்து விட்டது

# புண்ணிய பூமி

30—1—48 அன்று வகுப்புவாத வெறியனுன கோட்ஸே மகாத்மா காந்தியைச் சுட்டுக் கொன்ருன், அந்த வகுப்புவாதி புஞ நகரவாசி; புஞ நகரப் பத்திரிகை ஒன்றின் ஆசிரியன். காந்திஜியின் கொலை நடந்த சமயத்தில் புதுமைப்பித்தன் பம்பாயிலிருந்த கே.டி. தேவர் என்னும் நண்பக்கு ஒரு கடிதம் எழுதினுர். கே.டி. தேவர் ஆர்வம் மிகுந்த தமிழ் அன்பர். இப்போது அவர் கோயமுத்தூர் சக்திக் காரியாலய அதிபராக இருக்கிருர். புதுமைப்பித்தனின் புஞ நகர வாசத்தின்போது அவரது நட்பைப் பெறும் பாக்கியத்தைப் பெற்றவர் தேவர். தேவருக்கு எழுதிய தமது கடிதத்தில் புதுமைப்பித்தன் பின்வருமாறு எழுதியிருந்தார்:

"....மகாத்மாவின் மேனி எரியுமுன்னம் புஞ எரிய ஆரம்பித்து விட்டது. புஞ என்ற வார்த்தை 'புண்ய' என்பதன் சிதைவு என்று சொன்னுர்கள். அதன் அர்த்தம் புரிய இத்தனை நாட்கள் ஆயிற்று. இருகண் குருடனைத்தானே நல்ல கண்ணுப் பிள்ளை என்பார்கள்! அதே மாதிரி சரித்திரத்தின் பாவத்தைக் கட்டிக் கொண்டது இந்த ஊர். எனக்கு இங்கு இருக்கப் பிடிக்கவில்லை...."

காந்திஜியைக் கொன்றவனைப் பிறப்பித்துவிட்ட பாவத்தால் புண்ணிய பூமி பாவ பூமியாக மாறியதைக் கண்டு புதுமைப்பித்தன் மனம் புழுங்கி எழுதியிருக்கிருர். ஆனுல், புஞ நகரம் வகுப்புவாத வெறியனைப் பிறப்பித்து விட்ட

பாவத்தை மட்டும் செய்யவில்லை; புதுமைப்பித்தனின் உயிரைக் குடிக்க வந்த க்ஷயரோகத்தையும் வளர்த்துவிட்ட பாவத்தையும் அள்ளிக் கட்டிக் கொண்டது.

புதுமைப்பித்தன் சென்னையிலிருந்தபோது அவருக்கு இருமல் அவ்வளவாக இருந்ததில்லை. ராயப்பேட்டை ஹைறோட்டில் குடியிருந்த சமயத்தில் சில சமயங்களில் அவர் கொடூரமாக இருமுவதுண்டு. ஆனால் அந்த இருமலை அவர் க்ஷயரோகம் என்று சந்தேகப்படவில்லை. மேலும், சித்த வைத்திய சோதனையில் பெரிதும் நம்பிக்கை கொண்ட புதுமைப்பித்தன், தம்மைச் சோதித்துப் பார்த்து விட்டதாகவும் அது க்ஷயரோகம் அல்லவென்றும், ஆஸ்துமாக் கோளாறு தான் என்றும் சொல்லிக் கொண்டார். மேலும், அந்த இருமல் எப்போதும், அல்லது தினம் தினமும் வருவதில்லை. என்றாவது ஒருநாள் அதிகமாகச் சுற்றியலைந்து விட்டு வந்தால் அல்லது அதிகப்படியாக சிகரெட் குடித்து விட்டால் தான் வந்து தொலைக்கும். இரும ஆரம்பித்தால், விடாமல் கண்ணீர் தெறித்துப் பொங்கும்வரை இருமுவார். அந்த இருமலை அவரோ, அவருடன் பழகிய நண்பர்களோ க்ஷயம் எனச் சந்தேகப்படவில்லை. மேலும், க்ஷயத்துக்குரிய சர்வசாதாரணமான அறிகுறிகள் எதுவும்கூட அப்போது தென்படவில்லை

ஆனால், புதுமைப்பித்தன் அந்தச் சமயத்தில் தமது உடம்பைக் கவனமாகப் பார்த்திருந்தால், பின்னால் அவர் க்ஷயரோகக் கொடுமைக்கு ஆளானதைத் தடுத்திருக்க முடியும். தம் உடம்பு விஷயத்தில் அத்தனை கவனம் செலுத்தாத புதுமைப்பித்தன் வெறுமனே சித்த வைத்தியப் பக்குவமான சியவனப் பிராசத்தையும், இருமலுக்கும் புகைச்சலுக்கும் உபசாந்தி அளித்துச் சமனப்படுத்தும் சில ஆங்கில மருந்துகளையும் உட்கொண்டதோடு சரி. முறைப்படி வைத்தியம் செய்து கொள்ளவில்லை, அது மட்டும் அல்ல. சென்ற அத்தியாயத்தில் குறிப்பிட்ட அக்னிப்பரீட்சையான பர்வதகுமாரி புரொடக்ஷன்ஸின் பிறப்பு புதுமைப்பித்தனின் இறப்புக்கும் ஓரளவு வழி கோலி விட்டது என்றே சொல்லலாம். ஏற்கெனவே நொம்பலப்பட்டு நோஞ்சானாகப் போன உடல்; எனவே, அதில் க்ஷயரோகம்

போன்ற ஆட்கொல்லி வியாதிகள் பற்றுவது சுலபம். புதுமைப்பித்தன் நல்ல சாப்பாடும் நல்ல தூக்கமும் ஓய்வும் பெற்று, உடம்பைக் கவனித்திருந்தால் அவரை நோய் அணுகாமல் போயிருக்கலாம். ஆனால் பர்வதகுமாரியோ அவரது பணத்தை மட்டும் உறிஞ்சினாள் என்று சொல்ல முடியாது; ரத்தத்தையே உறிஞ்சினாள். கைப்பணம் கரைந்தது; சாப்பாட்டுக்குக்கூடத் திண்டாட்டம்; பல நேரம் பட்டினி; எனினும் பட்டினியை வெளியில் காட்டிக் கொள்ள முடியாத, கடன் வாங்கக் கை நீளாத அந்தஸ்து; அதாவது சொந்தப்படம் எடுக்கும் முதலாளி அவதாரம்; அந்த அவதாரத்தைப் பரிபூரணமாக்குவதற்காக, படம் எடுக்கப் பணம் சேகரிப்பதற்காக, ஊர் ஊராய் வெட்டி அலைச்சல்; அலைந்தும் வெற்றி கிட்டாததால் ஏற்படும் சோர்வு; விரக்தி; இதன் காரணமாக ஏற்படும் மன உளைச்சல்; தூக்கமின்மை — இத்தியாதிச் சூழ்நிலைக்கு ஆளான புதுமைப் பித்தனின் உடலும் உள்ளமும் ஒடிந்து போனதில் ஆச்சரிய மில்லை. பர்வதகுமாரி புரொடக்ஷன்ஸ் புதுமைப்பித்தனுக்குப் பணத்துக்கு வகை செய்யாவிட்டாலும், நோய்க்குப் பாதை வகுத்துக் கொடுத்தது என்றே சொல்ல வேண்டும்.

எனவே புனா நகரத்துக்குச் சென்றபோது புதுமைப் பித்தனின் உடல்நிலை மிகவும் நொம்பலப்பட்டுப் போயிருந் தது; உடலின் பலவீனத்தைப் பயன் படுத்திக் கொண்டு நோய் ஆட்சி செலுத்தத் தொடங்கி விட்டது. மேலும் புதுமைப்பித்தனுக்குப் புனாவில் ஓயாத ஒழியாத உழைப்பு; சரியான கவனிப்பும் இல்லை; சரியான உணவும் இல்லை. எனவே நீறுபூத்த நெருப்புப்போல் உள்ளுக்குள் என்றோ குடிகொண்டிருந்த நோய் அவரை ஆட்டியெடுக்கத் தொடங்கி விட்டது. மரண தேவனின் கர்ப்பக் கிருஹ வாச லுக்குள் அடியெடுத்து வைத்துவிட்ட பிறகும், இனித் தனக்கும் வாழ்நாள் அதிகமில்லை என்று உணர்ந்துவிட்ட காலத்திலும், அவர் உழைத்தார். ஆனால், அவர் 'ராஜ முக்தி'க்கான வசனத்தை முழுதும் எழுதி முடிப்பதற்குள் க்ஷயரோகம் அவரை முழுதும் ஆட்கொண்டு விட்டது. எனவே புதுமைப்பித்தன் உடல்நிலை காரணமாக ஊருக்குத் திரும்பும்படி நேர்ந்தது.

புதுமைப்பித்தன் புனாவில் இருந்தபோது தமது மனைவிக்கும் நண்பர்கள் சிலருக்கும் எழுதிய கடிதங்களே அவரது நோயின் பயங்கரத்தை எடுத்துக் கூறும். புதுமைப்பித்தன் புனாவில் எவ்வளவு தூரம் கஷ்டப்பட்டார் என்பதை முழுதும் அறிந்த நண்பர்கள் இல்லை; அந்தப் பரிதாபத்தைப் பார்க்கும், பார்த்துக் கண்ணீர் வடிக்கும் துர்ப்பாக்கிய நிலை அவரது நண்பர்களுக்கோ உறவினர்களுக்கோ லபிக்கவில்லை. எனவே அவரது கடிதங்கள்தான் அவரது புனா வாசத்தின் நிலையைத் தெரிவிக்க வேண்டும்.

புதுமைப்பித்தன் புனா போய்ச் சேர்ந்த புதிதில் அவரது மனைவிக்கு எழுதிய கடிதத்தில் தமது கஷ்டங்களைத் தெரிவித்திருந்தார். அதைத் தொடர்ந்து எழுதிய கடிதங்களிலும் தெரிவித்தார். பின்வரும் பகுதிகள் அவர் தமது மனைவிக்கு எழுதிய கடிதங்கள் சிலவற்றிலிருந்து எடுத்தவை. புதுமைப்பித்தனை க்ஷயரோகம் பற்றிய கொடுமையை இவை கூறும்.

**தேதி: 7—11—47**

''....புனா நகரம்; இங்கு நான் படும் அவதி சொல்லி முடியாது. ஒரு நாள் இருந்த இடம் மறுநாள் இல்லை. மராட்டி பிராமணச் சாப்பாடு. அதைத் தெய்வந்தான் மெச்ச வேண்டும். குளிக்கவோ, மற்ற காரியங்களுக்கோ வசதி கிடையாது. வந்து இரண்டு நாளாச்சு. கட்டிட வேலை நடக்கிறது. கக்கூஸ் கட்டிக்கொண்டிருக்கிறார்கள் ....போஷணைக்குக் குறைவில்லை என்றாலும் உடம்பில் வலு குறைகிறது. கை வீக்கம், வலி அப்படியேதானிருக்கிறது, குணம் இல்லை. என் தொல்லைகளை உனக்கு வருணித்துக் கொண்டிருப்பதால் யாதொரு பிரயோஜனமுமில்லை....''

**தேதி: 20—12—47**

''....நான் என்னைப்பற்றி நினைப்பதைவிட மோசமாக உன்னால் என்னைப்பற்றி நினைக்க முடியாது....உனது சமீபத்திய கடிதம் வந்த பிறகு எழுதாமலிருந்ததற்குக் காரணம் உண்டு. நான் என்னைப் பார்த்துப் பயந்தேன். உன்னைப் பயப்பட வைக்க விரும்பவில்லை. ஆனால் என்ன

செய்வது எனத் தெரியாமல் தத்தளித்தேன். உடம்பு நோய் என்னவென்று சொல்லத் தயங்கினேன். எனக்கு வந்திருக்கும் நோய் T.B..........''

தேதி: 4—1—48

''....எனது நோயைப் பற்றி ஒரு டாக்டருடைய தீர்ப்பினுல் திருப்தி யடைந்து விடாமல் வேறு இரண்டு டாக்டர்களைச் சந்திக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன். முடிவு தெரிவதற்காகக் காத்திருக்கிறேன். டாக்டர்கள் தப்பிதம் செய்வதும் உண்டு. இங்கே உள்ள வேறு ஒரு எக்ஸ்ரே டாக்டரிடம் செல்லுகிறேன். இங்கு பிரபல ஆயுர்வேத டாக்டர் ஒருவர் இருக்கிருர். அவரையும் கலந்து கொள்ளப் போகிறேன். இது தவிர உடம்பில் பலவீனம்தான் ஜாஸ்தி. அதற்காக இருந்த இடத்திலிருந்தே வேலை பார்க்கிறேன். சாப்பிட்டுவரும் ஒரு மருந்தால் கபம் வருவது நின்றிருக்கிறது. மூச்சடைப்பு, இளைப்பு ஜாஸ்தி. பழம், பால், ஹார்லிக்ஸ், சாப்பாடு ஆகியவைதான் உணவு. மீன் எண்ணெய் உடம்பில் தேய்த்துக் குளிக்கச் சொன்னுர்கள். அது நாளை முதல் ஆரம்பம். முட்டை சாப்பிடப் பிடிக்கவில்லை. அதற்குப் பதில் தேடுகிறேன். நிறையச் சத்துள்ள ஆகாரம் சாப்பிட வேண்டும், மலச்சிக்கல் வராமல் பார்க்கவேண்டும் என்பது டாக்டர் உத்தரவு. அடிக்கடி வந்த காய்ச்சல் இரண்டு நாளாக இல்லை. இங்கே அருகில் சிம்மகட் என்ற இடம் (காட்டுப் பிரதேசம்) உண்டு. அதிலுள்ள சுனைநீர் T.B.க்கு மருந்து. அதைத் தினமும் சாப்பிடு என்று டாக்டர் சொல்ல, அதற்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். அது இங்கு கொண்டுவந்து விற்கப் படுகிறது. சற்றுக் குணம் இருந்தால் உன்னையும் குழந்தையையும் வரவழைத்து அங்கு போய்த் தங்க உத்தேசம்....''

''பலவீனத்தால்தான் ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது. தலைக்கு எண்ணெய் கிடைத்தால் தேவலை. இங்கு கிடைப்பதில்லை.... ஆரம்பத்தில் கவனிக்கவே இவ்வளவு அவசரப் படுகிறேன். நீ பயந்துகொண்டு கிடப்பதைப் போல, கவலைப்பட அவசியமே கிடையாது. குழந்தைக்கு

என்னைக் கூப்பிடத் தெரிவதால் உன் மனம் கலங்குகிறது. அத்தனையையும் கேட்டுக்கொண்டு ஆயிரம் மைலுக்கு அப்பால் கிடந்து கவலைப்படுவது எப்படி இருக்கும்?....''

**தேதி: 24—1—48**

''....நீளமாக எழுதக் கையில் வலுவில்லை. மூன்று நாளாக 102டிகிரி வரை வந்து போகும் ஜுரம், இருமல். இன்று சாயங்காலம் X-Ray போட்டோவும் டாக்டர் அபிப்பிராயமும் கிடைக்கும். இது T. B. தானா என்பது தெரிய வேறு டாக்டர்களையும் கலந்துகொள்ளப் போகிறேன் என்னைக் கவனிக்க ஆள் தேவை. ஆனால் உன்னைப் போட்டு இழுத்தடிக்க எனக்குப் பிரியமில்லை. மேலும் குழந்தையைக் கவனிக்கிறவள் என்னிடம் வரக் கூடாது....''

**தேதி: 26—1—48**

''....மேலும், சுவாசப்பை இரண்டிலுமே கபம் பற்றியிருக்கிறது. வியாதி ஒட்டுவாரொட்டி. ஆகையால் கூடுமானவரை தனிச் சாமான் புழங்கவும் வாயிலே துணி மூடிப் பேசவும் உத்தரவு. படுக்கையை விட்டு எழுந்து நடமாடக் கூடாது. மற்றபடி அளவாக வேலை செய்யலாம் என்பது டாக்டர்களின் யோசனை. இவைகளைத் தெரிந்து கொண்டு மருந்து வாங்கித் திரும்பும்போது மறுபடியும் ஜுரம் 103. காய்ச்சல் இப்படி வந்து போவது இந்த நோயின் குணம்....''

**தேதி: 5—2—48**

''....நாலு நாட்களாக எனக்கு வெற்றிலை இல்லை என்றால் நிலைமை எப்படி என்று யோசித்துப் பார்....எனக்கு இன்றும் ஜுரம் வருகிறது. 102 டிகிரி ஜுரத்துடன் எழுதுகிறேன். இந்த மாதக் கடைசியில் அங்கு வந்து சேர முடியும். நான் அங்கு வந்த பிற்பாடு பரிதாபம் தெரியும்....''

தேதி: 9—2—48

"....காந்தி கொல்லப்பட்டார். ஊரடங்குச் சட்டம் போட்டு நடமாட்டத்தைத் தடுத்து விட்டதால் மூன்று நாட்களாக வெளியே போகவில்லை. ஸ்டுடியோவுக்குப் பக்கத்தில் லாட்ஜ் இருக்கிறது. ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் ஹோட்டல் இருக்கிறது. இடையில் தூரம் 6 மைல்; ஜனப் போக்குவரத்து நடமாட்டம் தடை. யார் கேலி செய்தாலும் மருந்துகளையும் தெர்மா மீட்டரையும் போர்வையையும் எடுத்துச் செல்லும் வழக்கம் இருந்ததால் நோயைக் கவனித்துக் கொள்ள முடிந்தது. கைவசமிருந்த மருந்து காலி. மகாத்மா காந்தி அஸ்தி கரைக்கும்வரையில் கடை அடைப்பு. எங்கும் தீப்பற்றி எரிவதால் வெளியே போகவே முடியாது. இன்று காய்ச்சல் இல்லாததனால் கொஞ்சம் நிம்மதி. நான் இப்போது சிகிச்சை செய்து கொள்ளும் டாக்டர் ரொம்பக் கெட்டிக்காரர். அவர் மருந்தின் விசேஷம் காய்ச்சலை நிறுத்தி இருக்கிறது. மூன்று மாதம் படுத்த படுக்கையில் இருந்தால் குணப் படுத்த முடியும் என்று சொல்கிறார். பேசக்கூடாது என்பது உத்தரவு. குணமாகி விடும்; பயப்படாதே. வீண் பயங்கர நினைவுகளால் மனசை அலட்டிக் கொள்ளாதே...."

தேதி: 19—2—48

"எனக்கு உடம்பு வரவர மோசமாகிக் கொண்டுதான் வருகிறது. சென்ற சில தினங்களாகச் சாப்பாடு வெளி வந்து விடுகிறது. பலவீனம் உண்டு. உடம்பில் வலு இல்லாததனால் நடமாட்டம் கஷ்டம்; என்னால் மூன்று மாடி ஏற முடியாததால் என்னை இங்கு கொண்டு வந்து வைத்திருக்கிறார்கள்...."

தேதி: 8—4—48

"....உடல் நிலை மோசமாகி விட்டது. அதனால்தான் போட்ட பிளான்கள் எல்லாம் பொய்யாகி விட்டன. வந்த பிறகு என் உடம்பு தேறினால் அது உன் அதிருஷ்டம் தான்...."

புதுமைப்பித்தன் எழுதிய மேற்கண்ட கடிதங்களி லிருந்து அவரது துயரம் நிறைந்த சுய சரித்திரத்தின் சோகக் குரலைத்தான் நாம் கேட்க முடிகிறது. நாளுக்கு நாள் நோயின் நிலைமை வெகுவாக முற்றி வந்தது. அதன் பின்னர்தான் புதுமைப்பித்தன் ஊருக்குத் திரும்பிவிட யோசித்தார்.

1948-ம் வருஷ ஆரம்பத்தில் தலை தூக்கிய அவரது நோய் மூன்று மாத காலத்துக்குள்ளாக அவரை மிகவும் குலைத்து விட்டது. ஏப்ரல் மாதத்தில் நிலைமை படுமோசம். எனவே அவர் ஊருக்குப் புறப்பட்டார். 1948-ம் வருஷம் மே மாதம் 5-ந் தேதியன்று அவர் வந்து சேர்வதாக அனுப் பிய தந்தி அவரது மனைவியின் கையில் கிடைத்தது.

புனு என்ற புண்ணியபூமி புதுமைப்பித்தனின் உயிரை முடிக்கும் பாவத்தையும் சுமந்து கொள்ளாது, அவரை அவரது அந்திம காலத்தில் திருவனந்தபுரத்துக்கு வழி அனுப்பி வைத்துவிட்டது.

# அந்திம காலம்

""புதுமைப்பித்தனுக்கென்ன? நல்ல சான்ஸ். பாகவதர் படத்துக்கு எழுதப் போயிருக்கிறார். இனி என்ன கவலை?'' என்று எழுத்தாள நண்பர்கள் பேசிக்கொண்டார்கள்.

''பாகவதர் உனக்குப் பத்தாயிரம் கொடுத்ததாகக் கேள்வி. அதை ஏதாவது நிலத்தில் போடு'' என்று புதுமைப்பித்தனுக்குக் கடிதம் எழுதினார், அவரது சித்தப்பா.

''அவனா? கிடைத்த பணத்தைப் பெண்டாட்டி வீட்டில் கொண்டு போய்க் கொடுத்திருப்பான். நிலமாவது, வயலாவது?'' என்று அவரது உறவினர்கள் சலித்துக் கொண்டார்கள்.

ஆனால் 1948-ம் வருஷம், மே மாதம் முதல் வாரத்தில் திருவனந்தபுரம் ஸ்டேஷனில் வந்திறங்கிய புதுமைப்பித்தன் சம்பாதித்துக்கொண்டு வந்தது காசல்ல; காச நோய்! இந்த நிலைமை ஏன் என்பது பலருக்குப் புரியாத புதிராக இருக்கலாம். புதிரை விடுவிப்பதற்கு நான் விரும்பவில்லை. ஆனால், திருவனந்தபுரத்துக்குத் திரும்பி வந்த புதுமைப்பித்தனின் உண்மையான நிலை என்ன என்பதைப் பின்வரும் கடிதமே காட்டும். யாழ்ப்பாணம் 'ஈழகேசரி' பத்திரிகை ஆசிரியரான ராஜ அரியரத்தினம் புதுமைப்பித்தனிடமும் தமிழ் இலக்கிய கர்த்தாக்களிடமும் பேரன்பு கொண்டவர். தமிழிடம் அவர் காட்டும் ஆர்வத்தைவிட, தமிழன்பர்களிடம் அவர்

காட்டிவரும் ஆர்வம் பெரிது. அவருக்குப் புதுமைப் பித்தன் தமது அந்திம காலத்தில் ஒரு கடிதம் எழுதினர்:

தேதி: 17—6—48

''....கடந்த இரு வருடங்களாக எனக்குப் பொல்லாத காலம். இப்போது நோய் என்னைப் படுக்கையில் போட்டு விட்டது. துரதிருஷ்டமான இந்த நோய் உடல் நிலை தளர்ந்திருந்த காலத்தில் என்னைப் பிடித்துக் கொண்டது. நான் அப்போது பாகவதரின் படத்துக்காகப் புனா சென்றிருந்தேன். இப்போது எனது பண நிலை மகா மோசமாகி விட்டது. நான் நோயினின்றும் குணமடைவதற்காக யாழ்ப்பாணத்து எழுத்தாளர்களும் வாசகர்களும் எனக்குப் பண உதவி செய்ய முடியுமா? இதைப் பற்றிச் சிந்தித்து உடனே பதில் எழுதுக....''

இதேபோல் சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், கண. முத்தையாவுக்கும் புதுமைப்பித்தன் ஒரு கார்டு எழுதியிருந்தார். அதுவும் மே மாத மத்தியில்தான். ''எந்தச் சிறு தொகையும் இந்த நேரத்தில் பேருதவியாயிருக்கும்'' என்று அதில் குறிப்பிட்டிருந்தார்.

இதற்குப் பிறகு, 24-6-48ந் தேதியன்று திருவனந்தபுரம் எஸ். சிதம்பரம் என்னும் நண்பர் என்னைப் பார்க்க வந்திருந்தார். நான் அப்போது திருநெல்வேலியில் இருந்தேன். வந்தவர் எனக்கும் இதுபோன்ற ஒரு செய்தியைத் தான் புதுமைப்பித்தனிடமிருந்து கொண்டு வந்திருந்தார்.

''தமிழ் நாட்டுக்கு நான் செய்த சேவை தகுதியானது. மறுக்க முடியாதது. ஆனால் நான் இன்று சாகக் கிடக்கிறேன். வறுமையால் சாகக் கிடக்கிறேன். எனவே தமிழ் நாட்டாரைப் பார்த்து 'நீங்கள் எனக்கு உதவி செய்ய வேண்டும்' என்று கேட்க எனக்கு உரிமை உண்டு. நீ மற்ற எழுத்தாளர்களோடு கலந்து கொண்டு என் நிலையைப் பற்றிப் பத்திரிகைகளில் அறிக்கை வெளியிட்டு

எனக்கு உதவி தேடு. என் நிலையைப் பற்றி நானே வேண்டு மானாலும் எழுதித் தருகிறேன்....''

இதுவே அவர் அனுப்பியிருந்த செய்தி; கட்டளை.

எண்ணற்ற சிறுகதைகளையும், சிறந்த கட்டுரைகளை யும், அருமையான கவிதைகளையும் எழுதி எழுதிக் குவித் தும் சலியாத புதுமைப்பித்தனால் தமது அந்திம காலத்தில் ஒரு வரி கூட எழுத முடியவில்லை; அதாவது, அவராக இருந்து எதுவும் எழுதக் கூடவில்லை. அவரது அந்திம காலத்தின் கடிதங்கள் எல்லாம் அவர்தம் கைப்பட எழு தியவையல்ல; யாரையோ விட்டு எழுதச் சொல்லி, அவர் கையெழுத்து மட்டும்தான் போட்டிருந்தார். எனவே புதுமைப்பித்தனின் அந்திம தசையில் இருந்த அவரது உடலின் பலவீனத்துக்கும், நிதி நிலைமையின் பலவீனத் துக்கும் இந்தக் கடிதங்களே தகுந்த அத்தாட்சிகள்.

புதுமைப்பித்தன் திருவனந்தபுரத்துக்கு வந்து சேர்ந்த போது அவருக்குத் துணை அவரது மனைவி, மகள், உற வினர்கள் தாம்; திருவனந்தபுரத்து நண்பர் சிதம்பரம் புதுமைப்பித்தனின் அந்திம காலத்தில், அவர் சாகும்வரை உடன் இருந்தவர். அவர் பெற்றது பாக்கியமா, துர்ப்பாக் கியமா என்பது பார்க்கின்ற கோணத்தைப் பொறுத்தது. திருவனந்தபுரம் சிதம்பரம் புதுமைப்பித்தனிடம் பெரு மதிப்புக் கொண்டவர். புதுமையான இலக்கியங்களில் விருப்புக் கொள்பவர். அவரது இலக்கிய ஆர்வத்தின் பயனாக 'கவிக்குயில்' என்ற பெயரில் இரண்டு வருஷ காலமாக, இரு இலக்கிய மலர்களை வெளியிட்டார். அவரும் எழுதி வந்திருக்கிறார். புதுமைப்பித்தனின் அந்திம காலத்தைப் பற்றி அவரும், புதுமைப்பித்தனின் மனைவி கமலாம்பாளும் தெரிவித்த செய்திகளை இன்று நினைத்தா லும்கூட, மனம் நடுங்குகிறது; ஒரு நிலைப்பட மறுக் கிறது....

புதுமைப்பித்தன் ஏற்கெனவே மிகவும் நோஞ்சான் பிறவி; ஒல்லியாகக் குச்சி போலத்தான் இருப்பார். அதிலும் உடலை உருக்கிக் கரைக்கும் க்ஷயரோகமும் பீடித்துக்

கொண்டால், அவரது உடல் இன்னும் எப்படிக் கரைய முடியும் என்பதைக் கற்பனை பண்ணிப் பார்க்க முடியாது. விறகுக் கட்டைபோல் முண்டும் முடிச்சுமாக வெளியே துருத்தித் தோன்றிய எலும்புக் கூட்டம்தான் மிச்சம். 'என்பு தோல் போர்த்த உடம்பு' என்பார்களே, அது வார்த்தைக்கு வார்த்தை உண்மை. அதில் சதைக்கு இடமே கிடையாது. தாடி வளர்ந்து முகத்தை விகாரமாக்கிக் கொண்டிருந்தது. இத்தனைக்கும் மேலாக ரத்தத்தையும் கபத்தையும் உதைத்து வெளித் தள்ளும் ஓயாத இருமல்; ரோகத்தின் கொடுமையால் உண்டாகும் ஜுரம்.

புதுமைப்பித்தன் வீடு வந்து சேர்ந்தார். நடக்க இயலாமல் கம்பூன்றி நடந்து கொண்டு ரயிலைவிட்டு இறங்கினார். கைத் தாங்கலாகத்தான் அவரை வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்க்க முடிந்தது. சுற்றி யிருந்தவர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லக்கூட அவருக்குத் திராணியில்லை. பேசுவதற்கு வாய் அசைந்தது; வார்த்தை அசையவில்லை. வீட்டுக்குள் வந்து ஒரு தம்ளர் காப்பி சாப்பிட்டார்; காப்பி சாப்பிட்ட தெம்பில் அவர் பேசியது இதுதான்: ''இன்னைக்குத் தாண்டா நல்ல காப்பி கிடைச்சிது.'' பிறகு மௌனம்.

அவர் வந்து சேர்ந்த மறுநாள் நண்பர் சிதம்பரம் அவரைப் பார்க்கச் சென்றிருந்தார். புதுமைப்பித்தனின் தேக நிலையைக்கண்டதும் அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்த ஆச்சரியத்தில் அவர் கேட்டது இதுதான்: ''உடம்பு இப்படி இருக்கையில் இவ்வளவு தூரம் எப்படி வந்தீர்கள்?''

புதுமைப்பித்தன் சிரித்துக்கொண்டே சொன்னார்:

''எல்லாத்துக்கும் துணிஞ்சிதான் வந்தேன். உணர்ச்சி தானப்பா காரணம். அதோ நிற்கிறாளே அவ நினைப்பு தான் (தினகரியின் ஞாபகம்) என்னை இங்கே இழுத்து வந்தது'' என்று கூறிவிட்டுத் தினகரியைப் பக்கத்தில் அழைத்து அவள் தலையை அருமையோடு தடவிக் கொடுத்

தார்; பிறகு, ''என்னைப்போல் இருக்கிறவன் எல்லாம் உணர்ச்சிப் பெருக்கால் காரியத்தைச் செய்றது. அபாயத்தையோ உணர்வதில்லை. பிறகு அதன் பலாபலன்களை அனுபவித்து வருகிறது. சரிதானேப்பா?'' என்று கேட்டார்.

புதுமைப்பித்தன் திருவனந்தபுரத்துக்கு வந்து சேர்ந்த போதே அவருக்குத் தம் வாழ்வில் நம்பிக்கை யற்றுப் போய்விட்டது. ஆனால் சுற்றியுள்ளவர்களோ எப்படியும் வைத்தியம் செய்து குணமாக்கிவிட வேண்டும் என்று முயன்ருர்கள். வந்தவுடனேயே டாக்டரைப் பார்த்தார்கள். ''நோய் முற்றிவிட்டது. நாகர்கோயில் போய்ப் பாருங்கள்'' என்று கையை விரித்துவிட்டார் டாக்டர். 'நாகர்கோயிலுக்குப் போவதைவிட, பெங்களூர் நல்லது' என்று சிலர் அபிப்பிராயம் சொன்னுர்கள். பெங்களூர் வைத்தியரோ ஆங்கில வைத்திய முறையில் அவரைக் குணமாக்கும் சக்தி கிடையாதென்றும், பேசாமல் ஊர் திரும்பி ஒய்வு எடுத்துக் கொள்வதைத் தவிர வேறு மார்க்கம் இல்லை என்றும் கூறிவிட்டார். புதுமைப்பித்தன் மீண்டும் திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார்.

மரணம் நெருங்கி விட்டது என்பதைப் புதுமைப்பித்தன் உணரத் தொடங்கிவிட்டார். ஆனால் புதுமைப்பித்தன் தமிழாக்கி எழுதியிருக்கிருரே, அமெரிக்க ஆசிரியர் ஜாக் லண்டனின் 'உயிராசை' என்ற கதை, அதில் காணும் உயிராசையைப் போலத்தான் அவரது மனநிலை இருந்தது. சாவதில் துன்பமில்லை; வாழ்வதில்தான் துன்பமிருக்கிறது. எனினும் மனிதன் வாழத்தான் விரும்புகிருன்! புதுமைப்பித்தன் வாழத்தான் விரும்பினுர். எனவே பெங்களூரிலிருந்து திரும்பி வந்தவுடன் ஆயுர்வேதச் சிகிச்சை செய்து கொள்ள ஆரம்பித்தார்.

புதுமைப்பித்தனை அடிக்கடி போய்ப் பார்த்து வந்தார் சிதம்பரம். அவர் ஒரு நாள் போனபோது அங்கு புதுமைப்பித்தனுக்குச் சந்தனக்கல்லில் ஏதோ மருந்து அரைத்துக் கொண்டிருந்தார்கள். அதைச் சிதம்பரம் கண்டார்.

''டி.பி.க்கு ஆயுர்வேத சிகிச்சையான்னு ஆச்சரியப் படாதே, சிதம்பரம். பெங்களூர் டாக்டர் 'லங்சே' (சுவா சாசயங்கள்) இல்லேன்னு சொல்லி விட்டான். இந்த ஊர் டாக்டர் என்னாலே முடியாதுன்னு சொல்லி விட்டார். கடைசியிலே இந்தச் சிகிச்சை'' என்று சிரித்துக்கொண்டே சொன்னார் புதுமைப்பித்தன்.

''சரி. மிஞ்சிறை தெரியுமா, சிதம்பரம்?''

புதுமைப்பித்தனே சொல்ல ஆரம்பித்தார்:

''மிஞ்சிறைன்னா நைடதம் மாதிரி ஒரு நூல் இல்லே. ஒரு ஊர். அங்கே ஒரு வைத்தியன் இருக்கான். அவன் சிகிச்சைதான் இப்போ.''

புதுமைப்பித்தன் தமது அந்திம காலத்தில் ஒருபுறம் வேதனையுடனும் ஒரு புறம் சிரிப்புடனும்தான் பேசினார். புனா விஷயத்தைப் பற்றி அவர் சொன்னது இதுதான்: ''உலகம் ஒரு மாதிரியானது. நேரிலே கேட்டாலே பணம் வராது. நோயோடு படுத்துவிட்டால் கேட்க வேண்டுமா? பணத்தைக் குடுத்தால் ஆசாமி எங்கே ஓடிப் போயிடு வானோன்னு பயம்....படுக்கையில் விழுவது வரையில்தான் மனுசனுக்கு நிலே, கௌரவம் எல்லாம்....ஆனால், அந்தக் கூட்டத்திலே திறமை அந்தச் சீக்குக்கார மனுசனிடம் தானப்பா இருந்தது!''

சுகத்தை விரும்பிச் சென்ற அவரது புனா வாழ்க்கை அவருக்கு வேதனையைத்தான் பரிசாகத் தந்துவிட்டது. ஆனால் அந்த நரக வேதனையைச் சாகும்வரையிலும் தாங் கிக் கொண்டிருந்த புதுமைப்பித்தன், ஹாஸ்யமாக அவரது வழக்கமான பாணியிலேயே பேசினாரென்றால், அவரது மனப்பண்பையும் துணிவையும் கண்டு பாராட்டுவதை விட, அஞ்சத்தான் முடியும். சாகும் வரையிலும் அவர் நன்றாகப் பேசினார். அந்த நோயின் வாதையிலும் அவர் கேட்டார்:

''இலக்கிய உலகம் எப்படி இருக்கு? எனக்குப் படிச் சுத் தெரிஞ்சிக் கொள்ளச் சத்தியில்லே. நீ சொல்லியாவது தெரிஞ்சிக்கிடுதேன்'' என்றார் புதுமைப்பித்தன்.

சிதம்பரம் ஏதேதோ சொன்னார்; அதையெல்லாம் கேட்டுவிட்டுப் புதுமைப்பித்தன் பதில் சொன்னார்: ''சிதம்பரம், இலக்கிய ஆசை உனக்கு உண்டு. இருக்கட்டும். உன் முழுநேர உழைப்பையும் அதற்காகச் செலவழித்து விடாதே. இலக்கியத்தைத் தொழிலாகக் கொண்டு விடாதே. அது உன்னைக் கொன்றுவிடும். இலக்கியம் வறுமையைத்தான் கொடுக்கும். அதைப் பொழுது போக்காகவே வைத்துக்கொள்.''

சாவதற்கு முந்திய நாளில்கூட அவர் இலக்கியத்தைப் பற்றிப் பேசினார்: ''இலக்கியம் வாழ்ந்து கொண்டிருக்கிறதா? பின்னே என்ன செய்யும்? நான் ஒருத்தன் செத்துப் போகிறதாலே, இலக்கியம் சாகணும்னு நினைக்கணுமா? செத்துப் போனா, வேண்டியவர்கள் எல்லாம் கட்டுரை எழுதித் துக்கம் கொண்டாடுவார்கள். கொஞ்ச நாள் கழிஞ்சி போனா. விஷயமே மறந்து போகும்....''

அவரது மனசில் பழைய நினைவுகள், தமது வாழ்க்கைப் பாதையின் நொடி நிறைந்த பயணம்—எல்லாம் உருவாகித் திரண்டிருக்க வேண்டும். புதுமைப்பித்தன் மீண்டும் பேசினார். அது சிதம்பரத்துக்கோ, தம்மைச் சுற்றியுள்ளவர்களுக்கோ அல்ல. தமக்குத் தாமே பேசிக்கொண்டார்: ''எங்கேயோ பிறந்தேன். எங்கேயோ வளர்ந்தேன். யார் யாரோ என்னை வளர்த்தார்கள். கடைசியில் திருவனந்தபுரத்தில்தான் நம்ம முடிவு போல இருக்கு... ''

புதுமைப்பித்தன் செத்துக் கொண்டிருந்தார். 'மகா மசான'மான மவுண்ட் ரோட்டில், யாருடைய கவனிப்புக்கும் ஆளாகாது செத்துக் கொண்டிருந்த துலுக்கப் பிச்சைக்காரனைப் பற்றி, அவர் கதை எழுதியிருக்கிறாரே, அதுபோல் அவர் செத்துக் கொண்டிருந்தார். இலக்கிய சேவகர்கள் புதுமைப்பித்தன் எங்கிருக்கிறார் என்ற விஷயம்கூடத் தெரியாமல், அவர்கள் காரியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்; அதே வேளையில் புதுமைப்பித்தன் நிராதரவான நிலையில் நாளுக்குநாள் செத்துக் கொண்டிருந்தார்.

புதுமைப்பித்தன் இருந்த நிலையில் யாரிடமிருந்தேனும் பண உதவி சென்றிருந்தால், அவர் மகிழ்ந்திருக்கக்கூடும் என்று நினைக்கலாம். ஆனால், அந்த மன நிலை அவருக்கு இல்லை; அந்திம தசையில் அந்த மேதையின் மனப்பக்குவம் வேறு மாதிரி மாறியிருந்தது.

"மணியார்டர் வந்தா, எவ்வளவு சந்தோஷமாயிருக்கும்? நான் இப்போ எனக்கு வரப்போகிற மணியார்டரைத்தான் எதிர்பார்த்துக்கிட்டிருக்கேன். புரியவில்லையா? சாவைத்தானப்பா நான் மணியார்டரை எதிர்பார்ப்பது போல எதிர்பார்த்திருக்கேன்." என்று கூறிச் சிரிக்க முயன்றார்.

சாவதற்கு முந்திய தினம் புதுமைப்பித்தன் சிதம்பரத்திடம் தமது பாட்டரி விளக்கைக் கொடுத்து. "இதுக்கு பாட்டரி போட்டு அனுப்பு" என்று சொன்னார், விளக்கைச் சிதம்பரத்தின் கையில் கொடுத்துவிட்டு, "எழுத்தாளனுக்கே ஒளி பேரிலேதான் ஆசைபோலிருக்கு. நான் போகிற பாதையை யெல்லாம் வெளிச்சமாக்க விரும்பினேன். இப்போ இருட்டிலே நடக்க ஒளியை விரும்புகிறேன்...."

புதுமைப்பித்தன் வீட்டின் இருட்டில் நடக்கத்தான் பாட்டரியை நம்பினார்; ஆனால், அவரது மனத்தைக் கவிந்த சாவின் நிழலை, மரணத்தின் இருட்டைப் போக்குவதற்கு அவருக்கு மார்க்கமே இல்லை. அவர் இருட்டிலே மறைந்து போவதற்காகக் காத்திருந்தார். உலகத்துக்குத் தமது இலக்கியத்தினால் ஒளி தந்த புதுமைப்பித்தன் தாம் மட்டும் இருட்டிலே மறைந்து போவதற்கு அஞ்சவில்லை. சாகின்ற காலத்திலேயும் அவர் மரணத்தைச் சிரித்துக் கொண்டுதான் வரவேற்றார்; ஆனால் அவருக்கு இருந்த ஒரே கவலை யெல்லாம் தமது மரணம் பிறர் பார்த்துப் பயப்படும்படியாகக் கோரமாகவோ, விகாரமாகவோ இருந்துவிடக் கூடாதே என்பதுதான்.

புதுமைப்பித்தனின் பூதவுடலின் கடைசி வாழ்நாள்; அதுதான் ஜூன் மாதம் 30-ம் தேதி. அன்றிரவு புதுமைப்

பித்தன் தங்கியிருந்த வீட்டின் சூழ்நிலையில், அங்குள்ளவர்களின் முகங்களில், பேச்சு வார்த்தைகளில் சாவின் பயங்கரம் படர்ந்து பரவ ஆரம்பித்தது.

புதுமைப்பித்தன் செத்துக்கொண்டிருந்தார்...

உடம்பெல்லாம் வியர்வை பெருகிப் பெருகி ஓடுகிறது. கமலாம்பாள் துடைக்கிருள். சுற்றியுள்ளவர்கள் வாய் பேசாது பார்த்துக் கொண்டிருக்கிருர்கள். புதுமைப் பித்தன் ஒருவரே அப்போது பேசினுர்:

''கமலா, கடைசியாக இந்த உலகத்துக்கு நான் விட்டுச் செல்வது ராஜ முக்திப் படமும், தினகரியும்தான். கவலைப்படாதே, உன்னை நல்ல நிலையில் வைக்க விரும்பினேன். ஆசைப்பட்டேன். ஆனுல் விதி என்னை இந்தக் கோலத்துக்குத்தான் கொண்டு வந்து விட்டது....''

30-6-48. அன்றிரவுக்குப் பின் உலகுக்கெல்லாம் விடிந்தது; ஆனுல் புதுமைப்பித்தனுக்கு அன்றிரவு விடியவே இல்லை. புதுமைப்பித்தன் காலமானுர்....

அவரது மனைவியும் உறவினரும் கண்ணீர் வடித்தார்கள்; கதறினுர்கள்; புலம்பினுர்கள்....

''வானத்து அமரன் வந்தான் காண்;
வந்தது போல் போனுன் காண்!''

என்று புலம்பவில்லை. ''எழுதி எழுதிக் கையும் வீங்கிற்றே; உயிரும் கொடுத்தாயே!'' என்றுதான் கமலாம்பாள் புலம்பினுள்....

அந்தப் புலம்பலே வீடு நிறைந்து ஒலித்தது....

## 'தென் திசைக்கே சென்றுவிட்டார்!'

**இன்றல்லோ கம்பன் இறந்த நாள்; புன்கவிதை**
**இன்றல்லோ ராச சபைக்கு ஏற்குநாள்—இன்றல்லோ**
**பூமடந்தை வாழ, புவி மடந்தை வீற்றிருக்க**
**நாமடந்தை நூல் வாங்கும் நாள்!**

கவிச் சக்கரவர்த்தி கம்பன் இறந்துபட்டபோது ஒரு கவிஞன் பாடியதாக வழங்கப்படுகிறது, இந்தப் பாட்டு. ஒரு முறை புதுமைப்பித்தன் இந்தப் பாட்டைக் கம்பனே தான் பாடியிருக்கிருன் என்று என்னிடம் வாதித்தார்; சாதித்தார். அவரது வாதம் என்ன தெரியுமா? சரஸ்வதியின் தாலிப் பாக்கியம் தறிபட்டுப் போயிற்று என்று நாக்கில் நரம்பின்றிச் சொல்ல அவன் ஒருவனுக்குத்தான் துணிச்சலும், கலைத்தேவியிடம் அத்தனை தோழமை உணர்ச்சியும் உண்டு என்பதே. 'தனது கவிதையின் மேதா விலாசம் உணரப்படாமல் போவதையும், அதே வேளையில் வறட்டு வெள்ளைக் கவிகள் அம்பலமேறி அட்டகாசம் புரிவதையும் கம்பன் தன் ஆயுட் காலத்திலேயே அனுபவித்திருப்பான்; அந்த வயிற்றெரிச்சலின் காரணமாக அவனே இந்தப் பாட்டைப் பாடியிருக்கிருன்' என்று தர்க்க நியாயம் பேசினார் புதுமைப்பித்தன்.

இதை வலியுறுத்துவதற்குப் புதுமைப்பித்தனுக்கு ஒரு சந்தர்ப்பமும் கிடைத்தது. 1946-ம் வருஷம் திருச்சி வானொலி நிலையத்தார் புதுமைப்பித்தனை 'பாட்டு எப்படிப் பிறக்கிறது?' என்ற பொருள் பற்றிப் பேச அழைத்தார்

கள். அந்தப் பேச்சுக்காக எழுதிய எழுத்துப் பிரதியில் கம்பனைப் பற்றிய இந்த அபிப்பிராயத்தைக் கூறி, 'வயிற்றெரிச்சலிலும் பாட்டுப் பிறக்க முடியும்' என்று குறிப்பிட்டிருந்தார், புதுமைப்பித்தன். அத்துடன் நில்லாமல் கம்பனுக்கு ஏற்பட்டதைப்போல், தமக்கேற்பட்ட வயிற்றெரிச்சலையும் ஒரு பாட்டாகச் சொல்ல முடியும் என்பதையும் அத்தாட்சி பூர்வமாக அதில் குறிப்பிட்டிருந்தார்.

'திருச்சி ரேடியோ நிலையத்தில் பேசவிருந்த புதுமைப்பித்தன் அதற்கு முன்பே காலமாகிவிட்டால்?' என்ற கேள்வியை அவரே எழுப்பிக்கொண்டு, அப்போது தம் எதிரிகள் எப்படிக் கும்மாளம் அடிப்பார்கள்? 'பய, போயித் தொலைஞ்சானா?' என்று எவ்வளவு நிம்மதியுடன் மூச்சு விடுவார்கள்? புதுமைப்பித்தனின் மிதியடி ஓசையைக் காலனின் அடியோசையாகக் கேட்டுக் கிலியடைந்த இலக்கியப் போலிகள் எப்படி ஆனந்தக் கூத்தாடுவார்கள்? —என்பதை யெல்லாம் கற்பித்துக் கொண்டு, அந்த வேளையில் புதுமைப்பித்தனின் நண்பர் ஒருவர் இந்தப் போலிகளின் கூத்தைக் கண்டு வயிறெரிந்து, அவர்களைப் பார்த்துப் பாடுவதாக, புதுமைப்பித்தனே ஒரு பாட்டுப் பாடி விட்டார்:

**திருச்சிக்கு என்றான்; தென்திசைக்கே சென்றுவிட்டான்**
**கிரிச்சிச் சடாச் சத்தம் கேட்டாயோ?—உரிச்சி**
**வச்ச மடையா! வக்கு அத்த மடையா! எச்சிற்**
**காசு மடையாபோ டா!**

வயிற்றெரிச்சலின் காரணமாக வல்லின ஓசை செவிட்டில் அறைந்தாற்போல் உறைத்து விழுவதோடு, எதுகை மோனை இலக்கணங்களும் தட்டழிந்து தடுமாறித் தறிகெட்டுப் போகின்றனவாம்.

இந்தப் பாட்டுக்கும் திருச்சிக்கும் ஏதோ தெய்வீக சம்பந்தம் இருந்ததுபோல் புதுமைப்பித்தன் சந்தர்ப்ப பேதத்தால் திருச்சிக்குப் போக முடியவில்லை. அவரது பேச்சும் ஒலிபரப்பப் படவில்லை!

புதுமைப்பித்தன் தமது அந்திம காலத்தில் திருச்சிக்குச் செல்லவில்லை. அதற்கும் தெற்கேயுள்ள திருவனந்தபுரத்துக்குத்தான் சென்றார். ஆனால் தமிழ் நாட்டின் சாபத்தீடு அவரை அதற்கும் தெற்கே—சென்றவர்கள் மீளாத தென் திசைக்கே—வழியனுப்பி வைத்து விட்டது. தமிழ் நாட்டுச் சிறு கதை உலகின் தனிக்காட்டு ராஜாவாக விளங்கிய புதுமைப்பித்தன் 1948-ம் வருஷம் ஜூன் மாதம் 30-ம் தேதியன்று அர்த்த சாமத்தில் நம்மைவிட்டுப் பிரிந்து விட்டார்.

அத்தியாயம்—18

## குரும்பரும் குழந்தையும்

புதுமைப்பித்தனின் 'செல்லம்மாள்' என்ற கதை ஞாபகமிருக்கிறதா? அதில் வரும் கதாநாயகர் பிரம நாயகம் பிள்ளையைப்பற்றிப் புதுமைப்பித்தன் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:

"....(பிரமநாயகம் பிள்ளை) வாழ்வின் மேடுபள்ளங்களைப் பார்த்திருக்கிறார் என்றால் அவர் ஏறிய சிறு சிறு மேடுகள் யாவும் படிப்படியாக இறங்கிக்கொண்டே வரும் பள்ளத்தின் கோளாறுகளே யாகும். வாழ்வு என்ற ஓர் அனுபவம் அவருக்கு ஏற்படும்போது அவர் மேட்டிலிருந்து தான் புறப்பட்டார்."

புதுமைப்பித்தன் திருநெல்வேலியை விட்டு, தமது பிறந்த வீட்டை விட்டு வெளியேறியதிலிருந்து, பிரம நாயகம் பிள்ளையைப் போலத்தான் வாழ்க்கையை அனுபவித்தார் என்று சொல்ல வேண்டும். வாழ்க்கை முழுவதும் சுக வாழ்க்கைக்கு உத்தரவாதமோ நம்பிக்கையோ தராத மத்தியதர வர்க்கத்தின் கஷ்ட நஷ்டங்களும், பொருளாதாரச் சங்கடங்களும் அவரது வாழ்க்கையைப் பாதித்தே வந்தன. எனவே சிரம ஜீவனம் நடத்தும் மத்தியதர வர்க்கத்தின் குடும்ப வாழ்வைப் போலவே புதுமைப்பித்தனின் குடும்ப வாழ்வும் இருந்து வந்தது.

"எழுத்தாளனைக் கட்டிக் கொள்பவள் துணிச்சல் காரியாகத்தான் இருக்கவேண்டும்!" என்று நண்பர்

ஒருவர் சொன்னார். மற்ற நாட்டு எழுத்தாளர்களின் நிலை எப்படியோ? ஆனால் நமது அருமைத் தமிழ் நாட்டு எழுத்தாளனை மணந்து கொள்ளும் மகராசி நிச்சயம் துணிச்சல் காரியாகத்தான் இருக்கவேண்டும். 'எங்கள் தமிழ், எங்கள் தமிழ்' என்று நாம் எவ்வளவுதான் நீட்டி முழக்கிக் கூச்சல் போட்டாலும், இருப்பது ஒரு முழத் தமிழ்நாடு— இதில் கீறல் பேர்வழி யல்லாது கையெழுத்துப் போடத் தெரிந்த அளவிலிருந்து கணக்கிட்டுப் பார்த்தாலும் எழுத்து வாசனை உள்ளவர்களோ 'அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை' என்ற கதையில்தான் இருக்கிறது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. தமிழ் நாட்டில் எழுதிப் பிழைப்பது என்பது ஓர் எமப் பிரயத்தனம். இந்த நிலையைச் சாபத்தீடு என்று ஒதுக்கி விடுவதற்கில்லை. இன்றைய சமுதாய நிலையில் எழுத்தாளன் மட்டுமல்ல, மத்தியதர வர்க்கத்தின் நிலை முழுவதுமே இப்படித்தான் இருக்கிறது; இருக்கும். சமுதாய அமைப்பு சீர்பட்டால் ஒழிய, நாட்டில் கல்வி வளராது; கலை வளராது; எழுத்தாளன் வளர மாட்டான். அந்தச் சீர்பாடு ஏற்படுகின்ற காலத்தில் இம்மாதிரியான துணிச்சல் காரியங்களுக்கு இடமிராது. அது வேறு விஷயம்.

கமலாம்பாள் புதுமைப்பித்தனைக் கணவராகக் கைப் பிடித்தபோது. இந்த விதமான துணிச்சலுக்கு இடமில்லை. பி. ஏ. படித்தவர், தாசில் சொக்கலிங்கம் பிள்ளையின் குமாரர், செயலுள்ள குடும்பத்தின் தலைப்பிள்ளை—இந்த மாதிரிதான் கமலாம்பாளுக்கு புதுமைப்பித்தனைத் தெரிந்திருக்குமே ஒழிய, அவர் ஒரு எழுத்தாளர் என்பது தெரிந்திருக்க முடியாது.. அது மட்டுமல்ல. அந்த எழுத்தாளரோடு சேர்ந்து தானும் கதை எழுத ஆரம்பித்து விடுவோம் என்பதும் எதிர்பார்த்திருக்க முடியாத விஷயம்.

திருவனந்தபுரத்தில் 'ராமகிருஷ்ண ஹவுஸ்' என்ற வீடு ராமகிருஷ்ண பிள்ளை என்பவர் கட்டியது. அதில் கமலாம்பாள் சுப்பிரமணிய பிள்ளையின் புதல்வியாய்ப் பிறந்தாள். கமலாவின் தந்தை இப்போது உயிரோடு

இல்லை. தாய் மாத்திரமே ஜீவிய வந்தராக இருக்கிறார். கமலாம்பாளுக்கு உடன்பிறந்த சகோதர சகோதரிகள் உண்டு. சகோதரர்கள் இருந்தும் கமலாம்பாளுக்கு எந்தச் சுகமும் இன்றும் இல்லை; அன்றும் இருந்ததாகச் சொல்ல முடியாது. சகோதரர்களுக்குள் குடும்பப் பாகப் பிரிவினை விஷயமாகப் பல வருஷ காலமாகக் கோர்ட்டு வாசல் ஏறிக் குலைந்த குடும்பம் அது. புதுமைப்பித்தனின் தந்தைகூட, புதுமைப்பித்தன் செய்துகொண்ட பாகப் பிரிவினை, இந்தக் கோர்ட்டு வழக்கின் எதிரொலிதான் என்று என்னிடம் கூறினார். இந்த மாதிரி நிலைமையில் கமலாம்பாளுக்கு வாழ்வில் அமைதியில்லை. 'பிறந்த ஊரிலே பிறந்த வீட்டிலே எனக்கு அன்பு இல்லை' என்று புதுமைப்பித்தன் சமயங்களில் மனம் நொந்து கூறுவார்; கமலாம்பாளின் நிலையும் அநேகமாக அப்படித்தான். கமலாம்பாள் ஒருத்தி மட்டும்தான் புதுமைப்பித்தனுக்கு ஆறுதலாக இருந்ததாகச் சொல்ல வேண்டும். அவரே ஒரு முறை தம் மனைவியிடம், ''கமலா, நீ மட்டும் என் பக்கத்தில் இல்லையென்றால், நான் என்ன சம்பாதித்தா லும் கடைசியில் பிச்சை எடுக்கும் ஆண்டியாகத்தான் ஆகிவிடுவேன்'' என்று கூறினார். புதுமைப்பித்தனோடு குடியும் குடித்தனமுமாய் வாழ்ந்த கமலாம்பாளுக்கோ, அவர் சாகிற வரையிலும் அவரைப் புரிந்துகொள்ள முடியவில்லை. இலக்கிய ரசிகர்கள் அவரது கதைகளைப் புரிந்து கொள்ள எப்படித் திணறினார்களோ, அது போலவே கமலாம்பாள் தன் கணவரைப் புரிந்து கொள்ள முடியாமல் திணறினாள்.

''அவருக்கு வாழ்க்கைப் பட்டதிலிருந்து அவரைப் புரிந்து கொள்ளவே முயன்றேன். அவர் செய்கிற காரி யங்களை மாற்றவும் முற்பட்டேன், வாழ்வை நம்பும்படி யும் விரும்பும்படியும் அவரை நான் தூண்டினேன். என் முயற்சி எதுவுமே அவரிடம் பலிக்கவில்லை. கடைசியில் அவருடன் நான் வாழ்ந்த காலம் முழுவதும், நான் அனுப வித்தது துன்பமா, இன்பமா என்பது எனக்கு அன்றும்

தெரியவில்லை இன்றும் தெரியவில்லை'' என்று கமலாம்பாள் கூறுகிருள்.

உண்மையில் கமலாம்பாள் மிகவும் மனம் நொந்து தான் போனுள். அவருடன் வாழ்ந்த நாளிலும் அவளுக்கு இன்பம் இல்லை; அவர் மறைந்த பிறகும் துன்பமே மிஞ்சி நிற்கிறது. ''நான் பிறந்த வீடும் புகுந்த வீடும் நல்ல இடங்கள்; செயலுள்ள குடும்பங்கள். எனினும் எனக்கும் அவருக்கும் வாழ்நாள் முழுதும் கிடைத்தவை ஏமாற்றம், தோல்வி, துன்பம் இவைதான்....'' என்று சொல்கிருள் கமலாம்பாள்.

கஷ்டங்களை அனுபவிக்கப் பிறந்தவளைப் போலவே வளர்ந்த கமலாம்பாளும், அன்பையே காணுத காரணத்தால் வீட்டை விட்டு வெளியேறிய புதுமைப்பித்தனும் வாழ்க்கையை நாடிச் சென்னைக்கு வந்தனர். மற்ற கதைதான் உங்களுக்குத் தெரியுமே!

புதுமைப்பித்தனது 'சித்தி' என்ற சிறு கதையில் மனைவியைப்பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிருர் புதுமைப்பித்தன்:

''....சம்சார பந்தத்தில் மனிதன் எப்படி நடந்து கொள்கிருன் என்பதைப் பரிபூரணமாகத் தெரிந்து கொள்வதற்கு ஒருவருக்குத்தான் முடியும். அம்மி மிதித்து அருந்ததி பார்த்து ஊரறிய ஒரே தலையணையில் தலைசாய்க்கச் சம்மதித்துக்கொண்ட ஜீவனுக்குத்தான் அன்று தொடங்கிய ஒழுங்கு எந்தக் கதியில் எந்த நியதியில் செல்லுகிறது என்பதைப் பரிபூரணமாகத் தெரிந்து கொள்ளச் சௌகரியம் உண்டு. விவேகிகள் தெரிந்து கொள்வார்கள். அந்த வசதி பெருதவர்கள் தலையைத் தாங்கிய தலையணையைப் போல், பாரத்தைத் தாங்கியதால் விழுந்த குழியைத்தான் மனவுலகில் பெற்றிருக்க முடியும்.''

இந்தச் சூத்திரத்தின்படி பார்த்தாலும், புதுமைப்பித்தனது குடும்ப வாழ்க்கை 'எந்தக் கதியில் எந்த நியதியில்' சென்றது என்பதை அறிவிக்கக்கூடிய ஜீவன் கமலாம்பாள் ஒருத்திதான். ஆனல் கமலாம்பாளோ 'நான் அவரைப் புரிந்து கொள்ள வேமுடியவில்லை' என்று கையை விரிக்கும்

போது, என்னைப் போன்ற நண்பன் - அதிலும், புதுமைப் பித்தன் சம்சார பந்தத்தோடு இல்லறம் நடத்திய காலத்தில் அதிகமாக அவரோடு பழகும் வாய்ப்புப் பெருத நண்பன் - அந்த நியதியையோ கதியையோ தெரிந்து கொள்ள முடியாது; உங்களுக்கும் தெரிவிக்க இயலாது. போகட்டும்

எனினும் புதுமைப்பித்தன் தமது மனைவியோடு எப்படிப் பழகினுர், எவ்வளவு வாஞ்சையோடு இருந்தார் என்பதற்குச் சில சம்பவங்கள் உபசாந்தியாக இருக்கும்; ருசிகரமாகவும் இருக்கும். கமலாம்பாள் புதுமைப்பித்தனைப் பற்றி எழுதிய ஒரு கட்டுரையில் பின்வருமாறு எழுதியிருக்கிருள் :

''அவரோடு பேசிக் கொண்டிருந்தால் பொழுது போவதே தெரியாது. வெற்றிலைச் செல்லமும் கையுமாக அடுப்பங்கரையிலேயே வந்து உட்கார்ந்து விடுவார். ஒரு சமயம் நண்பர்கள் வரவை எதிர்பார்ப்பார். 'இல்லை என்று விடு' என்பார். சிலசமயம் அவர் பேச்சைக் கேட்டு நான் வாசல் கதவைத் திறந்து 'இல்லை' என்பேன். உடனே உள்ளே இருந்து கொண்டு, 'இருக்கிறேன் சார்' என்று கூறி என்னைத் தலைகுனியும்படிச் செய்துவிடுவார்...

''எனக்கு வேண்டிய, பதம் பிரித்து எழுதியிருக்கும் புத்தகங்களை விலைகொடுத்து வாங்குவார். அவருக்கு எதிலெல்லாம் விருப்பம் இருக்கிறதோ அதையெல்லாம் நானும் விரும்பும்படி செய்வார். 'மனைவி என்ருல் கணவனுக்குத் தொண்டு செய்யும் அடிமை' என்ற மனப்பான்மை சிறிதளவு கூட அவரிடம் காண முடியாது. எனக்கு எவ்வளவோ சுதந்திரம் கொடுத்தார். 'வாழ்வில் தனக்கு ஒரு நியதி, மனைவிக்கு ஒரு நியதி' என்ற வித்தியாசம் அவரிடம் கிடையாது. கையில் பணமிருந்தால் தாராளமாகச் செலவு செய்வார். இல்லாதபோது இல்லையே என்று வருத்தப்படவும் மாட்டார். இந்த மனப்பான்மையைப் பார்க்கும்போது என்னுல் சகிக்க முடியாது; 'இப்படிப் பொறுப்பில்லாமல் நடந்து கொள்கிறீர்களே' என்பேன். 'நான் இருக்கும்போது நீ எதற்காக மண்டையை உடைத்துக்கொள்ள வேண்டும்! நாளைக்குப் பார். எல்லாம் சரியாகி விடும்' என்பார்...

"இப்படியே போய்க் கொண்டிருந்தால் குடித்தனம் சீர்ப்பட்டாற் போலத்தான் என்று குடும்ப நிர்வாகத்தை யும் நானே ஏற்றுக்கொண்டேன். சம்பளம் வாங்கி என் கையில் கொடுத்து விடுவார். அவருக்கு ஏதாவது வேண்டு மானால் என்னைக் கேட்டு வாங்கிக் கொள்வார்....

"ஒளிவு மறைவின்றி நாலு பேர் முன்பு வைத்துக்கூட அவர் என்னிடம் அன்பாகப் பேசிப் பழகுவார். இதைப் பார்க்கும் உறவினர்கள்கூட, 'இவ்வளவுக்கு அவன் அவ ளிடம் என்ன விசேஷத்தைக் கண்டான்?' என்று சொல் லிக் கொள்வார்கள்....

"ஒரு சமயம் அவர் தகப்பனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில், 'நீ மனைவிக்கு ரொம்ப Freedom கொடுக் கிறாய். அது நமது 'இந்து சமுதாயத்துக்கே, நம் குல ஆசாரத்துக்கே கெடுதல்' என்று எழுதியிருந்தார். இதைப் பார்த்து விட்டுச் சகிக்க முடியாத வேதனை அடைந்தேன்"

"ஏன் இப்படி எழுதினார்கள்? எனக்குப் புரிய வில்லையே!' என்றேன்.

"'அட அசடே! நான் உன்னோடு Freeயாகப் பழகு கிறேன் அல்லவா? அது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவ்வளவுதான். அதற்காகவா இந்த வருத்தம்?' என்று எனக்குச் சமாதானம் சொல்வதோடு நிறுத்திக் கொள்ளக் கூடாதா? நான் எவ்வளவு வேண்டிக் கொண்டும் கேளா மல், தம் தகப்பனாருக்கே, 'உங்களுடைய அபிப்பிராயம் கிழவனை மணந்து கொள்ளும் பெண்களுக்குத்தான் சரி. நான் அப்படியில்லை. நான் பொம்மைக் கலியாணமும் பண்ணவில்லை....' என்று எழுதிவிட்டார். தம் மனத்துக் குச் சரியில்லை என்று தோன்றும் எந்த விஷயமானாலும் யாரானாலும் அவர் இப்படித்தான் பதில் சொல்வார். இது தான் அவர் பிறவிக் குணம்...."

புதுமைப்பித்தன் தினமணியில் வேலை பார்த்து வந்த காலம் அது. புதுமைப்பித்தனின் மனைவி கமலாம்பாள் ஊரிலிருந்தாள். வீடு தேடிக்கொண்டு அழைத்து வருவ தாகப் புதுமைப்பித்தன் சொல்லியிருந்தார். வீடு கிடைத்த

பிறகும் என்ன காரணத்தினுலோ—வீணுகத் தம் மனைவியும் வந்து கஷ்டப்பட வேண்டாம் என்ற நினைப்பினுலோ என்னவோ—புதுமைப்பித்தன் 'வீடு கிடைக்கவில்லை; இப்போது வரவேண்டாம்' என்று மனைவியின் கடிதங்களுக்கெல்லாம் பதில் எழுதிக் கொண்டிருந்தார். கமலாம்பாளுக்கும் கணவனைப் பிரிந்து இருக்க முடியவில்லை. அவரது சம்மதம் வரும் வரையில் பொறுமையும் இடங் கொடுக்கவில்லை. எனவே, கமலாம்பாள் 'நான் வருகிறேன். ஸ்டேஷனில் சந்திக்கவும்' என்று ஒரு தந்தியைக் கொடுத்து விட்டுப் புறப்பட்டு விட்டாள். மறுநாள் காலையில் எழும்பூரில் மூட்டை முடிச்சுகளோடு புதுக் குடித்தனத்துக்கு வேண்டிய தட்டுமுட்டுச் சாமான்களுடன் வந்திறங்கினுள். ஆனுல் ஸ்டேஷனில் புதுமைப்பித்தனைக் காணும்!

வேறு வழியின்றி கமலாம்பாள் ஒரு வண்டியையமர்த்திக் கொண்டு புறப்பட்டாள். ஆனுல் எங்கே போவது? வீடு எங்கே? இது தெரியாத நிலை, கடைசியாக காலை எட்டு மணிக்கு 'தினமணி' ஆபீஸ் முன்னுல் வந்து இறங்கினுள். மூட்டை முடிச்சுக்களையே துணையாக விட்டுவிட்டு வண்டிக்காரனும் போய் விட்டான். ஆபீஸோ பத்து மணிக்கு. நடுத்தெருவில் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டு நின்ருள், கமலாம்பாள். ஆபீஸ் பையன் வந்தான். கதவு திறந்தது. தகவல் கொடுக்க ஆளில்லை. போன் பண்ணிப் பார்த்தும் யாரும் தகவல் கொடுக்க இயலவில்லை.

கடைசியில் புதுமைப்பித்தனே பத்து மணிக்கு வந்து சேர்ந்தார்.

''நடுத்தெருவில் விட்டு விட்டீர்களே. இது என் தலை விதியா?'' என்ருள் மனைவி.

''தந்தி கொடுக்காமல் ஏன் புறப்பட்டாய்?'' என்ருர் கணவன்.

''கொடுத்தேனே!''

பிறகுதான் தந்தி கிடைக்காத செய்தியும், அதனுல் ஏற்பட்ட அல்லல்களும் வெளியாயின. புதுமைப்பித்தன்

ஆபீஸில் கேட்டார். 'என் பெண்டாட்டி தெருவில் நிற்பதா?' என்று குதித்தார். கடைசியில் அது யார் பிசகும் இல்லை, தம் பிசகுதான் என்பதை உணர்ந்தார், புதுமைப் பித்தன்.

புதுமைப்பித்தனும் கமலாம்பாளும் கணவன் மனைவி யாகச் சுமார் பதினைந்து வருஷ காலம் வாழ்ந்து வந்தார்கள். என்றாலும் இந்தப் பதினைந்து பதினாறு வருஷ காலத்தில் கமலாம்பாள் புதுமைப்பித்தனை விட்டுப் பிரிந்து பிரசவத் துக்காகவும், ஓய்வுக்காகவும் பல தடவை திருவனந்தபுரம் சென்றதுண்டு. ஊருக்குப் போன மனைவியை லகுவில் போய் அழைத்து வர மாட்டார் புதுமைப்பித்தன். தமது கஷ்டங்களில் தமது மனைவிக்கும் பங்கு கொடுத்துக் கஷ்டப் படுத்த வேண்டாம் என்ற எண்ணமே இதற்குக் காரணம். அவரது மனைவி அவரிடம் எவ்வளவோ கோபித்துக் கொண்டாலும், அதை லகுவில் சமாளித்துச் சிரிக்க வைத்து விடுவார், புதுமைப்பித்தன். அதற்கு ஒரு உதாரணமாக விளங்குவது பின்வரும் கடிதம். புதுமைப் பித்தன் ஊரிலிருந்த தம் மனைவிக்கு 1943-ல் எழுதிய கடிதம் இது:

''....நேற்று ஸ்டாம்பு ஒட்டாமல் நீ அனுப்பிய கடிதம் வந்தது. போடு போடு என்று பொரித்துத் தீர்த்து விட்டாய். உனக்கு நான் பணம் அனுப்புகிறேன் என்ற தவணை தவறினால் அதற்கு நான் குற்றவாளியா? கொடுக் கிறவனிடமிருந்து வந்தால் அது உன்னிடம் பறந்து கொண்டு ஓடி வராதா? நீ இன்னும் சிறுபிள்ளை மாதிரி 'டு' போடுவதில் கெட்டிக்காரி என்பது தவிர வேறு ஒன்று மில்லை. ஸ்ரீ... கடிதம் கொண்டு வரும்போதே எனக்குப் பணம் வரவேண்டிய நிலைமையிலிருந்தது. அதனால்தான் பணத்துடன் கடிதம் எழுதினால் உனக்கு ஏமாற்றமும் கசப்பும் கொஞ்சம் குறையுமே என்றிருந்தேன். அதற்குள் அங்கிருந்து 'டக்'கென்று குண்டு போட்ட மாதிரி ஸ்டாம்பு இல்லாத கடிதம் அனுப்பினாய். அந்தக் கடிதம் வந்தபோது ஆபீஸில் பக்கத்தில் இருந்தவர்கள் 'ஊடலோ' என்று சிரித்தார்கள். நானும் சிரித்துக் கொண்டேன். எனக்கு உன்னுடைய கடிதத்தைப் பார்த்தவுடன் சிரிப்புத்தான்

வந்தது; கோபம் வரவில்லை. உனக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்தால் அப்புறம் எதிராளியை ஓட ஓட விரட்டு வாய். அப்புறம் 'விரட்டினேனே விரட்டினேனே' என்று சங்கடப் படுவாய். உன் குணம் பூராவும் எனக்கு மனப் பாடம். என்னுடைய பொறுமை மெத்தனமாக நான் நடந்து கொள்வதாக உன்னை நினைக்கும்படிச் செய்து விடு கிறது. அதிலிருந்து ஒரு கோபம். அப்புறம் ஒரு ரோஷம். அப்புறம் பழைய கதைகள் ஒன்றுக்குப் பத்தாக, பெரிசாக மனக் கண்களுக்குத் தெரியும். உடனே பேனாவைத் தூக்க வேண்டியது. மனசில் முதலில் என்ன தோன்றுகிறதோ அதை எழுதித் தீர்த்து விடுவாய். இந்தக் கடிதத்தைப் பார்த்த பிறகு உன் முகம் எப்படி இருக்கும் என்று நினைக்க வேடிக்கையாகத்தான் இருக்கிறது. ஓங்கி அடிப் பதற்குக் கை விசையாக வரும் போது விலகி விட்டால் எப் படியோ அப்படித்தான். இன்னும் சிறு குழந்தை மாதிரி வீண் சந்தேகங்கள் பட்டுக் கொண்டிருக்காதே. வேறு என்னத்தைச் சொல்ல? 'சிறு பிள்ளை, சிறு பிள்ளை' என்று உன் முகத்தில் முத்தமிடத்தான் வேண்டும். நான் கொஞ்சநாள் கடிதம் எழுதாமலிருந்ததைப் பெரிய குற்ற மாகப் பாவிக்கிறாய். பணத்துக்காக நான் ஏற்பாடு செய் யும்போது, ஒவ்வொருவனும் 'இன்று' 'நாளை' என்று தவணை சொல்லும்போது அதை எதிர்பார்த்துச் சற்று ஏமாற்றம் ஏற்பட்டது. இந்த நாளில் நான் அடைந்த ஏமாற்றங்களையெல்லாம் ஒன்றரையணா தபால் செலவில் உனக்குப் பார்ஸல் பண்ணிக் கொண்டிருந்தால் உனக்கும் ஏமாற்றம். என் வார்த்தையே இப்படித்தான் என்று எழுதுவாய். பண விஷயத்தைப் பற்றிக் காரியம் கைகூடி னதும் எழுதலாம் என்று நினைத்து மற்றக் காரியங்களை மட்டும் எழுதினாலோ, 'நான் எழுதுகிற கடுதாசியைப் படிப்பதுண்டா? பணமில்லை என்று எழுதுகிறேன். பதில் ஏன் இல்லை? உங்களுக்கு அங்கே என்ன? ஆ—ஊ' என்று சொல்லுவாய். பணம் உனக்கு அனுப்பாதவரை நான் எந்த மாதிரி உனக்கு எழுதினாலும் உன்னிடமிருந்து பதில் எப்படி வரும் என்பது எனக்குத் தெரியும். ஏன் என்றால் நானும் உன் போன்ற நிலையிலிருந்தால் கோபம் கோபமா

கத்தான் வரும். தவளை சொல்லுகிறவனைக் கண்டு எனக்குக் கோபம் வரத்தான் செய்கிறது. உனக்குக் கோபப்பட உரிமையுண்டு. நான் அப்படி அவனிடம் செய்ய முடியுமா? அது செல்லாத இடத்தில் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான். அந்த மாதிரி நான் பொறுத்துக் கொண்டுதான் வருகிறேன். ஆனால் நீதான் நாளுக்குநாள் சின்னக் குழந்தையாகி வருகிறாயே ஒழிய வளர்ச்சி தென்படவில்லை. நீ என்னதான் கோபப்பட்டுக் கொண்டிருந்தாலும், எப்படியோ முக்கித் தக்கி உனக்கு ஏற்படுகிற கோபம் முடிகிறதில்தான் எனக்குச் சந்தோஷம். காலைக் காலைப் போட்டு உதைத்துக் கொண்டு முகத்தில் துப்பிக் கிள்ளித் துள்ளி மறியும் ஒரு குழந்தையை மடியில் இருத்தி அமுக்கிப் பிடித்துக் கொண்டு முத்தமிடுகின்ற சுகம் அதில் இருக்கிறது. என்ன மாதிரி நீ கோபப்பட்டாலும் அது அந்த நிமிஷத்துடன் போச்சு........''

* * *

புதுமைப்பித்தனுக்குக் குழந்தைகள் என்றால் மிகுந்த பிரியம். குழந்தைகளின்மீது, அவருக்குள்ள ஈடுபாடும் ஆனந்தமும் அளவிட முடியாதது. புதுமைப்பித்தன் குழந்தைகளிடம் எவ்வளவு தூரம் ஈடுபட்டிருந்தார் என்பதை அவரது கதைகளில் வரும் குழந்தைப் பாத்திரங்கள் —குறிப்பாக 'சிற்றன்னை' என்னும் நூலிலும், 'கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும்' என்ற கதையிலும் வரும் குழந்தைப் பாத்திரங்கள்— மூலம் நாம் ஓரளவு தெரிந்து கொள்ள முடியும். ஆனால் குழந்தைகளிடம் இத்தனை ஆர்வம் காட்டும் புதுமைப்பித்தன் தமது வாழ்க்கையில் பெற்று வளர்த்துச் சீராட்டிய குழந்தைகளைவிட, பெரியாழ்வார் கண்ணனைப் பாசுரங்களால் சீராட்டிய மாதிரி, கதைகளிலே சீராட்டிய குழந்தைகள்தான் அதிகம் எனச் சொல்ல வேண்டும். புதுமைப்பித்தன் இன்று விட்டுச் சென்றிருக்கும் ஒரே குழந்தை தினகரி என்ற பெண் குழந்தை. ஆனால் அவருக்கு தினகரி பிறப்பதற்கு முன்பு ஆணும் பெண்ணுமாக இரண்டு வாரிசுகள் பிறந்த போதிலும் பிறந்த சிறிது காலத்திலேயே அவை மறைந்து விட்டன.

புதுமைப்பித்தன் தமது தலைக்குழந்தை இறந்து போன சமயத்தில் ஊருக்குக்கூடப் போக முடியாத நிலைமையி லிருந்தார்; பணக் கஷ்டம்தான். அதுபற்றி அவர் என் னிடம் ஒரு சம்பவத்தைக் குறிப்பிட்டுச் சொன்னார்.

'புதுமைப்பித்தன் கதைகள்' வெளிவந்த காலம். அப் போது அவரது குழந்தை தவறிவிட்டது. குழந்தையைப் போய்ப் பார்க்கக் கூட அவரிடம் பணவசதி இல்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் அவரது புத்தகத்தை வெளியிட்ட பதிப்பா சிரியர் புதுமைப்பித்தனை அணுகி ஒரு உதவி கோரினார். கம்பெனியில் தமக்குள்ள பற்று வரவுக் கணக்கில் துண்டு விழுவதைச் சரிக் கட்டுவதற்காக புதுமைப்பித்தனிடம் ஒரு நூலின் உரிமையைக் கேட்டார். புதுமைப்பித்தன் அதன்படி ஒரு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுக் கொடுத் தார். அதன் பின்னர் வேறொரு சமயம் அதே பதிப்பா சிரியர் புதுமைப்பித்தனிடம் பண உதவி பெறுவதற்காக வந்தார். அப்போது புதுமைப்பித்தனுக்குப் பெருங்கோபம் வந்து விட்டது.

அவர் சொன்ன பதில் இதுதான்:

''உம்மால் என் பிள்ளையைக் கொன்றேன்.

உமக்காக என் புத்தகத்தைக் கொன்றேன்.

உமக்காக நான் என்னையே கொன்று கொள்ளத் தயாராயில்லை!''

இன்று புதுமைப்பித்தன் கமலாம்பாளுக்கு விட்டுச் சென்றிருக்கும் ஒரு சொத்தான தினகரி சித்திரை வருஷப் பிறப்பன்று பிறந்தாள். அவள் பிறந்தது 1946-ம் வருஷம். அந்தச் சமயத்தில்தான் அவர் சினிமாத் துறையில் பிர வேசித்திருந்தார். 'பிள்ளை பிறந்திருக்கிறது' என்ற தந்தி கிடைத்தபோது நான் அவருடன் இருந்தேன். புதுமைப் பித்தனுக்கு ஒரே கொண்டாட்டம்! ஏராளமான சாமான் களும், பந்து முதலிய விளையாட்டுப் பொருள்களும் வாங் கிக் கொண்டு அன்றிரவே குழந்தையைப் பார்க்கப் புறப்

பட்டுப் போனார். இந்தப் பிரசவம் சுகப் பிரசவமா யிருக்குமா என்ற கவலை அவருக்கு ரொம்ப நாட்களாக இருந்ததுண்டு. எனவே தந்தி கிடைத்து ஊருக்குக் கிளம்பிய போது குழந்தை பிறந்தது என்பதில் ஒரு சந்தோஷம்; தாயும் சேயும் சௌக்கியமா யிருக்கிறார்களா என்பதை அறிய ஒரு ஆதங்கம். புதுமைப்பித்தன் தமது குழந்தையைப் பார்ப்பதற்காகத் திருவனந்தபுரத்துக்கு, தம் மாமியார் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். குழந்தையைக் கண்ட உற்சாகத்தில் அவர் எனக்கு ஒரு கடிதம் எழுதினார்:

''....நீளமான கடுதாசி எழுதவேண்டும் என்று மனசு வளைகிறது. உடம்புதான் வளையமாட்டேன் என்கிறது. சாப்பிடும் போதெல்லாம் உன்னை நினைத்துக் கொண்டு தான் சாப்பிடுகிறேன். எப்படித்தான் ஒன்றாகக் கட்டிப் புரண்டாலும் வாயும் வயிறும் வேறுதானே! நேற்று மாலையிலிருந்து நான் கம்யூனிஸ்ட் ராஜாங்க ஏற்பாட்டுக்கு விரோதி. ஏனென்றால், மாமியார் வீடு என்கிற ஒரு Institution அதில் இருக்க முடியாதல்லவா? வெகுதூரம் நொடித்து வதங்கி யாத்திரை செய்து விட்டு வந்தவனுக்கு வென்னீரும் சாப்பாடும் பரமபதமாகத் தோன்றும். அதை மாமியார் வீடுதான் அக்கறையோடு செய்யும். என்ன, தாயர் வீட்டை மறந்துவிட்டாயா என்று கேட்காதே. தாயார் வீடு பெயலுக்கு இந்த மாதிரி கவனிக்கிற விவகாரமாக இருந்தால், தாயார் மகனைச் செல்லப் பிள்ளையாக நடத்தி ஒன்றுக்கும் ஆகாமல் அடித்து விடுவாள். தாயார் மடி கவலையைப் போக்கலாம். மாமியார் வீடு உடம்பு வலியைப் போக்கி, பூலோகத்தில் தீமைக்கு இடம் எப்படி இருக்க முடியும் என்று நினைக்கப் பண்ணுகிறது. அது தான் மாமியார் வீடு....

''இங்கே உள்ள காரியங்களைப் பற்றி எழுதாமல் கதை வளர்த்தால் உனக்கு நியாயமான கோபம் வரத் தானே செய்யும்! பிரசவம் நான் பயந்து கொண்டிருந்ததற்கு எல்லாம் மாறாக, ரொம்ப சுகப் பிரசவம். குழந்தை சவுக்கியம். காச்சு காச்சு என்று கத்திக் கொண்டிருக்கிறது. இப்பொழுதுதான் ஆஸ்பத்திரியில் விட்டுவிட்டு,

வீட்டுக்கு வந்திருக்கிறேன். இப்பொழுது உனக்கு அடுத்த படி குழந்தைதான் மனசைக் கவ்வுகிறது....''

புதுமைப்பித்தனுக்குத் தமது மகள் தினகரியின்மீது மிகுந்த பிரியம். தினகரியின்மீது அவர் எவ்வளவு பிரியம் கொண்டிருந்தார் என்பதை அவர் புளுவில் காச நோயால் அல்லற் பட்டபோது எழுதிய சில கடிதங்களே நன்கு கூறும். பின்வரும் கடிதப் பகுதிகள் அவர் தம் மனைவிக்கு எழுதியவற்றில் காணப் படுபவை:

''என்னைப் பற்றி நீ பயந்துகொண்டு கிடப்பதைப் போலக் கவலைப்படும் படியாக இல்லை....தினகரியைக் கவனி. பெரும் விதியைப் பற்றி யோசிப்பதை நம்மோடு வைத்துக் கொண்டு அவளுடைய உடம்பைக் கவனி....அவளுக்காக வாங்கிய சாமான்கள் கட்டிலுக்குக் கீழே இருக்கிறது. நாளைக்கு அனுப்ப ஏற்பாடு செய்கிறேன். சில பொம்மை வாங்க உத்தேசம்....

''....அன்பு கண்மூடித்தனமாக இருப்பது விவேகம் அல்ல. நீ என் பக்கத்தில் இருப்பதானால் குழந்தையைக் உத்தேசித்தாவது நீ ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும். நான் சாகிறேன், பிழைக்கிறேன். அது விதிபோல. ஆனால் அதற்காக ஒன்றுமறியாத ஜீவனையும் என் நோயைக் கொடுத்து அவஸ்தைப் படுத்துவதா? யோசித்துப் பார். அன்பு அறிவோடு சேர்ந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் விபரீதம்தான்....

''தினகரிக்கு எனது புதுவருஷப் பொய் முத்தம். அவள் கதி இப்படியாகும் என்று கனவிலும் நினைக்கவில்லை....

''தினகரிக் குட்டி என்னைத் தேடுகிறாளா? சாயங்காலத்தில் அவளை வெளியே எடுத்துப் போகிறாயா? அல்லது அழ விடுகிறாயா? ஒவ்வொரு நிமிஷமும் அவள் என் கண் முன்பு நிற்கிறாள். இங்கு வந்தீர்களானால் என் கவலை தீரும்....''

புதுமைப்பித்தன் தமது அந்திம காலத்தில் திருவனந்தபுரத்துக்கு நோயின் கொடுமையையும் பாராது

தன்னந் தனியாகப் புறப்பட்டு வந்ததும், தினகரியைப் பார்க்க வேண்டும் என்ற ஒரே ஆவலோடுதான். தினகரி யின்மீது அவருக்கிருந்த பாசம் அளவு கடந்தது. அதனுல் தான் தம்மை இளவயதில் விட்டுப் பிரிந்த தாயின் பெயரை, பர்வதகுமாரி என்ற பெயரை, தினகரிக்குச் சூட்டியிருந்தார், புதுமைப்பித்தன். விடிவுகாலம் பிறந்து விட்டது என்று புதுமைப்பித்தன் கருதிய அந்த நாளில் தினகரி பிறந்ததால் அவருக்கு அவள்மீது ஒரே பிரியம். தாம் ஆரம்பித்து நடத்த முயன்ற சினிமா முயற்சிக்கும் கூட பர்வதகுமாரி என்ற பெயரையே சூட்டியிருந்தார்.

புதுமைப்பித்தன் தினகரியின்மீது இத்தனை வாஞ்சை கொள்வதற்கு அவருக்குக் குழந்தைகள் மீதுள்ள ஈடுபாடு மாத்திரம் காரணமல்ல. இதற்குமுன் அவருக்குக் குழந்தைகள் பிறந்தும், அவற்ருேடு கொஞ்சிக் குலவக் கொடுத்துவைக்க வில்லை. 'ஆசைக்கு என்று காலம் தப்பிப் பிறந்த கருவேப்பிலைக் கொழுந்து!' என்று கந்தசாமிப் பிள்ளை கடவுளிடம் தமது குழந்தையை அறி முகப்படுத்தி வைக்கிருரே, அந்த மாதிரியான கருவேப்பி லைக் கொழுந்துதான் தினகரி. புதுமைப்பித்தன் தினகரி தான் தமக்குக் கடைசிக் குழந்தையாக, ஒரே குழந்தை யாக இருப்பாள் என எண்ணினுர். அதனுல்தான் அவர் ஒருமுறை தம் புத்திரியை ஒரு நண்பருக்கு அறிமுகப் படுத்தி வைக்கும்போது, ''தினகரி இருக்காளே, அவள் வழிச்சுவிட்ட தோசை மாதிரி. புரியலையா? தோசை சுடும்போது கடைசியிலே தண்ணி விட்டுக் கழுவி கடைசி மாவையும் தோசையாகச் சுடுவாஹ. எனக்குப் பிறந்த தெல்லாம் தவறிப் போச்சு. இது என் கடைசிக் காலத் திலே வந்தது. அதனுலேதான் வழிச்சு ஊத்தின தோசைன்னேன்....'' என்று குறிப்பிட்டார். ''அவளுக்கு என்ன வயது'' என்று அதே நண்பர் கேட்டபோது, ''அவளுக்கா? அவளுக்கு வயசே கிடையாது. அவள் அறிவை வைத்துப் பார்த்தால் எனக்கு அவள் அம்மைப் பிராயம்'' என்று பெருமைப்பட்டுக் கொண்டார். புதுமைப்பித்தன்.

புதுமைப்பித்தன் நினைத்த மாதிரியே தினகரிதான் அவரது கடைசிக் குழந்தையாக, ஒரே வாரீசாக, நிலைத்து விட்டாள்; எமனும் அவரது எண்ணத்தை ஊர்ஜிதப் படுத்துவதுபோல் தினகரி பிறந்த இரண்டாவது வருஷத் திலேயே அவரைக் கொண்டுபோய் விட்டான்!

## அத்தியாயம்—19

### "சோவி"

புதுமைப்பித்தனைப் பெரும்பாலான வாசகர்கள் அவரது கதைகளின் மூலமே அறிந்திருக்கிறார்கள். அவர் எப்படி இருந்தார், ஆள் எப்படிப் பட்டவர் என்பதைப் பலர் அறிந்திருக்க மாட்டார்கள். அவரது இதயத்தைக் கதைகளிலே கண்டு களித்த வாசகர்கள் பலருக்கு, நேரிலும் அவர் எப்படி இருந்தார் என்பதை அறிய ஆவல் எழுவது தர்ம விரோதமல்ல. எனக்கும் ஒரு காலத்தில் அந்த மாதிரி ஆவல் எழுந்ததுண்டு. எனவே இந்தப் பகுதியில் புதுமைப் பித்தன் எப்படி இருந்தார், எப்படிப் பழகினார், அவரது குண நலங்களும் குணதோஷங்களும் என்ன என்பதை ஓரளவு கூறுவதே என் முயற்சி.

புதுமைப்பித்தன் நிதானமான உயரமுள்ளவர். சுமார் ஐந்தே முக்கால் அடி உயர மிருப்பார். ஆனால் உயரத்துக் குத்தக்கபடி உடம்பில் சதைப் பிடிப்பு கிடையாது. மிகவும் ஒல்லியான சரீரம். தொளதொளத்துத் தொங்கும் வெள்ளைக் கதிர் ஜிப்பாதான் அவரது உடலின் 'ஒட்டெலி'த் தன்மையை மூடி மறைத்துக் கொண்டிருக்கும். ஒடிசலான, கீரைத் தண்டுபோல் மெலிந்த உடல். தலைமயிரை அதிக மாக வளர்த்துப் பின்புறமாகச் சீவி விட்டிருப்பார். ஆனால் அவர் தலைமயிரைச் சீவிவிட்ட சிறிது நேரத்துக் கெல்லாம் அது கலைந்துபோய்விடும். அவரது தலைமயிர் குத்திட்டுச் சிலிர்த்து நிற்கும் முரட்டு ரோமம் அல்ல. தொய்வும் மென்மையும் பொருந்திய பிள்ளைமுடிதான். இருந்தாலும் அவர் தாமே தன் தலைமயிரைக் கலைத்து விட்டுக் கொள்வார். மெலிந்து பிஞ்சாய் இருக்கும் தமது கைவிரல்களால் அடிக்கடி தலைமயிரைப் பின்னுக்குக் கோதி விட்டுக்கொள்

வார். எனவே அவரது கிராப் வரிசை குலைந்து தொள தொளத்துச் சரிந்து கிடக்கும். அதில் இங்கும் அங்குமாக வெள்ளிய நரை லேசாகப் புரையோடிப் போயிருக்கும். அகலமான நெற்றி; எனினும் பாளம் பிளந்த கரிசல் காட் டைப்போல் நெற்றியில் கீறல் விழுந்த மாதிரிச் சுருக்கங்கள் படிந்திருக்கும். அவரது கண்கள் கடலாழத்தின் மடியிலே கிடந்து புரளும் முத்துக்களைப்போல் ஆழக் குழிக்குள் அமிழ்ந்து கிடந்து ஒளி வீசும் கண்கள். கண்களிலே ஏதோ ஒரு ஏக்கம் கலந்த வெறி தெறிப்பதுபோல் தோன்றும்; லேசாகக் கிழடு தட்டிப்போன பிரமை தட்டுப் படும். அவரது கண்களை 'போரிஸ் கார்லோவ்' கண்கள் என்று சொல்லவேண்டும்; போரிஸ் கார்லோவின் கண்கள் எப்படி இருக்கும் என்று தெரியாவிட்டால், புதுமைப்பித்தன் மொழிபெயர்த்துள்ள 'பிரேத மனிதன்' என்ற புத்தகத்தின் முதற்பதிப்பு அட்டைப் படத்தில் உள்ளதைப் போல், ஆனால் கொஞ்சம் அமித ஒளி நிறைந்த கண்கள் என்று சொல்ல லாம். கண்களிலே தீராத ஏக்கமும் பித்தமும் ஒளியும் தீக்ஷண்யமும் நிறைந்திருக்கும். சில பேருடைய கண்களை எவ்வளவு நேரமானாலும் கண்கூசாமல் பார்த்துக் கொண் டிருக்கலாம். புதுமைப்பித்தனின் கண்களை அப்படிப் பார்க்க முடியாது. அதன் பார்வை பார்க்கிறவர்களின் கண்களைச் சீக்கிரம் உறுத்தி விடும். அவரது மூக்கு சிறி தளவு ஏந்திவிட்டாற்போல் நிமிர்ந்து தோன்றும். அவரது பற்கள் மிகவும் பெரியவை. வெற்றிலைக் காவியேறிக் கறுத் துப் போகாவிட்டாலும், பளபளப்பு இழந்து மஞ்சள் பாரித்திருக்கும் பெரிய பற்கள். 'எனக்குப் பல் முளைத்த மாதிரி, (மாவிலைகள்) கோணல் மாணலாகத் தொங்கின' என்று அவர் 'விநாயக சதுர்த்தி' என்ற கதையில் எழுதி யிருக்கிறாரே, அதை நீங்கள் நம்பிவிடக் கூடாது. மாவிலை களைப் போல் வெளியே தெரியும் நீண்ட பற்கள்தான்; என் றாலும் கோணல் மாணலாக இராது. அவரது உதடுகள் பெரியவை. கீழுதடு மிகவும் தடித்துப்போன உதடு. அதிலும் வெற்றிலையைப் போட்டுப் போட்டு கீழுதடு மேலும் தடிப்பேறி, ஓரளவு சரிந்து தொங்குவது போலிருக்

கும். எனவே வாயின் முன்வரிசைப் பற்கள் அநேகமாக வெளியே தெரிந்த வண்ணமே இருக்கும். நெஞ்சு பிரம்புக் கூடை மாதிரி சதைப் பற்றற்று, கூடாடிப்போய் தட்டை யாக இருக்கும். கைகால்கள் எல்லாம் மிகவும் ஒல்லியாகி, வயதுக்கு மீறிய முதுமை தட்டித் தோன்றும்.

புதுமைப்பித்தன் பேசும்போது தலையை ஆட்டி யாட்டிப் பேசுவார். எதிரிலுள்ளவர்கள் பேசும்போதும் அந்த தலையாட்டம் நிற்காது. ஊமைக் கனவு கண்டு, தலையை ஆட்டிக் கொண்டே யிருக்கும் ஒருனைப்போல் இருக்கும், அவரது தலையசைப்பு. தலையசைப்போடு அடிக் கடி தலைமயிரையும் கோதிவிட்டுக் கொள்வார். அவரது வாயில் எப்போதும் சிரிப்பும் சிவப்புமாகவே இருக்கும். வெற்றிலையைப் போட்டு அண்ணுந்து இருந்து கொண்டு கடகடவென்று சிரிப்பார். அவரது சிரிப்பு பொய்ச் சிரிப் பல்ல. மனம் திறந்த பிள்ளைச் சிரிப்பு. எனினும் புதி தாகக் கேட்பவனுக்கு ஒரு கணம் எரிச்சலையோ, அருவருப் பையோ தரும் பேய்ச் சிரிப்பு. வெடிக்க வெடிக்கச் சிரிப் பார். அவரது சிரிப்பு சில நாசுக்கான மேனு மினுக்கிப் பேர்வழிகளுக்குக் காட்டுத்தனமான காரியமாகக்கூடத் தோன்றும். அவரது சிரிப்பு வெறும் மகிழ்ச்சியின் அறி குறியாக மட்டும் விளங்குவதில்லை. சமயங்களில் தம் முடன் பேசிக்கொண்டிருக்கும் எதிர் நபரின் அறிவை அளந்து பார்க்கும் அளவு கோலாகவும், எதிரி விடுத்த கேள்விக்கு என்ன பதில் அளிப்பது என்பதை, அடுத்துச் சிந்திக்கும் முயற்சியை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் மறைக்கும் திரையாகவும் பயன்படும்.

பேச்சு—பேச்சு—பேச்சு—எப்போது பார்த்தாலும் அவர் பேச்சிலே சளைக்கமாட்டார். தலைக்குமேல் எழுத்து வேலைகளோ இதர வேலைகளோ இருந்தாலும்கூடப் பேச் சுக்குமட்டும் பின்வாங்க மாட்டார். சில சமயங்களில் அவருக்குப் புகையிலைக் கமறலாலோ, அதிகப் பேச்சி ஞலோ தொண்டை கமறலெடுத்து, இருமலும் புகைச்ச லும் எழும்பி, கண்விழியில் நீர் பிதுங்கும். அப்படி யிருந் தாலும் கூட, இருமல் நின்ற பிறகு ஒரு மடக்குத் தண் ணீர் குடிப்பார். வெற்றிலை போடுவார். மீண்டும் பேச்

சைத் தொடங்கி விடுவார். அவரோடு .பேசிக்கொண் டிருப்பது என்பது ஒரு தனி இன்பம். ஏனெனில் அவ ருடன் பேசும்போது அடிக்கடி வயிறு குலுங்கும்படி நாமும் சிரிக்க ஆரம்பிப்போம். சுவாரசியமான பேச்சாளி. பேசுவதற்கு இதுதான் விஷயம் என்ற நியதி அவரிடம் கிடையாது. பழைய இலக்கியம், புதிய இலக்கியம், சங்கீதம் சோதிடம், சித்த வைத்தியம், சித்தர் பாட்டுக்கள், திருமந் திரம், கம்பராமாயணம், காம சம்பந்தமான இலக்கியங் கள், விவகாரங்கள், ஊர்வம்பு — எதைப் பற்றித்தான் பேசுவது என்பதில்லே. ஒன்றுமற்ற விவகாரத்தைப் பேசினாலும் வாய் ஓயாமல் பேசுவார். அதே மாதிரி, கேட் கிறவர்களின் தலேயே கிறுகிறுத்துப் போகும்படி மிகவும் நுண்மையான அபூர்வமான விஷயங்களேயும் தத்துவங் களேயும் பற்றியும் அவர் பேசுவார். ஒரு தடவை ஐன்ஸ் டீனின் உறவு நிலேத் தத்துவத்தைப் பற்றி என்னிடம் பேசியது எனக்கு இன்னும் ஞாபகமிருக்கிறது. அவருக்கு எல்லா விஷயங்களும் தெரியுமோ இல்லேயோ ஆனால், கேட்கிறவர்களிடம் ஆணித்தரமாக அறைந்தாற் போலத் தான் பேசுவார். சோதிடம், வைத்தியம் முதலிய விஷயங் களேப் பற்றிப் பேசும்போது அவருக்கு அதில் மிகுந்த பரிசயமும் நம்பிக்கையும் இருப்பது போலத் தோன்றும். ஒருவனுடைய ஜாதகத்தையே கேந்திர பாத்திரமாகக் கொண்டு ஒரு நாவல் எழுதவேண்டும் என்று அவர் சொல் லிக் கொண்டிருந்தார். அதற்காகத் தமது கதாநாயகனின் வாழ்க்கையைத் தாம் எப்படி எப்படி எழுதத் தீர்மானித் திருந்தாரோ, அதற்கு ஏற்றபடி அவனது ஜாதகமும் இருக்கவேண்டும் என்று கருதி, ஒரு சோதிடரிடம் பொய் யான ஜாதகக் குறிப்பு ஒன்று கூடத் தயார் செய்யச் சொல்லியிருந்தார். இதை யெல்லாம் காண்பவர்கள் அவ ருக்குச் சோதிடத்தில், வைத்தியத்தில் மிகுந்த ஈடுபாடு இருந்தது என்றே நினேக்கக்கூடும். ஆனால், உண்மையில் அவருக்கு அதில் நம்பிக்கையும் ஈடுபாடும் இருந்ததா என் பது அவரோடு நெருங்கிப் பழகிய என் போன்றவர்க ளுக்கே அன்றும் தெரியவில்லே; இன்றும் தெரியாது.

அவரோடு பேசும்போது அவரைப் பேச விட்டுவிட்டுக் கேட்டுக் கொண்டிருப்பதுதான் நல்லது. எதிராளி ஏதாவது குறுக்கிட்டு வேறு விஷயத்தைப் பேசினால், உடனே தம் பேச்சை நிறுத்தி விடுவார். அவர்கள் அப்படிக் குறுக்கிட்டுப் பேசுவதைக் கேட்டு வருத்தப்பட மாட்டார். அவர்கள் சொல்லும் விஷயத்தையும் கவனித்துக் கேட்பார். குறுக்கிட்டவர் பேசி முடிந்த பிறகு, தாம் பேசிக் கொண்டிருந்த விஷயத்தை அப்படியே விட்டுவிடுவார்; மீண்டும் விட்ட இடத்தில் தொட்டுப் பிடித்துப் பேசும் வழக்கம் அவரிடம் கிடையாது. அதைப் பற்றி எதிராளி நினைவுறுத்தினாலன்றி அதைப் பற்றிப் பேச மாட்டார்; நினைவுறுத்தியும்கூட, சமயங்களில் அந்தப் பேச்சை அந்தரத்தில் விட்டதோடு நின்று விடுவார். இந்தக் குணத்தை உணராத சிலர் அவரிடம் திடீரென்று தங்களது ஞான விலாசத்தைக் காட்டிக்கொள்ள எண்ணிக் குறுக்கிட்டுப் பேசி, எத்தனையோ அருமையான விஷயங்களைப் பேசி முடிக்க விடாதபடி, அந்த விஷயங்களைத் திரிசங்கு நிலைக்கு ஆளாக்கியிருக்கிறார்கள். அவரது பேச்சு வெறும் பேச்சாகவே இருப்பதில்லை எதைப்பற்றிப் பேசினாலும் மின்னல் வெட்டைப்போல் அபூர்வமான உண்மைகளும், ஆழ்ந்த மேதா விலாசமும், சிறந்த ஹாஸ்யமும் புரண்டு புரண்டு வரும்.

பேசும்போது அவர் ஆங்கிலம் கலந்துதான் பேசுவார். ஆனால் அவர் பேசுகின்ற தமிழ் அசல் திருநெல்வேலித் தமிழாகவே இருக்கும். அநேகமாக ஊர்விட்டு ஊர்வந்து 'மெட்ராஸில்' பழகிப் போனவர்களுக்கு, சென்னைத் தமிழ் முழுக்க முழுக்கப் படியாவிட்டாலும், ஓரளவேனும் அதன் சாயை படிந்து போவதுண்டு. ஆனால் புதுமைப்பித்தன் திருநெல்வேலியைவிட்டு, சென்னைக்கு வந்த பிறகும் அவர் திருநெல்வேலித் தமிழிலேயே, திருநெல்வேலிப் பண்போடு பேசுவார். 'ராசா', 'அவுஹ', 'வந்தாஹ', 'மேசை'—இதுபோன்ற திருநெல்வேலி உச்சரிப்பே அவரது பேச்சில் ஒலிக்கும். அடிக்கடி 'விவகாரம்', 'இருக்கு', 'Position' முதலிய சில வார்த்தைகள் அவரது பேச்சில் தலைகாட்டிக் கொண்டே யிருக்கும்.

அவர் நடப்பது ஒரு தினுசாக இருக்கும். மெதுவாகத்தான் நடப்பார். இருந்தாலும் பட்டத்தார் கட்டியவன்

மாதிரி காலை அகட்டி முன்னே இழுத்துப் போட்டு, ஓரளவு முன்புறமாகக் குனிந்தவாறே, முட்டப்போகிற கிடாவைப் போல் பாய்ந்து பாய்ந்து நடப்பார். அநேகமாக ரோட்டில் நடந்து செல்லும்போது வேட்டியை மடித்து, திருநெல்வேலிக்காரன் மாதிரி முழங்காலுக்குமேல் கட்டிக் கொள்வார். எதிரே யாராவது நண்பர் வந்தால், அட்ட காசமாகச் சிரித்துக் கொண்டு, தமது ஒல்லிக் கைகளைப் பட்டென்று ஒன்று கூட்டி நமஸ்காரம் செய்வார். எங்கு சென்றாலும், எங்கு உட்கார்ந்தாலும் அவர் உட்காருவது ஆசனத்தைப் பொறுத்ததல்ல. வீட்டிலே தரையிலே தாழம்பாய் விரித்து உட்கார்ந்திருந்தாலும் சரி, ஹோட்ட லில் அல்லது ஆபீஸில், அல்லது நண்பர்கள் வீட்டில் நாற்காலி யில் உட்கார்ந்திருந்தாலும் சரி, அவர் சம்மணம் கூட்டி சட்ட மாகத்தான் உட்கார்ந்து பேசுவார். நாற்காலியும் தரையும் அவருக்கு இது விஷயத்தில் ஒன்றுபோலத்தான் பயன்படும்.

புதுமைப்பித்தன் இரவு எவ்வளவு நேரம் கண் விழித் தாலும் சரி, அதிகாலையிலேயே எழுந்துவிடுவார். இரண்டு நாட்களுக்கு ஒருதரம் காலையில் எழுந்தவுடனேயே முதல் சோலியாக க்ஷவரம் செய்து கொள்வார். பிறகு பல் தேய்க் கச் சென்றால் அவருக்குச் சுமார் அரைமணி நேரம் பிடிக் கும். டூத் பேஸ்ட்; இல்லையென்றால் கருவேலம் பற்பொடி. எதையாவது வைத்துப் பல்லை விளக்கி விளக்கி, வெற்றி லைக் காவியைப் போக்க முனைவார். பிறகு தென்னம் ஈர்க்கியைக் கொண்டு நாக்கை வழித்து விடுவார். அது ஒரு பயங்கரமான காட்சி. ஓங்கரிப்பும் வறட்டு வாந்தி யும் இருமலும் கிளம்பும்; கண்விழி பிதுங்கி நீர் தெறிக் கும். என்றாலும் பல் தேய்ப்பது என்பது அவரைப் பொறுத்தவரையில் அப்படிப்பட்ட காரியம். பிறகு குளிக்கப் போவதற்கு முன்னால், ஏதாவது மூலிகைத் தைலத்தைத் தலையில் அரக்கி இறக்குவார்; கால் கையிலும் எண்ணெய் தடவிக் கொள்வார். குளிக்கும்போது சோப்பு மட்டும் அல்லாமல், பீர்க்கங் கூடு, சீயக்காய்ப் பொடி முத லியவற்றையும் உபயோகித்துக் கொள்வதுண்டு. காலையி லேயே குளித்துவிட்டு, ஒரே ஒரு சிட்டுத் துண்டை மட்டும் அரையில் கட்டிக் கொண்டு சட்டமாக வந்து உட்கார்ந்து

வெற்றிலையைப் போடுவார். வெற்றிலைக்குப் பிறகுதான் காலைக் காப்பி எல்லாம்.

சுத்தத்தில் அவருக்கு மிகுந்த கவனம். தமது உடம்பையும் ஆடையணிகளையும் மிகவும் சுத்தமாக வைத்துக் கொள்வதில் அரும்பாடு படுவார். குளிக்காமல், தலைவாரிக் கொள்ளாமல், மூன்றுநாள் தூக்கமும் அசடும் முகத்தில் அழுது வழிய, வரும் பேர்வழிகளிடம் முகம் கொடுத்துப் பேசவே அவர் கூசுவார். நோயாளிகளைக் கண்டால் வெறுத்து ஒதுங்குவார். தொற்று நோய்க்காரரைக் கண்டால் அவருக்கு மிகுந்த பயம். ஓடியே போய் விடுவார். அவரது வீட்டுக்குத் தொற்று நோய் பீடித்த எழுத்தாளர் ஒருவர் ஒரு சமயம் வந்து போய்க் கொண்டிருந்தார். வந்தவர் வீட்டிலுள்ள ஆசனத்திலோ கட்டிலிலோ இருந்தால், புதுமைப்பித்தன் தமது வெறுப்பைக் காட்டிக் கொள்ளாமல் உள்ளுக்குள்ளேயே புழுங்குவார். அவருக்கு என்று தண்ணீரோ காப்பியோ கொடுத்த கிளாஸ் தம்ளரை எங்கோ ஒரு மூலையில் தூக்கி எறிந்து விட்டார். அதுமட்டுமல்லாமல் கிருமிநாசினி எண்ணெயை வாங்கி வைத்து, அந்த எழுத்தாளர் எழுந்துபோன பிறகு, பம்பில் ஊற்றி வீடு முழுதும் தெளித்தடித்து வைத்தார். தொற்று நோய் என்றால் அவருக்கு அவ்வளவு வெறுப்பு, பயம் என்பதற்குத்தான் இதைக் குறிப்பிட்டேன். சுத்தத்திலும் தூய்மையிலும் இத்தனை அக்கறை காட்டி வந்த புதுமைப் பித்தன் கடைசியில் தொற்று நோயான க்ஷயரோகத்தால் மரணம் அடைந்ததுதான் ஒரு பெரிய விந்தை!

புதுமைப்பித்தனுக்குச் சாப்பாட்டைவிட, பேச்சில் தான் பிரியம் அதிகம்; அதைவிட வெற்றிலை போடுவதில் மிகுந்த பிரியம். வெற்றிலை, காப்பி, பேச்சுத் துணைக்கு ஆள் — இத்தனையும் இருந்து விட்டால், சாப்பாட்டில்கூட அவருக்கு நாட்டம் செல்லாது. 'என்ன, சாப்பிட வேண்டாமா?' என்று கேட்டால், 'ஓஹோ, அப்படி ஒரு விஷயம் பாக்கி யிருக்கா?' என்று கேட்டுக்கொண்டே சாப்பிடக் கிளம்பினாலும் கிளம்புவார்; மீண்டும் பேச ஆரம்பித்தாலும் ஆரம்பிப்பார். அவர் சாப்பிடுவதும் அப்படி ஒன்றும் அதிகமாக இராது. காக்கைக்குச் சோறு வைத்த

மாதிரி இரண்டு கவளம் சாப்பிடுவார்; இருந்தாலும் சுசி ருசியாக இருக்க வேண்டும் என எண்ணுவார். இதற்காக வீட்டை விட்டு வெளியே சென்ருல், நல்ல சாப்பாடோ நல்ல பலகாரமோ எங்கு கிடைக்குமோ, அந்த இடம் வெகு தூரத்திலிருந்தாலும், அங்கு சென்றுதான் சாப்பிடு வார். காப்பி சாப்பிடுவதற்கு மட்டும் நேரம் காலம் என்று எதுவும் அவருக்குக் கிடையாது. ஆனல், அதற் காகக் கண்ட இடத்திலும் காப்பி சாப்பிட்டு விட மாட் டார். 'இங்கேயா காப்பி சாப்பிடுவது? இங்கே கழநித் தண்ணியையில்லா கொதிக்க வச்சுக் குடுப்பான்?' என் பார். நல்ல காப்பி, காப்பியின் சுயம்புவான மணம் கம ழும் காப்பியைத்தான், அதுவும் சர்க்கரை அதிகம் சேராது 'ஸ்ட்ராங்'காக இருந்தால்தான் சாப்பிடுவார்.

வெற்றிலை போடும் பழக்கம் அவரை இளமையிலேயே பிடித்துக் கொண்டது. வெற்றிலையைத் தவிர எப்போ தாவது சிகரெட்டோ, நல்ல உயர்ந்த ரகச் சுருட்டோ குடிப்பார். சிகரெட் குடிப்பதில் அவருக்கு அதிகப்படி யான பழக்கமோ ரசிப்போ இருந்ததாகச் சொல்ல முடி யாது. இருந்தாலும் நல்ல உயர்ந்த ரகமான சிகரெட்டுக் களேயே பிடிப்பார். ஒரு தடவை நான் அவரிடம் 999 என் னும் சிகரெட் பிராட்வேயில் ஒரு கடையில் இருந்தது என்று கூறிவிட்டேன். அது மிகவும் உயர்ந்த ரக சிகரெட். புதுமைப்பித்தன் 'அப்படியா?' என்று வியந்துபோய், உடனே நான் குறிப்பிட்ட கடைக்கு ஒரு பையனை டிராம் சார்ஜ் கொடுத்து அனுப்பினுர். போனவன் அந்தக் கடை யில் ஒரே ஒரு சிகரெட்தான் இருந்தது என்று அதை வாங் கிக் கொண்டு வந்து சேர்ந்தான். அந்த சிகரெட்டையும் அவர் குடிக்கவில்லை. 'பாவம், நீ ஏமாந்து போவாய்!' என்று என்னிடம் தள்ளி விட்டுவிட்டார்! சிகரெட் குடிப் பது அவருக்கு விலக்க முடியாத பழக்கமும் அல்ல; நித்ய கருமமும் அல்ல. ஆனல் வெற்றிலை போடுவது மட்டும் அவரைப் பற்றிப் பிடித்துவிட்ட தீராத பழக்கம்.

புதுமைப்பித்தனின் 'கருச் சிதைவு' என்ற கதையைப் படித்திருக்கிறீர்களா? அதில்வரும் சுந்தரம் பிள்ளையைப் பற்றிப் புதுமைப்பித்தன் பின் வருமாறு குறிப்பிடுகிருர்:

''அவருக்கு வெற்றிலை போடுவது வெறும் சம்பிரதாய மல்ல — மகாயக்ஞம்!....

''தென்புலத்தில் அதாவது எமன் திசையில் சுண்ணம்பு மட்டிலும் இருக்கும். காரைக் கட்டியாகவாவது. அதைச் சூரணமாகவோ, அல்லது அவகாசமிருந்தால் மந்தித்து அதன் பூர்வாசிரமத்திற்கு அதைக் கொண்டு வந்தோ வைத்துக்கொண்ட பின் வெற்றிலையை ஒவ்வொன்ருக எடுத்துக் காம்புகளைக் கீறிவிட்டு, சுண்ணம்பைத் தடவுவார். பிறகு அதில் (செல்லத்தில்) சீவல் பாக்கோ அல்லது அது இருந்த இடத்தில் கிடக்கும் தூசு தும்பட்டமோ - அதைச் சுமையேற்றிப் பொட்டலமாக மடித்து ஒரே கவளமாகப் போட்டுக் கொள்ளுவார்....பிறகு புகையிலை தேடு படலம்....''

புதுமைப்பித்தன் கற்பித்த சுந்தரம் பிள்ளை எப்படி வெற்றிலை போட்டுக் கொண்டாரோ, அதுபோலவேதான் இந்த இலக்கிய பிரம்மா பிரம் மபத்திரத்தோடு கலந்த தாம்பூல சுகத்தை ஒருநாளுக்கு இருபது தடவையாவது அனுபவித்து வந்தார். நண்பர் ஆ. முத்துசிவன் குறிப்பிடுகிற மாதிரி, 'புதுமைப்பித்தனுக்கு வெற்றிலை போடுவதில் அலாதியான வெறி. போட்டோ பிடிக்கிற காலத்தில் கூட வெற்றிலையுடன் புகையிலையை ஒரு பக்கமாக வாயில் ஒதுக்கிக்கொண்டு காமிரா முன்னுல் உட்காருவதென்பது அவரைப் பொறுத்தவரை ஆசாரம் போன்ற ஒரு சத்காரியம்'தான். வெற்றிலை போடுவதற்கு எப்படி நேரம் காலம் என்று ஒரு நியதி கிடையாதோ அதுபோலவே தூங்குவதிலும் அவருக்கு நியதி கிடையாது; விழித்திருப்பதிலும் நியதி கிடையாது. ஆனுலும் இரவு அகாலத்தில் தான் படுப்பார். அதிகாலையிலேயே எழுந்து ஸ்நான பானங்களை முடித்தாலும், அவை முடிந்த பிறகு சமயங்களில் ஒரு தூக்கம் போடுவார். சிறுபிள்ளை எதற்கோ பயந்துபோய் குப்புற அடித்து ஒண்டிப் படுத்துக் கிடப்பது போல் முதுகு குப்புறப் படுத்து முடங்கித் தூங்குவார். தூங்குவதை 'சேவை' பண்ணுவதாகக் கூறுவார். இரவில் தூங்கும்போதுகூட ஒழுங்காக ஒரேயடியாய்த் தூங்க மாட்டார். சமயங்களில் நடுத் தூக்கத்தில் எழுந்து

ஒரு முறை வெற்றிலே போட்டுவிட்டு மீண்டும் படுப்பார்; இல்லாவிட்டால், என்மாதிரி யாராவது ஒருவர் அவர் வீட்டில் நல்ல தூக்கம் போட்டுக் கொண்டிருந்தால், உரிமையோடு வந்து திடீரென்று எழுப்பி உட்கார வைத்து, 'தூக்கம் வரவில்லே. வா, பேசிக்கொண்டிருப்போம்' என்பார். நமக்கு எந்தக் கும்பகர்ணத் தூக்கம் வந்தாலும் சரி, தூங்க விடாமல் கெடுத்து, பேச்சிலும், வெற்றிலே பாக்கிலும் இறங்கி விடுவார்.

அவரது அரைத் தூக்கம் குறைத் தூக்கத்தைப்பற்றி எழுதும்போது, எனக்கு ஒரு சம்பவம் ஞாபகத்துக்கு வருகிறது. அப்போது புதுமைப்பித்தன் ஜெமினிக்குக் கதை, வசனம் எழுதிக் கொண்டிருந்தார். அதாவது எழுதிக் கொண்டிருப்பதாகச் சொல்லி வந்தாரே ஒழிய, உண்மையில் கால்வாசிகூட எழுதி முடிக்கவில்லே. பேனவையே தொடாமல் இருந்து வந்தார். கடைசியில் கொஞ்சமாவது எழுதிக் காட்ட வேண்டும் என்ற நிர்ப்பந்த சங்கடமான நிலேமை ஏற்பட்டு அவரை நெருக்க ஆரம்பித்தது. அந்தச் சமயத்தில் ஒருநாள் நானும் அவரும் இரவு இரண்டு மணி வரையிலும் ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டோம்; பிறகு படுத்து விட்டோம். காலே ஏழு ஏழரை மணிக்கு நான் எழுந்து வந்தபோது, புதுமைப்பித்தன் கிணற்றடியில் பல்துலக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். மேஜைமீது வரிசை வரிசையாக காகிதங்கள்- எழுதப்பட்ட காகிதங்கள்- இருந்தன. சுமார் ஐம்பது அறுபதுக்குப் பஞ்சமில்லே. அத்தனேயும் சினிமா வசனம். எனக்கு ஒரே ஆச்சரியமா யிருந்தது. அவரிடம் கேட்டேன். இரவு படுத்தவுடனேயே தூக்கம் பிடிக்காததால் உடனே வசனத்தை எழுத உட்கார்ந்தாராம்! ஆனல் அந்த இரவின் குறைப் பொழுதில் அவர் இத்தனே பக்கங்கள் எழுதியது உண்மையில் அப்படி எழுதிப் பார்த்தவர்களுக்குத்தான் விந்தையாக இருக்கும்.

புதுமைப்பித்தன் எப்படி எழுதுவார் என்று வாசகர்களுக்குத் தெரிந்துகொள்ள ஆவலாயிருக்கும். புதுமைப்பித்தன் எழுத்து வேலேகளில் ஏகாம்பவாணனின் பூதம்

மாதிரியும் வேலை செய்வதுண்டு; கும்பகர்ணனைப்போல், மாதக் கணக்கில் தூங்கிக் கிடப்பதும் உண்டு. லேசில் பேனாவை எடுக்க மாட்டார்; எடுத்தால் சீக்கிரத்தில் வைக்கவும் மாட்டார். இவரிடம் யாரேனும் வந்து கதை கேட்டுவிட்டு, இவர் சொல்லும் வாக்குறுதியை நம்பி 'அடுத்த இதழில் புதுமைப்பித்தன் கதை' என்று விளம்பரப்படுத்தியும் விடுவார்கள். அப்புறம் அவர்கள் புதுமைப் பித்தனிடம் நடையாய் நடந்துதான் கதை பெறவேண்டும்; அப்படி 'கர்ம யாத்திரை' செய்தும்கூட, சமயங்களில் பலன் கிட்டாமல் போய் விடுவதுண்டு. ஆனால் கதைக்காக ஆசாமி வந்து நெருக்குகிறான் என்பதற்காக அவர் காமா சோமாவென்று எதையேனும் எழுதித் தள்ள நினைக்க மாட்டார். அவரது எழுத்துக்களில் கர்ம சிரத்தையும் மதிப்பும் நாணயமும் அவருக்கே உண்டு. கதை கேட்டு வரும் ஆசிரியரிடம் எவ்வளவு தூரம் முதுகை நெளித்துக் கொடுத்துத் தாமதப்படுத்தி ஏமாற்ற முடியுமோ, அவ்வளவும் செய்து பார்ப்பார். எழுதாமல் தீராது என்ற நிலைமைக்கு வந்துவிட்டால், அதன் பிறகு அவர் புதுமைப்பித்தனல்ல; பூதமாகவே மாறி வேலை செய்வார். கதை கொடுக்காமல் ஏமாற்றுவதைப் பார்த்து அவரிடம் அதைப்பற்றிக் கேட்டால், ""ஐயாவிடம் கதை வாங்கிறது என்றால் லேசா? கொஞ்சம் அலைந்துதான் வாங்கட்டுமே!"" என்பார். ஆனால் அவர்களை அலைய வைக்க வேண்டும் என்ற எண்ணமே அவருக்குக் கிடையாது; சோம்பேறித் தனத்துக்கு வக்காலத்து வாங்கும் சப்பைக்கட்டாகத்தான் அந்தப் பேச்சு விளங்கும். கதை வாங்க வரும் ஆசிரியர்கள் ""என்ன ஸார், கதையைத் தீர்மானித்து விட்டீர்கள் அல்லவா? இல்லை. அதுவே இனி மேல்தானா?"" என்று கேட்டால், உண்மையில் கதை எதுவும் தீர்மானித்து வைத்திரா விட்டாலும். ""அதெல்லாம் மனசுக்குள்ளே இருக்கு. எழுத வேண்டியதுதான்"" என்று கூறிக்கொண்டே, அந்த க்ஷணத்திலே எதிராளிக்குப் புரியாத வகையில் ஒரு கதை சொல்ல ஆரம்பித்து விடுவார். வந்தவர் 'சரிதான், இனி கிடைத்துவிடும்' என்று நினைத்துக்கொண்டு புறப்படுவார்; அவருக்குப் பின்னாலேயே அந்தக் கதையும் காற்றோடு கலந்து புறப்பட்டுப் போய் விடும்.

புதுமைப்பித்தன் கதையோ கட்டுரையோ எழுதும் போது நிதானமாக ஆர அமர இருந்து எழுதமாட்டார், பேனாவை எடுத்துவிட்டால், அந்தப் பேனாவுக்குள் எங்கிருந்தோ ஒரு அசுர வேகம் வந்து புகுந்து விடும். விறுவிறு என்று மெயில் வேகத்தில் கை ஓடும். இடையிலே வெற்றிலை போட்டுக் கொள்ளும் நேரத்தைத் தவிர, மற்ற நேரங்களில் எழுதுவதில் ஸ்தம்பிப்பே ஏற்படாது. புதுமைப்பித்தனின் ஆரம்பகால சிருஷ்டிகளைப் பற்றிக் கூறுபவர்கள் அவர் தாவித் தாவிச் செல்லும் நடையிலே எழுதுகிறார் என்று குறிப்பிட்டதுண்டு. அவரது பேனா செல்லும் வேகமே அதிவேகம்; அதைவிட, அவரது கற்பனை செல்லும் வேகமோ அதிலும் மிஞ்சிய வேகம்; எனவே அவரது எழுத்துக்கள் தாவித் தாவிச் செல்லும் முறையில் இருந்திருந்தால் அதற்கு எழுதும் சாதனம்தான் குறைபாடுடையது என்று கூற வேண்டும்.

புதுமைப்பித்தனின் கையெழுத்து கண்ணில் ஒற்றிக் கொள்ளக் கூடிய பூப்போன்ற எழுத்துகள் அல்ல. என்னவோ சுருக்கெழுத்து எழுதிய மாதிரி இருக்கும். அங்குமிங்கும் கோடுகள் தெரிவது மாதிரிதான் பிரமை தோன்றும். எழுதிய காகிதத்தைக் கொஞ்சம் பக்கத்தில் கொண்டு வந்து கூர்ந்து பார்த்தால்தான் அதில் ஏதோ கொஞ்சம் தமிழ் எழுத்துக்கள் அங்குமிங்கும் தெரியும். சிலருக்குத் தலையெழுத்து நன்றாக இல்லாவிட்டாலும் கையெழுத்து மட்டும் மணிமணியாக இருக்கும். புதுமைப்பித்தனது கையெழுத்தோ அவரது தலையெழுத்தைவிட மோசமாயிருந்தது. அவரது கடிதத்தையோ கதையையோ லகுவில் படித்துவிட முடியாது. கோழி கிண்டிய மாதிரி என்பார்களே, அந்தத் தினுசான கையெழுத்து. 'என்னுடைய கையெழுத்து எனக்குப் புரியும்; என் எழுத்தைக் கம்போஸ் செய்பவனுக்குப் புரியும்' என்பார் புதுமைப்பித்தன். புதுமைப்பித்தனின் கையெழுத்து மிகவும் மோசமாக இருந்ததற்கு அவரது தினசரிப் பத்திரிகையின் அசுரவேகத் தர்ஜுமாத் தொழிலே காரணமா யிருந்திருக்கலாம். புதுமைப்பித்தன் அசுரவேகத்தில் எழுதுபவராதலால், தமது வேகம் தடைப்படக்கூடாது என்பதற்காக அருமையான,

விலையுயர்ந்த ஷீபர்ஸ் பேனவைக் கொண்டுதான் எழுது வார். பென்ஸிலால் எழுதும் வழக்கமோ, மைக்கூட்டில் முக்கி எழுதும் வழக்கமோ, அவரிடம் கிடையவே கிடை யாது.

சில எழுத்தாளர்களுக்குத் தமது கதையைத் தாமே தான் உட்கார்ந்து எழுதி முடிக்க வேண்டியிருக்கும். வாய் மொழியாகச் சொல்லிப் பிறரைக்கொண்டு எழுதச் சொல்ல முடியாது. அப்படிச் சொல்ல வார்த்தை வராது. புதுமைப் பித்தன் அப்படியல்ல. தாமாகவும் எழுதுவார். தாம் சொல்லச் சொல்ல எழுதுவதற்கு ஆள் இருந்தால், அதே அசுர வேகத்தில் சொல்லிக் கொண்டும் போவார். இது சம் பந்தமாக ஒரு ருசிகரமான சம்பவத்தைக் குறிப்பிடலாம்.

திருவனந்தபுரம் நண்பர் சிதம்பரம் தமது 'கவிக்குயில்' மலருக்காகப் புதுமைப்பித்தனிடம் ஒரு கதையோ கட் டுரையோ கவிதையோ எழுதித் தரும்படிக் கேட்டுக் கொண் டார். புதுமைப்பித்தன் ஆனமட்டும் கடத்திப் பார்த்தார். சிதம்பரம் விடுகிற ஆசாமியாயில்லை. 'நீங்கள் சொல்லுங் கள். நான் எழுதிக்கொள்கிறேன்' என்ருர் சிதம்பரம். 'சரி. புறப்படு' என்று கூறிக்கொண்டே, சிதம்பரத்தின் வீட் டுக்கு வந்து சேர்ந்தார் புதுமைப்பித்தன். சிதம்பரத்தின் வீட்டில் புதுமைப்பித்தனுக்கு ஒரு தட்டு நிறைய முறுக்கு, ஏத்தங்காய் வற்றல், தளிர் வெற்றிலை, பழக்காப் பாக்கு, யாழ்ப்பாணம் புகையிலை, வாய் கொப்பளிக்கத் தண்ணீர், எழுதுவதற்குத் தாள், பேனு — எல்லாம் காத்திருந்தன. புதுமைப்பித்தன் சிதம்பரத்தின் இந்த ஏற்பாட்டைப் பார்த்துப் பிரமித்துப் போனர். கவிஞர் பாரதியார் குதிரை வண்டியில் செல்லும்போது, அவருடன் வந்தவர் சுண்டலையோ கடலையையோ 'தேவாமிர்தமாக இருக் கிறது' என்று சொன்னவுடன், 'விடடா ரதத்தை!' என்று குதிரைக்கார 'மாதலி'யைப் பார்த்து உத்தரவு கொடுத்த தாக நாம் கேள்விப் பட்டிருக்கிரேம். புதுமைப்பித்தன் தமக்கு எதிரேயுள்ள அந்தப் பொருள்களைப் பார்த்தார்.

உடனே சிதம்பரத்தைப் பார்த்து, ''ஏது, யுத்த தள வாடம் எல்லாம் தயாராயிருக்கே! பிரகடனம் கொடுக் கட்டுமா?'' என்று சொன்னர்.

''சரி'' என்றார் சிதம்பரம்.

''சரி. எடு தாளை. எடு பேனாவை. சொல்லச் சொல்ல எழுதிக் கொண்டே வா'' என்றார் புதுமைப்பித்தன்.

புதுமைப்பித்தன் சொன்னார்; சிதம்பரம் எழுதினார். அப்போது அவர் எழுதிய அந்தக் கட்டுரைதான் 'பாட்டும் அதன் பாதையும்' என்பது.

கட்டுரை முடிவை நெருங்கும் சமயத்தில் புதுமைப் பித்தன் வெற்றிலையைப் போட்டுக் கொண்டு, மீண்டும் கட்டுரையைத் தொடங்கினார். ஆனால் கட்டுரையின் போக்குக்கு மீண்டும் தடையேற்பட்டு விட்டது.

''தம்பி தம்பி! கொஞ்சம் நில்லு. கட்டுரை பாதியிலேயே நிற்கட்டும். ஒரு பாட்டு வருது. எழுதிக்கோ!'' என்றார் புதுமைப்பித்தன்.

**''காளான் குடை நிழலில்**
**கரப்பான் அரசிருக்க**
**வேளான் குடியூரில்**
**வெள்ளெருக்கம் மூட்டருகே....''**

விறு விறு என்று சுமார் முப்பது வரிகள் வரையிலும் பாட்டு தட்டுத் தடங்கலில்லாமல் சென்றது; பிறகு பாட்டும் தடைப்பட்டு நின்றது.

''பாட்டு ஸ்டாக் தீர்ந்து போச்சு. இனி கட்டுரையை எடு'' என்றார் புதுமைப்பித்தன்.

அன்று கட்டுரை முடிந்தது; மறுநாள் பாட்டும் முடிந்தது. அந்தப் பாட்டுத்தான் கவிக்குயில் மலரில் வெளி வந்த 'மகா காவியம்' என்பது.

நண்பர் கு. அழகிரிசாமி புதுமைப்பித்தனைப் பற்றிய ஒரு கட்டுரையில் ''அவருடைய கதைகளில் நமக்கு எவ்வளவு மதிப்பு உண்டோ அவ்வளவு மதிப்பு அவருக்கும் உண்டு'' என்று குறிப்பிட்டிருக்கிறார். புதுமைப்பித்தனுக்குத் தமது எழுத்துக்களில் மிகுந்த ஈடுபாடு. தம்முடைய கதைகளை அவர் குழந்தைகளைப் போல் புனித

மாகவும் அன்போடும் மதித்துப் பேசுவார். உண்மையான எழுத்தாளனுக்கு இருக்கவேண்டிய அருங் குணங்களில் இது மிகவும் முக்கியமானது. இந்த நேர்மையும் நாணய மும் பக்தியும் தமது எழுத்துக்களில் இல்லாத காரணத் தால்தான், சில எழுத்தாளர்கள் தங்கள் எழுத்துக்களை விபசாரம் செய்கிறார்கள்; விலை சாட்டுகிறார்கள்; தம்மையே விற்று விடுகிறார்கள். புதுமைப்பித்தன் தமது எழுத்தின் மதிப்பை உணர்ந்து பேசுவார். அதை விமர்சனம் செய் தால் கேட்பார். குறைத்துப் பேசுவதாகத் தோன்றினால் சீறியெழுந்து விடுவார்.

இதுபற்றி எனக்கு இரண்டு சம்பவங்களைக் குறிப் பிட்டுச் சொல்ல வேண்டும் என்று தோன்றுகிறது. ஒரு தடவை புதுமைப்பித்தன் நான் வேலை பார்த்த பத்திரிகா லயத்துக்கு என்னைப் பார்க்க வந்திருந்தார். அதே சமயம் என்னோடு வேலை பார்த்த இன்னொரு எழுத்தாளரிடம் கட் டுரை கேட்பதற்காக, ஒரு பத்திரிகாசிரியரும் வந்திருந் திருந்தார். வந்தவர் புதுமைப்பித்தனைக் கண்டதும் மரி யாதைக்காகவும், உபசாரத்துக்காகவும், ""நீங்களும் ஒரு கதை எழுதித் தாருங்களேன்'' என்று தெரியாத்தனமாகக் கேட்டுவிட்டார். என்னவோ கல்யாணத்துக்கு வந்த இடத்தில் பெண் கேட்கிற பாவனையில், அவர் போகிற போக்கில் கேட்டது ஒரு பக்கம்; அந்தப் பத்திரிகாசிரிய ரது பத்திரிகை மூன்றாந் தரமான பத்திரிகை என்பது இன்னொரு பக்கம். புதுமைப்பித்தன் உடனே அந்தப் பத்திரிகாசிரியரைப் பார்த்து, ""அப்பா, நீ என்னிடம் கதை கேட்காதே. என் கதையை உன் பத்திரிகை தாங் காது. என் கதை நெருப்பப்பா, நெருப்பு! உன் பத்திரிகை சாம்பலாய்ப் போகும்! தெரிந்து கொள்'' என்று பதில் கூறினார். இந்தப் பயங்கரமான பதிலில் அவர் தமது எழுத்தைப் பற்றி எவ்வளவு தூரம் மதிப்பு வைத்திருந் தார், விசுவாசம் கொண்டிருந்தார் என்பது தெரியவரும்.

இன்னொரு முறை இரண்டு பதிப்பாளர்கள் புதுமைப் பித்தனைப் பார்க்க வந்திருந்தார்கள். புதுமைப்பித்தன் அப்போது ஒரு கதை எழுதி வைத்திருந்தார். அந்தக் கதை சரஸ்வதியைப் பற்றிய கதை. சரஸ்வதி உண்மையின்

சொரூபம். உண்மை கறைபட்டோ திரைபட்டோ மூடிப் போகாதது. எனவே அந்தக் கதையில் புதுமைப்பித்தன் சரஸ்வதியைத் திகம்பர சொரூபமாகவே வருணித்திருந்தார். பயங்கரமான, கொஞ்சம் கண்ணைச் சுழித்துப் பார்க்க வேண்டிய கற்பனைதான். வந்தவர்களிடம் புதுமைப்பித்தன் அந்தக் கதையைப் படித்துக் காண்பித்தார். வந்தவர்கள் திடுக்கிட்டுப் போனார்கள். கடைசியில் போகும்போது, அவர்கள் புதுமைப் பித்தனிடம் அந்த எழுத்துப் பிரதியை வாங்கிப் பார்த்தார்கள். அந்தப் பயங்கரமான கற்பனையைக் கண்டு, தமது உள்ளத்தில் எழுந்த ஆத்திரத்தில் அந்தப் பிரதியைக் கிழித்துத் தும்பு தும்பாக்கி விட்டெறிந்து விட்டு, ''என்னய்யா இது, வேறு ஏதாவது எழுதக் கூடாதா? இதுதானா கிடைத்தது?'' என்று சொல்லிக் கொண்டார்கள்.

புதுமைப்பித்தனுக்கோ உள்ளூரப் பெருங்கோபம் கிளர்ந்தது. இருப்பினும் அதை வெளிக் காட்டிக் கொள்ளவில்லை.

''கிழித்துத்தானே போட்டீர்கள். ஒரு குழந்தையைக் கொன்றுவிட்டீர்கள். ஆனால், ஒன்று ஞாபகமிருக்கட்டும். நான் ஒன்றும் மலடு அல்ல. இதைவிடப் பலம் பொருந்திய குழந்தையை என்னால் பெறமுடியும். போய் வாருங்கள்'' என்று கூறி அவர்களை வழியனுப்பி வைத்து விட்டார். ஆனால் அதன் பிறகு துரதிருஷ்ட வசமாக அந்தப் 'பலம் பொருந்திய குழந்தை' பிறக்கவே இல்லை.

புதுமைப்பித்தன் தமது கதைகளை யாராவது விமர்சனம் செய்தால், அதிலும் விமர்சனம் செய்கின்ற நபர் தகுதியுள்ள நபராக இருந்தால்தான், அதைக் காது கொடுத்துக் கேட்பார். யாராவது அவரிடம் வந்து முகஸ்துதிக்காக, ''ஸார், உங்கள் கதை அற்புதம், அபாரம்!'' என்று வாய்ப்பந்தல் வீசினால் அதைப் புரிந்துகொண்டு அதற்குத் தக்கபடி அவர் பதில் கொடுப்பார்.

''வே, நாம் எழுதுவது நல்லா இராமே, வேறுவிதமாக இருக்க முடியாது. ஆகவே நல்லா இருக்கு என்று சொல்

வதே தப்பு. என்னைக் காலைவாரி விடப் பார்க்காதேயும். போய்வாரும்'' என்று கூறி விரட்டி விடுவார்.

சிலர் புதுமைப்பித்தனின் கதை எதையாவது எடுத்து வைத்துக்கொண்டு, தாங்கள் என்னவோ இலக்கியத்தில் அக்கரை இக்கரை கண்டவர்கள் மாதிரி பாவனை செய்து கொண்டு' ''ஸார், உங்க கதை புரியலையே!'' என்று கூறி அவரது கதையின் மதிப்பைக் குறைக்க முயல்வார்கள். அப்படிக் கூறுகிறவர்களிடம் ''ஸார், இது உமக்காக எழுதவில்லையே'' என்று கூறி மடக்கி விடுவார் புதுமைப் பித்தன்.

இதனால் புதுமைப்பித்தன் தமது கதைகளைப் பற்றி அபிப்பிராயம் சொல்லவோ, அபிப்பிராயத்தை ஏற்கவோ மாட்டார் என்று சிலர் தவறாக எண்ணியதுண்டு. உண்மை அதுவல்ல. நேர்மையோடு, உண்மையோடு, ஈடுபாட்டோடு உணர்ந்து பேசுகிறவர்களிடம் அவரும் முகம் கொடுத்து ஒழுங்காகப் பேசுவார். என்னிடமும் வேறு சில நண்பர் களிடமும் புதுமைப்பித்தன் அந்த மாதிரிப் பேசியதுண்டு.

புதுமைப்பித்தனைப் பற்றிச் சிலருக்கு இன்னொரு அபிப்பிராயமும் இருந்து வந்ததுண்டு. 'அவர் ஒரு முசுறுக் குணப் பிறவி. அவரோடு யாரையா பழகுவான்?' என்று கூறியவர்களும் உண்டு. உண்மையில் அப்படிக் கருதிய வர்கள் புதுமைப்பித்தனைச் சரியாக உணர்ந்து கொள்ள வில்லை என்றுதான் அர்த்தம். அவர் பட்டுப் பட்டென்று எதையும் வெட்டிப் பேசுவதைக் கண்டு, அதைத் தாங்க முடியாது ஒதுங்கிப் போனவர்கள்தாம் இந்த மாதிரிச் சொல்லிக் கொண்டார்கள். உண்மையில் புதுமைப்பித்தன் எல்லோருடனும் நெருங்கிப் பழகுவார். இன பேதம், மொழி பேதம், மத பேதம் என்று எந்தவித பேதத்தையும் கவனியாது இவர் பழகுவார். வகுப்புவாதிகளிலும் அவ ருக்கு இருபுறத்து நண்பர்களும் இருந்தார்கள். ஆனால் புதுமைப்பித்தனுக்குப் பிடிக்காதவர்கள் சிலர் உண்டு. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுபவர்கள், சுய விளம்பர ஆசாமிகள், முகஸ்துதிக்காரர்கள், திருட்டு இலக்கிய கர்த்தாக்கள், காக்காய் பிடிப்பவர்கள் — இப்படிப்

பட்டவர்களைத்தான் புதுமைப்பித்தனுக்குப் பிடிக்காது இப்படிப்பட்ட ஆசாமிகளுக்குப் புதுமைப்பித்தன் வைக்கின்ற பெயர்கள்கூட விசித்திரமாயிருக்கும். திருட்டு இலக்கியம் செய்கிறவர்களைப் புதுமைப்பித்தன் காட்டிக்கொடுப்பார். எதிர்த்துப் போராடுவார். புதுமைப்பித்தன் இப்படிப் பட்டவர்களைச் சந்திக்க நேர்ந்தாலும், அப்போது தம் மனசிலுள்ளதைப் பட்டவர்த்தனமாக மூஞ்சியில் அடித்தாற்போல் கூறிவிடுவார். அவர்களைத் தாம் வைத்திருக்கும் பட்டப் பெயர்களைச் சொல்லியே கூப்பிடுவார். எதிராளி முகம் கோணுவானே என்று 'கூடப் பார்க்க மாட்டார். யாராவது ஏதாவது ஒரு விஷயத்துக்குச் சப்பைக்கட்டுக் கட்டினால், ''என்னவே, பாத்தி பிடித்துப் பம்மாத்துப் பண்ணுதே?'' என்று நேராகவே கேட்டு விடுவார். இதனால்தான் அவரோடு பழகுவதற்குப் பலர் பயந்து ஒதுங்கினார்கள் என்று சொல்லவேண்டும்.

உண்மையில் புதுமைப்பித்தன் மிகவும் இளகிய மனம் கொண்டவர். பேச்சுத்தான் காரசாரமா யிருக்குமே ஒழிய பழகும்போது வஞ்சனையின்றி, கள்ளங் கவடின்றிப் பேசுவார்; பழகுவார். அவருக்கு யாருடன்தான் பழகவேண்டும் என்ற நியதி கிடையாது. மனித குலத்தின் சகல பிரிவினருடனும் அவர் பழகுவார். மனைவியிடம் எவ்வளவு சுதந்திரமாகவும் பிரியமாகவும் பழகுவாரோ, அதே பிரியத்துடன் ரிக்ஷாக்காரனிடமும் பழகுவார். தாம் சாப்பிடும் ஹோட்டல் ஸெர்வர்களோடும் குஷாலாகப் பேசுவார்; முதலாளியுடனும் பேசுவார்; வெளியே வெற்றிலைப் பாக்குக் கடைக்காரனிடம் அவனது க்ஷேம லாபங்களை விசாரித்து அன்போடு பேசுவார். எனவே வாழ்க்கையின் கடைநிலையில் துயரப்படும் மனிதர்கள்கூட, புதுமைப்பித்தனிடம் பேசுவதில் ஆனந்தம் கொள்வார்கள். ரிக்ஷாக்காரன் உரிமையோடு வந்து, ''ஸாமி, நாஸ்டா பண்ணலே. நாலணா குடு ஸாமி. ஸவாரிலே கழிச்சிக்கோ'' என்று கேட்பான். அவனுக்குக் காசு கொடுப்பார். ஒரு தடவை ராயப்பேட்டை டிராம் ஷெட் அருகிலுள்ள ரிக்ஷாக்காரன் இரவு பத்து மணிக்கு, புதுமைப்பித்தன் வீட்டு ஜன்னலருகே வந்து நின்று ''ஸாமி, ஒண்ணுமே துண்ணலே.

பசிக்குது சாமி. சோறு ஏதாச்சும் இருந்தாக் குடு'' என்று கேட்டான். கொடுப்பதற்கு அந்தச் சமயம் அவ ரிடம் ஒன்றுமில்லாததால் அவன் ஏமாந்து திரும்பினன். ஆனல் மறுநாள் இரவில் நானும் புதுமைப்பித்தனும் ஹோட்டலிலிருந்து சாப்பாடு வரவழைத்துச் சாப்பிட் டோம். சாப்பாடு மிஞ்சி விட்டது. உடனே புதுமைப்பித் தன் அந்தச் சாப்பாட்டைத் தூக்கிக்கொண்டு வெளியே புறப்பட்டார். ''நேத்தே கேட்டான். பாவம், காலையிலே யாரிடமாவது போடுவதை இப்போதே அவனுக்குக் கொடுத்தால் என்ன?'' என்று கூறிவிட்டு, பக்கத்தி லிருந்த டிராம் ஷெட் ரிக்ஷா ஸ்டாண்டுக்குச் சென்று, அந்த ரிக்ஷாக்காரனிடம் சாப்பாட்டைக் கொடுத்து விட் டுத் திரும்பி வந்து சேர்ந்தார் புதுமைப்பித்தன்.

புதுமைப்பித்தன் தம்மோடு பழகும் நண்பர்கள்—அவர்கள் பிரபல எழுத்தாளர்களாயினும் சரி, குட்டி எழுத்தாளன் ஆயினும் சரி —யாராயிருந்தாலும் எல்லோ ரிடமும் ஒரே மாதிரிதான் பழகுவார். சிறியவன், பெரி யவன் என்ற வித்தியாசம் கிடையாது. திறமை இருப்ப வர்களைப் போற்றுவார்; இளம் எழுத்தாளர்களை ஊக்குவிப் பார். ஆனல் 'உருப்படியாக மாட்டான்' என்று உத்தரவாத மாகத் தெரியும் நபர்களைத்தான் வெறுத்து ஒதுக்குவார். ஆனல் அவரைப் பார்க்க வருபவர்கள் அவரை நண்ப ராகவே பார்க்க வரவேண்டும். தம்மை அவரது சிஷ்யன் என்றோ, பரம ரசிகன் என்றோ விளம்பரப் படுத்திக் கொண்டு வருபவர்களை அவர் ஏற்றுக் கொள்ளவே மாட் டார். ஒரு தடவை நண்பர் அழகிரிசாமியை ஒருவர் புதுமைப்பித்தனுக்கு முதன்முதல் இனம் காட்டியபோது ''இவர் அழகிரிசாமி. உங்கள் சிஷ்யர்'' என்று கூறினர். ''சிஷ்யனென்று சொல்லாதீர்கள். சிஷ்யன் என்றல் மேல்வீடு காலி என்று அர்த்தம். நண்பரென்று சொல் லுங்கள்'' என்று அந்த ஆசாமிக்குப் பதில் கொடுத்தார் புதுமைப்பித்தன். இதுபோலவே இன்னொரு தடவையும் அவர் என்னிடம் ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார். ஒரு எழுத்தாளர் தமது நூலொன்றைப் புதுமைப்பித்தனுக்குக் குச் சமர்ப்பணம் செய்து, தமது 'ஏகலைவ பக்தி'யின் அடை

யாளமாக அதைச் சமர்ப்பித்திருப்பதாகக் குறிப்பிட்டிருந் தார். புதுமைப்பித்தனுக்கு அதைக் கண்டவுடன் எரிச் சல்தான் வந்தது. ''ஏகலைவனாவது, பக்தியாவது? சிஷ்ய பரம்பரை யாருக்கு வேணும்? ஆசாமியின் கட்டை விர லைக் காணிக்கை கேட்டால்தான் சரியாய் வருவான்!'' என்று அடித்தாற்போல் சொன்னார், அவர்.

இதே மாதிரி புதுமைப்பித்தன் புனாவில் இருந்த சம யத்தில், பம்பாய் இலக்கிய ரசிகரான கே. டி. தேவர் புதுமைப்பித்தனைத் தரிசிக்க விரும்பி அவருக்கு ஒரு கடி தம் எழுதினார். அந்தக் கடிதத்துக்குப் புதுமைப்பித்தன் பதில் எழுதும்போது பின் வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

''....தாங்கள் இங்கு வருவதுபற்றியோ, என்னுடன் ஒருநாள் தங்கிவிட்டுப் போவதைப் பற்றியோ எனக்கு ஆட்சேபணை கிடையாது என்பதுடன், மகிழ்ச்சியும்கூட.

''தங்களை எனக்கு அறிமுகம் இல்லை. ஆனால் அது பரிசயத்துக்கும் புதிய நட்புக்கும் என்றும் என்னிடம் தடையாக அமைந்தது கிடையாது. ஆனால் இரண்டு தலை மாடு, புதிய சினிமா ஸ்டார், நெருப்பை விழுங்குகிறவன், பெரிய மனிதன், ஜெட் புரொப்பெல்லர் விமானம் — இது மாதிரி என்னைக் காட்சிப் பொருளாக மதித்து அல்லது அவை போன்ற பெரிய இடத்து நோக்கங்களுடன் வரு கிறவர்களை நானும் விசித்திர ஜீவன்களாக மதித்து விடுவது என் இயல்பு. நண்பர்களுக்கு இடம் உண்டு; புதிய நண்பர்களுக்கு வரவேற்பு உண்டு.

இப்படிக்கு,
தாங்கள் சந்திக்க விரும்பும்
**சொ.விருத்தாசலம்**

புதுமைப்பித்தன் நண்பர்களை வரவேற்பதும் உண்டு; தேடிப் போவதும் உண்டு. உதாரணமாக, எனக்கும் புதுமைப்பித்தனுக்கும் பரிசயம் ஏற்பட்டது ஒரு தனிக் கதை. அதை இங்கு விவரிக்கவில்லை. புதுமைப்பித்தன் எப்போதோ திருநெல்வேலிக்குச் சென்றிருந்த பொழுது,

அப்போது திருநெல்வேலியில் இருந்த அ. சீனிவாச ராகவன் வீட்டில் எனது 'பிரிவுபசாரம்' என்ற கதையை நண்பர் ஒருவர் வாசிக்க, புதுமைப்பித்தன் கேட்டிருக்கிறார். அந்தக் கதை அவருக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. 'யார் இந்த ரகுநாதன்?' என்று கேட்டுவிட்டு, என்னைச் சந்திக்க விரும்பி யிருக்கிறார். அப்போது நான் திருநெல்வேலியில் இல்லை. அதன் பின்னர் புதுமைப்பித்தனுக்கும் எனக்கும் நேர்முகப் பரிசயம் கிட்டாத இடைக்காலத்தில், புதுமைப்பித்தன் 'தினசரி'யில் ஒரு ஆசிரியரின் முதல் புத்தக முயற்சியை வரம் பின்றித் தாக்கி எழுதியிருந்தார். அந்த மதிப்புரையைக் கண்டதும் எனக்கு அதற்கு ஒரு மறுப்பு எழுத வேண்டும் எனத் தோன்றியது. அந்த மதிப்புரைக்குப் பலியான நூலாசிரியர் புதுமைப்பித்தனுக்கும் நண்பர்; எனக்கும் நண்பர். அப்போது திருநெல்வேலியில் இருந்தஅ. சீனிவாச ராகவன், 'துறைவன் முதலியவர்களும், நானும் இதுபற்றிப் பேசி மறுப்பு எழுதித் தான் தீருவது என்று தீர்மானித்தோம். மறுப்பை எழுதி 'தினசரி'க்கு அனுப்பி வைத்தேன். அந்த மறுப்பு 'தினசரி'யில் வெளிவரவில்லை. வராததற்குக் காரணம் எங்களுக்குள் இலக்கியச் சண்டை மூண்டுவிட்டால் எப்போது முடியும் என்ற கவலை 'தினசரி' ஆசிரியருக்கே ஏற்பட்டு விட்டதுதான். எனவே மறுப்பு மட்டும் புதுமைப்பித்தனிடம் போய்ச் சேர்ந்தது. இதற்குப் பிறகு நான் சென்னைக்கு வந்து 'தினமணி'யில் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். புதுமைப்பித்தன் அங்கு வருவார். வந்த இடத்தில் எனக்கும் அவருக்கும் பரிசயம் ஏற் பட்டது. என்னை இன்னுனென்று தெரியாமலே என் 'பிரிவுப சார'த்தைப்பற்றி அவர் புகழ்ந்தார்; அந்தமறுப்பைப் பற்றியும் கூறினார். ஆசாமி நான்தான் என்று தெரிந்ததும், அவர் ''நீதானா அது! அப்போ நீ நம்ம ஆளு. உன்னைத்தான் இத்தனை நாளாய்த் தேடிக் கொண்டிருந்தேன்'' என்று ஒரே குஷாலாகப் பேச ஆரம்பித்து விட்டார்.

இந்தச் சம்பவத்தைக் கூறியதற்குக் காரணம் உண்டு, புதுமைப்பித்தன் யாரிடமாவது ஓரளவு திறமை யிருக் கிறது என்று கண்டால், அந்த நபரோடு— அந்த நபர்

தம்மை எதிர்த்து எழுதியிருந்தாலும்கூட நட்புக் கொள்ள விரும்புவார். இதுபோலவே நண்பர் அழகிரிசாமியைப் புதுமைப்பித்தனுக்கு நான் அறிமுகப்படுத்தி வைத்த சில நாட்களில், அழகிரிசாமியின் 'வெந்தழலால் வேகாது' என்ற கதையைப் பற்றிப் புதுமைப்பித்தனிடம் சொன்னேன். கதை அவருக்குப் பிடித்துப் போய்விட்டது. 'கதையைக் கொண்டா' என்று கட்டளையிட்டார். மறுநாள் அழகிரிசாமியும் நானும் அந்தக் கதையுமாக அவர் வீட்டுக்குப் போனோம். கதையைக் படித்து மகிழ்ந்த புதுமைப்பித்தன் தாமே அந்தக் கதையை 'கலைமகள்' பத்திரிகைக்குக் கொண்டு சென்று வெளியிடச் செய்தார்.

இதுபோலவே எனது 'வென்றிலன் என்ற போதும்' என்ற கதையைத் தமது பத்திரிகையில் வெளியிட விரும்பி ஒரு பத்திரிகாசிரிய நண்பர் என்னிடம் —அதாவது புதுமைப் பித்தன் வீட்டில் நானும் புதுமைப்பித்தனும் அந்தக் கதை யுடன் இருக்கும்போது— வந்துசேர்ந்தார். கதை நல்ல கதை; கொஞ்சம் நீளமான கதை. ஒரே இதழில் வெளியிட்டால் பதினறு பக்கங்களுக்குக் குறையாமல் வரும். எனவே பத்திரி காசிரியர் அந்தக் கதையை இரண்டு இதழ்களில் வெளியிடுவ தாகச் சொன்ஞர். ஒரேஇதழில் வெளியிடா விட்டால் கதையின் ஒருமையும் சுவாராசியமும் கெட்டுப்போகும் என்பது எங்கள் கட்சி. ஆனல் அந்த ஆசிரியரோ ஒரு பெண் எழுத்தாளரின் கதை அந்த இதழில் வரவேண்டியிருப்பதால் ஒரே இதழில் போட இடமில்லை என்ருர். அந்தப் பெண் எழுத்தாளரோ எல்லாப் பெண் எழுத்தாளர்களையும் போலவே சாதாரணமான இரண்டாம் தரக் கதைகளை எழுதுபவர். புதுமைப்பித்தனுக்கு ஒரே ஆத்திரம். ''நல்ல கதை வேண்டுமென்ருல் ஒரே இதழில் போடு. இல்லாவிட்டால், அந்த அம்மாளின் கதையைப் போட்டு, மீதிப் பக்கத்திலே பெருக்கல் வாய்ப்பாடு அச்சடித்து விடு. எல்லாம் ஒன்றுதான்!'' என்று சீறிவிட்டார். வந்தவருக்கு முகம் சுண்டிவிட்டது. எழுந்து போய் விட்டார்.

இந்தச் சம்பவங்களினல் எல்லாம் புதுமைப்பித்தன் திறமை இருப்பவர்களை ஆதரிக்க வேண்டும், கை தூக்கி

விடவேண்டும் என்று விரும்புபவர் என்பது புலனுகிறது. இதைக் கூறவேதான் இந்த சந்தர்ப்பங்களைக் கூறினேன்.

இப்படியெல்லாம் பல அரிய குணங்கள் வாய்த்திருந்த புதுமைப்பித்தனிடம் சில விபரீத குணங்களும் இருந்தன. புதுமைப்பித்தன் தாம் எழுதும் எழுத்துக்களில் எவ்வளவு விசுவாசமும் நேர்மையும் கொண்டிருந்தாரோ, அந்த நேர்மை சமயங்களில் அவரது பேச்சில் இருக்காது. ஒரு எழுத்தாளரை அவர் முகத்துக்கு நேராகவே சமயங்களில் புகழ்வார். அவரது முதுகு மறைந்தபின் 'ஆசாமி தலை சுத்திக்கிட்டுப் போருன். அவன் கதையை அவன்தான் மெச்சிக்கிடணும்' என்பார். 'பின் ஏன் அப்படிச் சொன்னீர்கள்?' என்று கேட்டால், 'சொல்லி வைத்தால் கிடக்கு. அவனைக் காலைவாரி விடுவதற்கு இதுதான் வழி' என்பார். ஆனால், இந்த மாதிரிப் பேசுவதோ அல்லது புகழ்வதோ, எந்தவிதக் கள்ளத்துடனே அல்லது அவர் கூறுவதைப்போல் காலைவாரி விடவேண்டும் என்ற எண்ணத்துடனே கூறும் பேச்சல்ல. அந்தச் சமயத்தில் அவரது வாய் சொல்வதற்கு அவர் பொறுப்பாளியாக மாட்டார். அவரது வாயில் அடக்கம் என்பதே கிடையாது.

புதுமைப்பித்தன் டிராமிலோ பஸ்ஸிலோ பிரயாணம் செய்தால், டிராம், டிக்கட்டுகளைக் கசக்காமல் வைத்திருந்து வீடு கொண்டுவந்து சேர்த்து, குப்பைத் தொட்டியில் போடுவார். 'ஏன்' இப்படிச் செய்கிறீர்கள்?' என்று கேட்டால், 'தூரப் போடுவானேன்?' என்பார். கடைசியில் ஒருநாள் அத்தனையையும் தூரப் போடத்தான் செய்வார். இந்த விசித்திர குணத்தில் எவ்வளவு அர்த்தம் உண்டோ அவ்வளவு அர்த்தம்தான் அவரது ஏறுக்குமாருகப் பேசும் சில பேச்சுக்களிலும் உண்டு. இந்த ஏறுமாருன விசித்திர குணத்தால் புதுமைப்பித்தன் அநாவசியமாகப் பொய் சொல்லுவார். ஆனால், அந்தப் பொய்கள் எந்தவித லாபத்தையோ பயனையோ கருதிச் சொல்லப் படுபவை அல்ல; வேடிக்கைக்குத்தான் சொல்கிருர் எனச் சமாதானம் கொள்ளவேண்டும்.

அவர் சொல்லும் பொய்களுக்கு இரு உதாரணங்கள்:

புதுமைப்பித்தனின் மனைவி ஊருக்குச் சென்றிருந்தாள். ஒருநாள் திரும்பியும் வந்து விட்டாள். புதுமைப்பித்தனின் மனைவி ஊரிலிருந்து வந்த மறுநாள் ஒரு நண்பர் ''என்ன ஸார், Familyயைக் கூட்டி வரவில்லையா?'' என்று கேட்டார். ''இல்லே, கூட்டி வரணும்'' என்று கூறினார் புதுமைப்பித்தன். பிறகு ,அந்த நண்பரும் புதுமைப்பித்தனும் பேச்சு வாக்கில் புதுமைப்பித்தனது வீட்டுவரை வந்து விட்டார்கள். வந்த நண்பர் திடுக்கிட்டுப்போனார். வாசலில் கமலாம்பாள் நின்று கொண்டிருந்தாள். ''என்ன ஸார், பொய்தானே சொன்னேள்?'' என்று : வியந்தார் ''நண்பர். ''அப்படியா சொன்னேன்?'' என்று அடுத்துப் பொய் சொன்னார் புதுமைப் பித்தன்!

இதுபோலவே புதுமைப்பித்தனும் அவரது நண்பர் ஒருவரும் எங்கெங்கோ அலைந்துவிட்டு, திருவல்லிக்கேணி ஜோதி நிலையக் கட்டிடத்துக்குள் நுழைந்தார்கள். ஜோதி நிலையம் அ. கி. ஜயராமன் அவர்கள் இருவரும் வேர்த்து விதிர் விதிர்த்து வந்திருந்த கோலத்தைப் பார்த்து, என்னவென்று கேட்டார்.

''உனக்கு விஷயம் தெரியாதா?....(இன்னார்) செத்துப் போயிட்டார். காட்டுக்குப் போய்விட்டு வருகிறோம்'' என்று ஒரு பிரபல எழுத்தாளரின் பெயரைக் குறிப்பிட்டுக்கூறி, நம்பும் படியாகக் கதைவிட ஆரம்பித்து விட்டார் புதுமைப்பித்தன்.

பிறகுதான் அது வெறும் பொய் என்று தெரியவந்தது.

மேற்கூறிய சம்பவங்களிலிருந்து புதுமைப்பித்தன் சொல்லும் பொய்கள் எந்தவிதப் பிரதி பலனையும் எதிர்பாராத பொய்கள் என்பதை லகுவில் அறிய முடியும். ஆனால் அவர் ஏன் இந்த மாதிரி பொய் சொன்னார் என்று சிலர் அதிசயிக்கலாம். அதுதான் அவரது விசித்திரம்.

புதுமைப்பித்தன் தமது நெருங்கிய நண்பர்களோடு மிகுந்த உரிமையோடு பழகுவார். தம்மைத் தேடி ஒரு நண்பர் வந்துவிட்டால், இலை மூன்றால் உட்கார்ந்திருந்தால்

கூட எழுந்து வந்து உட்கார்ந்து பேச ஆரம்பித்து விடுவார். உரிமையோடு பழகும் நண்பர்களிடம் அவர் கோபப்படுவதும் உண்டு; பின்னர் கோபம் தணிந்து தாமாகவே வந்து குலாவுவதும் உண்டு. ஒரு தடவை அவர் ஒரு நண்பரிடம் பண உதவி கேட்டார். நண்பருக்கு அப்போது பண உதவி செய்யக்கூடிய வசதி இல்லை. அதைத் தெரிந்து கொண்டதும் புதுமைப் பித்தன் ஆத்திரத்தில், ''........நீ அயோக்கியன். வேண்டியவனுக்குக் கொடுக்கமாட்டாய். கேட்டவனுக்குக் கொடுக்க மாட்டாய்........'' என்று தாறுமாருக வாய்க்கு வந்தபடித் திட்டித் தள்ளி விட்டார். ஆனல் அதே நண்பர் இவரது கோபத்தைத் தாங்க முடியாது மறுநாள் அவருக்கு எங்கோ கொஞ்சம் பணம் பார்த்துக்கொண்டு, அவரது வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். அப்போது புதுமைப்பித்தன் அந்த நண்பரைக் கண்டதுமே, ''என்னை மன்னித்து விடு. உன்னை ரொம்பவும் ஏசிவிட்டேன். என்னை மன்னிப்பாயா?....'' என்று தழுதழுத்துக் கேட்க ஆரம்பித்து விட்டார்.

புதுமைப்பித்தன் கையில் பணமிருந்தால் தாராளமாய்ச் செலவு செய்வார். புத்தகம் வாங்குவதில் அவர் ஒரு கிறுக்கு. சம்பளம் வாங்குகிற தேதியில் புத்தகக் கடைக்குப் போகாமல் வீட்டுக்கு வரமாட்டார். தமக்குப் பிடித்த புத்தகம் என்ன விலையாயிருந்தாலும், மறுநாள் சாப்பாட்டுக்குத் தம்மிடம் வழியில்லை என்ருலும்கூட, கையிலுள்ள பணத்துக்குப் புத்தகம் வாங்கியே விடுவார். வாங்கி வந்த புத்தகத்தை ஒரே மூச்சில் படித்து முடிப்பதும் உண்டு; சமயங்களில் அப்படியே பீரோவுக்குள் தூக்கி வைத்துவிட்டு, 'படித்துக் கொள்ளலாம்' என்ற எண்ணத்தில் அதைப் படிக்கவே மறந்து போவதும் உண்டு. எழுத்தாளராதலால் இந்தப் புத்தகக் கிறுக்கு அப்படியொன்றும் விசித்திர குணமென்று சொல்ல முடியாது. ஆனல், புத்தகத்துக்காக மட்டும் அவர் இப்படிச் செலவழிக்க மாட்டார். செலவழிப்பது எப்படி என்று தெரியாமலே செலவழிப்பார். ஒரு தடவை கையில் பணம் நிறைய இருந்தபோது, ஒரு குரோஸ் கில்லெட் பிளேடுகளை வாங்கிக் கொண்டுவந்து விட்டார். அந்த ஒரு

குரோஸ் பிளேடையும் எதற்காக வாங்கினார், வியாபாரம் பண்ணப்போகிறாரா என்று அதிசயிக்கத் தோன்றும். அவர் வாங்கியதற்குரிய ஒரே காரணம் அவர் கையில் பணம் இருந்து விட்டதுதான். இதுபோலவே ஏதாவது அழகான சாமான் கண்ணில் தென்பட்டு, கையில் பணமும் இருந்துவிட்டால், பிடித்தது சனி. பணம் காலி. ஒரு முறை இப்படித்தான் வருகிற சம்பளம் வீட்டுச் செலவுக்கே பற்றாதிருந்தபோது, ஒரு டாய்லட் கேஸ் ரொம்ப அழகாயிருந்தது என்பதற்காக, பத்துப் பதினைந்து ரூபாய் விலை கொடுத்து வாங்கி வந்து விட்டார். அப்புறம் அது விஷயமாகக் கணவன் மனைவி யிடையே தகராறு. இந்த மாதிரிக் காரணங்களால் அவரது குடும்ப நிர்வாகம் குழப்பமடைவதும் உண்டு. பாக்கிக்காக வருபவனிடம் 'ஐயாவைக் கேள்' என்பாள் மனைவி. 'அம்மாவைக் கேள்' என்பார் கணவர். இந்தமாதிரிச் சங்கடங் களால், புதுமைப்பித்தன் தமது 'தினசரி' சேவையின்போது சம்பளத்தை முதலில் கமலாம்பாளிடம் ஒப்படைத்து விட்டுத் தான் தம் செலவுக்கு வாங்கிக் கொண்டார். அது முதற் கொண்டு இந்தத் தகராறு இல்லாமலிருந்து. பின்னர் அது வழக்கம் போலவே மாறி விட்டதுமுண்டு.

இம்மாதிரியான காரணங்கள் ஒருபுறமிருக்க, புதுமைப் பித்தனுக்கு நிரந்தரமான பணவசதியும் இருந்தனெச் சொல்ல முடியாது. ஆனால் பணம் இருந்தாலும் சரி, இல்லா விட்டாலும் சரி — அவர் ஒரே உற்சாகத்தோடுதான் பேசுவார். அடுத்த வேளைச் சாப்பாடு எங்கேயென்று தெரியாத நிலைமையிலும் அவர் சிரிக்கச் சிரிக்கத்தான் பேசுவார். ஒருமுறை நானும் அவருமே அந்த நிலையில் இருந்தோம். அந்தச் சமயத்தில் நான் மனம் சோர்ந்து போனால் அவர் சொல்வார்:

''ராசா, இதற்கெல்லாம் வருத்தப்படக் கூடாது. இப்படி வெங்கம்பட்டிகளாக இருந்தால்தான் எதைப் பற்றியும் எவனைப் பற்றியும் தயை தாக்ஷண்யமில்லாமல் எழுதலாம். சொத்து, சுகம் என்று வந்துவிட்டால் போலிக் கௌரவமும் வந்து விடும். அதற்குப் பிறகு

நேர்மையான இலக்கிய சேவை செய்ய முடியாது. இப்போது எவனைத் தாக்கினாலும் கவலையில்லை. வழக்குப் போட்டால் கூட முந்தி வேட்டியை முன்னால் விரித்துவிட்டு மல்லாந்து விடலாம்!’’

இவை யெல்லாம் சமய சந்தர்ப்பத்துக்காக எழுந்த ஆறுதல் வார்த்தைகள். வறுமைப்பட்டால்தான் எழுத்தாளனிடம் ஜீவ சிருஷ்டி பிறக்கும் என்று அசட்டுத்தனமாக நம்பும் அழுகுணிச் சித்தன் அல்ல, அவர். சுகம் பெறக்கூடிய வாழ்க்கையை ஏன் உதறியடிக்க வேண்டும் என்று தத்துவம் பேசுவார் புதுமைப்பித்தன்.

ஆனால் அந்த தத்துவம் அவருக்கு உதவவில்லை. எழுத்தாளர்களின் தீபஸ்தம்பமாக விளங்கிய புதுமைப்பித்தன், நண்பர்களுடன் அருமையோடு பழகிய ‘சோவி’ (சொ. வி.) வாழ்க்கை முழுவதுமே சுகப்பட்டு வாழவில்லை.

## சங்கீத ஞானம்!

"புதுமைப்பித்தனைச் சிறுகதை ஆசிரியராகவும், கவி பாடும் கவிராயராகவும்தானே கண்டிருக்கிறோம். அவருக்குச் சங்கீத ஞானமும் உண்டா? பாட்டுப் பாடும் கவிராயருக்குச் சங்கீத ஞானமும் இருக்கத்தானே வேண்டும்?" என்று சிலர் கேட்கலாம்.

அவரது சங்கீத ஞானத்தைப் பற்றிக் கூறுவதைவிட, ஒரு ரசமான சம்பவத்தைக் கூறலாம்;

புதுமைப்பித்தனுக்கு கணேச சர்மா என்று ஒரு நண்பர் உண்டு. அவருக்குச் சங்கீதத்தில் மிகுந்த ஈடுபாடு. நல்ல ஞானம். மேலும் சங்கீத வித்வான்கள் பலருடனும் அவருக்குத் தொடர்பும் பழக்கமும் உண்டு. சங்கீதக்காரர்களே பொதுவாக ஹாஸ்யமாகப் பேசுபவர்கள். கணேச சர்மாவுக்குப் புதுமைப்பித்தனோடு அரட்டையடிப்பதில் குஷி.

ஒரு தடவை திருவீழிமிழலை சகோதரர்களான நாதசுர வித்வான்கள் சென்னைக்கு வந்திருந்தார்கள். கணேச சர்மா அந்த நாதசுர வித்வான்களுக்கு மிகவும் வேண்டிய நண்பர். எனவே தாராளமாய் எதையும் பேசுவார். அவர் அந்த வித்வத் சிரோமணிகளைப் பார்த்து, "உங்கள் வாசிப்பை யாராரோ கேட்டு ரசிக்கிறார்கள். வெறுமனே தலையை ஆட்டினால் போதுமா? இங்கு ஒரு பெரிய ஞானஸ்தர் இருக்கிறார். என் நண்பர், அவர் சபாஷ் போட்டு விட்

டால் அப்புறம் உங்களுக்கு வேறு பட்டயமே தேவையில்லை'' என்று கூறினர்.

அவர்களும் அதிசயத்து, ''அப்படியா? அவரைப் பார்க்க வேண்டுமே'' என்றார்கள்.

கணேச சர்மா அவர்களைப் புதுமைப்பித்தன் குடியிருந்த இடத்துக்கு அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தார்.

''என்ன சோவி, திருவீழிமிழலை பிரதர்ஸ் உங்களிடம் வாசித்துக் காட்டவேண்டும்; நாதசுரம்'' என்று பணிவோடு சொன்னார் சர்மா.

''என்னது, நாதசுரமா?'' என்றார் புதுமைப்பித்தன்: ''சரி. வாசிக்கட்டும்.''

வித்வான்கள் வாசிக்க ஆரம்பித்தார்கள். புதுமைப்பித்தன் வெற்றிலைச் செல்லத்தை முன்னே இழுத்துவைத்துக் கொண்டு வெற்றிலை போட்டார். ஏதோ ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்துத் திருப்ப ஆரம்பித்தார். வித்வான்கள் இருவரும் வெகு நேரம் ராக ஆலாபனைகள் எல்லாம் பண்ணி முத்தாய்ச் சொரிந்து தள்ளினார்கள். ஆனல் புதுமைப்பித்தனின் முகத்தில் எந்த மாறுதலையும் காணோம். 'கம்'மென்றிருந்து படிக்க ஆரம்பித்து விட்டார்.

இதற்குள் அறைக்கு வெளியே இருந்த சர்மா கடகட வென்று சிரித்தார். உள்ளே வந்தார், ''இவ்வளவுதானு உங்கள் சங்கீதம்? இவரை மயக்க முடியவில்லையே!'' என்று வித்வான்களைக் கேலி செய்தார் சர்மா. புதுமைப்பித்தனுக்குப் பிறகுதான் உண்மை தெரிந்தது. எல்லாம் சர்மாவின் கலாட்டா.

உண்மை என்ன தெரியுமா? புதுமைப்பித்தனுக்குச் சங்கீதத்தில் அட்சரம் கூடத் தெரியாது. அந்த ஞானமும் வராது. சங்கீத விஷயத்தில் அவர் ஒரு ஔரங்கசீப். எனவேதான் அந்த வித்வத் சிரோமணிகளின் சங்கீதம் புதுமைப்பித்தனைக் கொஞ்சம்கூட அசைக்கவில்லை.

இதன் பிறகு அந்த நாதசுர சகோதரர்களும் புதுமைப் பித்தனும் நெருங்கிய நண்பர்களாகி விட்டார்கள். அவர்

கள் சென்னைக்கு வந்தால் புதுமைப்பித்தன் தமது சோம்பலை யெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட்டு அவர்களைப் போய்ப் பார்ப்பார்; ஆனால், கச்சேரிக்கு மட்டும் போக மாட்டார்! அது மட்டுமல்ல; அவர்கள் இருவரோடு நேர்ந்த நட்பின் அறிகுறி யாக, புதுமைப்பித்தன் அவர்களிடம் ஒரு வெகுமதி கேட் டார். என்ன தெரியுமா? ஒரு நாதசுரம்!

விடாப்பிடியாக நின்று அவர்களிடமிருந்து புத்தம் புதிதான ஒரு நாதசுரத்தை வாங்கிப் பத்திரமாக வைத்திருந் தார் புதுமைப்பித்தன். ஒருமுறை அவர் என்னிடம் அதைக் காட்டினார்.

''இது எதற்கு?'' என்றேன்.

''வருகிறவனைப் பயமுறுத்துவதற்கு; விரட்டுவதற்கு!'' என்றார் புதுமைப்பித்தன். பிறகு, ''என்ன ராசா, ராசரத் தினம் பிள்ளை பத்திரிகைக்குக் கட்டுரை எழுதும்போது, நான் மட்டும் ஏன் நாதசுரம் வாசிக்கக்கூடாது?'' என்று ஒரு கேள்வியைப் போட்டு விட்டார்!

புதுமைப்பித்தன் தாம் சொல்லியபடியே நாதசுரத்தை வைத்துக்கொண்டு சிலரைப் பயமுறுத்தியதும் உண்டு. வந்த ஆசாமி எழுந்து போகவில்லையானால், ''கொஞ்சம் நாதசுரம் கேக்கியளா?'' என்று கூறிக்கொண்டே நாதசுரத்தை எடுத்து வந்து விடுவார். வந்தவர் திகைப்பார். ''இல்லே. நான் குளிக்கப் போகணும். நீங்க இருக்கிறதுன்னா, நம்ப வாசிப்பைக் கேளுங்க'' என்பார். வந்த ஆசாமிக்கு மறுசொல் வேண்டுமா? எழுந்து போய் விடுவார்!

சங்கீதத்தை பற்றி எதுவும் தெரியாத, தெரிய விரும் பாத, புதுமைப்பித்தன் ஒரு தடவை சங்கீத விசாரமே பண்ண ஆரம்பித்து விட்டார். அழகிரிசாமி சங்கீத ஞானமுள்ள சிறந்த எழுத்தாளர். அவரிடம் போய் சங்கீதத்தைப் பற்றித் தர்க்கம் பண்ண ஆரம்பித்தார் புதுமைப்பித்தன்.

தர்க்கத்தில் தோற்றது புதுமைப்பித்தன் அல்ல; அழகிரிசாமிதான். ஏன் தெரியுமா? அவரது வாதத்தை

எதிர்க்கச் சக்தியற்ற புதுமைப்பித்தன், தம் தோல்வியை ஒப்புக்கொள்ளாமலே வேறு விஷயத்துக்குப் பேச்சைத் திருப்பி விட்டு விட்டார்.

புதுமைப்பித்தனின் 'பக்த குசேலா' ஞாபகம் இருக்கிறதா?

"'....நாதஸ்வரக்காரன் கேதார கௌளை ராகத்தை எடுத்து ஆலாபனை செய்கிறான்; அதே சமயத்தில் பாண்டு வாத்தியம் 'ரூல் பிரிட்டானியா!' என்ற மெட்டை வெளுத்து வாங்குகிறது" என்று கோயில் ஊர்வலக் காட்சியை வருணித்திருக்கிறார் புதுமைப்பித்தன்!

'கதையிலே ராகத்தின் பெயர்கூடப் போட்டிருக்கிறாரே' என்று நீங்கள் வியக்கிறீர்களா? ஆமாம், கதை தானே, அது!

## பிரசங்கி

புதுமைப்பித்தனோடு பேசிக் கொண்டிருந்தால் பொழுது போவதே தெரியாது. ஆனால் சம்பாஷணையில் மிகுந்த வல்லவராக இருக்கும் புதுமைப்பித்தனை மேடையில் பேசவிட்டால் அது மேடைப் பிரசங்கமாகவே இருக்காது. வந்திருக்கிற மகா ஜனங்கள் அத்தனை பேரும் தம் வீட்டில் தாழம்பாயில் உட்கார்ந்து வெற்றிலை போட வந்திருக்கும் நண்பர் கூட்டமாகவே அவரது கண்ணில் படும். அதாவது மேடைமீது ஏறி நின்று பேசினாலும், அவர் எதிரே இருப்பவர்களிடம் சம்பாஷிக்கும் தோரணையில்தான் பேசுவார்.

1943-ம் வருஷம் திருநெல்வேலிக்கு வந்திருந்த புதுமைப்பித்தனை நெல்லை இந்துக் கல்லூரி மாணவர்கள் கல்லூரி மேடையில் பேச அழைத்திருந்தனர். கூட்டத்துக்கு அ. சீனிவாச ராகவன் தலைவர். தலைவர் அறிமுகத்துக்குப் பின் புதுமைப்பித்தன் எழுந்திருந்தார். பலத்த கரகோஷம். அந்தக் கை தட்டலைக் கண்டு அவர் நெகிழவும் இல்லை; அதைப் பொருட்படுத்தவும் இல்லை. அதை ஒரு விளையாட்டாகக் கருதிக் கட கடவென்று சிரித்தார்.

பிறகு பேச ஆரம்பித்தார்.

'தலைவர்களே, நண்பர்களே'—இந்த மாதிரி எந்த ஆரம்பமும் இல்லை. அவையடக்கமும் இல்லை. எடுத்த எடுப்பில் இப்படித்தான் பேசினார்: "இதோ இருக்கிறாரே,

தலைவர்—உங்க வாத்தியார்—இவர், நான், கி. ரா., எல்லோரும் சென்னை மூக்கர் நல்ல முத்துத் தெருவிலே....'' என்று ஆரம்பித்தார். பிறகு அங்கு அவர்கள் வெற்றிலை போட்டு வெளியே எச்சில் துப்பியது, இலக்கிய சர்ச்சை பண்ணியது என்று சம்பந்தா சம்பந்தமற்றுப் பேசிக் கொண்டிருந்தார்.

'மூக்கர் நல்லமுத்துத் தெருவிலே....' என்று ஆரம்பித்த புதுமைப்பித்தன் அப்புறம் வந்திருந்தவர்களோடு சம்பாஷிக்கவே ஆரம்பித்து விட்டார். வந்திருந்தவர்கள் குறுக்கிட்டுப் பேசாததால் அவரது பேச்சும் 'பிரசங்கம்' என்ற அந்தஸ்தைத் தானே பெற்றுக் கொண்டது.

மேடைமீது நின்ற புதுமைப்பித்தன் பேசிக் கொண்டே, குஸ்திக்குக் கிளம்பப் போவது மாதிரி ஜிப்பாக் கைகளைத் திரைத்துச் சுருட்டிக் கொண்டார். தலைமயிரைக் கோதி விட்டுக் கொண்டார்; 'ஸைட் பாக்கெட்'டுக்குள் இருந்த கட்டம்போட்ட வெள்ளைக் கைக்குட்டையை எடுத்து உதறினர்; உருவினர்; 'பட்டணம் சோமாறி' மோஸ்தரில் அதைக் கழுத்தில் கட்டி ஒரு 'கிறிக்கி' முடிச்சுப் போட்டுக் கொண்டார்; மேஜை விளிம்பின்மீது ஏறி உட்கார்ந்தார்; குதித்து இறங்கினர்; சிரித்தார்.

இத்தனைக்கும் நடுவிலே அவர் தாம் பேச ஒப்புக்கொண்ட பொருளான ''புதுமைப்பித்தன் கதைகள்'' என்பதைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்.

''என்னமோ அதை எழுதக்கூடாது, இதை எழுதக்கூடாது— அப்படீன்னு பாத்தி கட்டிப் பூச்சி புடுக்கிருகளே. அவுஹ ளுக்கு நம்ம கதை பிடிக்காது. நான்தான் கேக்கிறேன். ஏன்யா? எதை எழுதின என்ன? அதுக்குக்கூட எனக்குச் சுதந்திரம் கிடையாதா? பெரியவுஹ சொல்ருஹங்கிறத்துக் காக உண்மையை மறைக்க முடியுமா? கருவைத் தடை செய்யலாம்; கருத்தைத் தடை செய்ய முடியுமா?''

புதுமைப்பித்தன் இப்படிக் கூறிவிட்டு ஒருகணம் நின்ருர்; பிறகு தொடர்ந்தார்!

''முடியாது. ஆனா, அதுக்காக நான் மட்டும் எதை வேணுமானாலும் சொல்லலாமா? அது கூடாது. பொறுப்பில்லாமல் பிள்ளையைப் பெறலாம்; பொறுப்பில்லாமல் கருத்துக்களைப் பெறக்கூடாது!''

பிறகு மௌனம்.

''எனக்குப் பொறுப்பு தெரியும். விருதாக் கதை எழுதுறவுஹ இருக்காஹளே. அவுஹ மாதிரி எழுதத்தான் தெரியாது!''

அவர் மேலும் பேசினார்:

''நீங்கதான் இப்போ என் கதைகளைப் படிக்கிறீர்களே. எப்படி இருக்கு? கொஞ்சம் சொல்லுங்களேன். காதல் கதையாம், காதல் கதை! முத்துச் சுடர் போலே நிலா முன்னே வரணும்னு பாரதி பாடி வச்சான் பாருங்க. அது இந்தக் கதாசிரியர்களுக்குத்தான். நம்ம கதாசிரியர்களுக்கு நிலாவும் தென்றலும் இல்லாவிட்டால் கதையே வராது. கிடையாது.

''ஆனால் என் கதையிலே காதல் என்ற சொப்பனவஸ்தை கிடையாது. என் அம்மாளு புருஷனுக்குக் கஞ்சிக் காச்சி ஊத்தறதுக்காக, கற்பை விலை பேசுவாள்; 'தொழில்' செய்து வாழும் விபசாரிகூட மானமாகப் பிழைப்பாள்; பிச்சை ஏற்க மாட்டாள். என் கதையிலே நிலவும் கிடையாது; தென்றலும் கிடையாது. என் செண்பகராமன்பிள்ளை இருட்டிலே போனார்; இருட்டிலே வந்தார்....''

கோவையற்று சம்பாஷணைப் போக்கிலே பேசினாலும்கூட மணிமணியான கருத்துக்களை உதிர்த்து விடுவார் புதுமைப் பித்தன்.

சென்னை திருவல்லிக்கேணி பெரிய தெருவில் ஒரு பள்ளிக்கூடத்தில் புதுமைப்பித்தன் 'அரசியல்' என்பது பற்றி ஒரு முறை பேசினார். அந்தக் கூட்டத்துக்கு 'கலைமகள்' கி. வா. ஜகந்நாதன் தலைவர். கூட்டமே இல்லை. விரல்விட்டு எண்ணிவிடக்கூடிய ஒரு சிலர்தான். புதுமைப் பித்தன் அங்கும் அப்படித்தான் பேசினார்; சம்பா

ஷித்தார். இடையிலே அவருக்கு ஏதோ ஒரு பெயர் மறந்து போய்விட்டது. எதிரே நானிருந்தேன். யோசித்துப் பார்த்தார். பிறகு என்னிடம் திரும்பி, ''என்ன ராசா, நீதான் சொல்லேன்'' என்று கேட்டார். எனக்கு அவர் எதைக் கேட்கிருர் என்பது எப்படித் தெரியும்? வாயைத் திறவாமல் இருந்தேன். பிறகு, அவரே சொன்ஞர்; ''விடுங்கள் அதை. இந்தப் பேர் எழவு ஒரு பேரெழவுதான்!'' என்று ஒரு ஹாஸ்யத்தை, எரிச்சலில் பிறந்த ஹாஸ்யத்தைச் சொல்லி நிலைமையைச் சமாளித்துக் கொண்டுவிட்டார்.

புதுமைப்பித்தன் தமது இளமைக் காலத்தில் திருநெல்வேலியில் இருந்தபோது யாரோ தம்மைப் பேசச் சொன்ஞர்கள் என்பதற்காகச் சரியென்று தலையாட்டி விட்டார். பாளையங்கோட்டை நூற்ருண்டு மண்டபத்தில் கூட்டம். பெரிய மண்டபம். சுமார் ஆயிரம் பேர் இருக்கலாம். அங்கு கூடியிருந்த சிறு கூட்டத்தில் புதுமைப்பித்தன் பேசிஞர்.

'காணுமல்போன பாக்குவெட்டி!' என்பது பிரசங்கத் தலைப்பு.

''விறகு தறிக்கக் கறி நறுக்க....'' என்று ஆரம்பமாகும் பழந்தமிழ் தனிப்பாடல்தான் அவர் எடுத்துக் கொண்ட பொருள்.

ஆஞல், மேடையில் ஏறியவுடன் அவரால் பேசவே முடியவில்லை. ஏனெனில் அந்தப்பாட்டு அவருக்கு வாயில் வரவே இல்லை. மறந்து போய்விட்டது. மேடையருகே தமிழாசிரியர் கு. அருணுசலக் கவுண்டர் உட்கார்ந்திருந்தார். அவர் புதுமைப்பித்தனின் நண்பர். உடனே அவரைப் பார்த்து, ''வே, பாட்டும் மறந்து போச்சி! அர்த்தமும் மறந்து போச்சி! கொஞ்சம் சொல்லிக்குடும்'வே!'' என்று கேட்க ஆரம்பித்து விட்டார்.

இதுதான் புதுமைப்பித்தனின் பிரசங்கம்!

## சில ரசமான ஞாபகங்கள்

சென்னையில் ஒரு கவிஞருக்குப் பாராட்டுக் கூட்டம் நடந்தது. அந்தச் சமயத்தில் எந்தப் பாராட்டுக் கூட்டமானுலும் ஒரு வாழ்த்துப்பா எழுதிக்கொண்டு போய், அதன் மூலம் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்பவரான ஒரு எழுத்தாள இளைஞர், வழக்கம்போலவே ஒரு வாழ்த்தை அச்சிட்டு, பிரேம் போட்டுக்கொண்டு வந்திருந்தார். அந்தக் கூட்டத்தில் புதுமைப்பித்தனும் வேறு சில இலக்கிய நண்பர்களும் ஒரு மூலையில் இருந்தனர். அந்த இளைஞர் புதுமைப்பித்தனிடம் வந்தார்; தமது பாட்டைக் காட்டினுர்.

''ஓஹோ, 'வாழ்த்து மடலா'—ரொம்ப சரி!'' என்ருர் புதுமைப்பித்தன்.

அந்தப் பாட்டுக்கு அவர் அபிப்பிராயம் கூறுவார் என்று எதிர்பார்த்தார் அந்த இளைஞர். பதில் வராததால் வாய் விட்டே கேட்டு விட்டார்.

''பாட்டு எப்படி?''

அதற்குள் தலைவர் நிகழ்ச்சி நிரலை வாசித்து அந்த இளைஞரை அழைத்து விட்டார்.

''சரிதான் கூப்பிடுதாக. போய் மடல் ஏறு!'' என்று கூறினுர் புதுமைப்பித்தன். அதாவது அந்த இளைஞரை மேடைக்குப் போகச் சொன்னுர். ஆனுல் அவர் சொன்ன

தன் சிலேடை நயத்தை, ஹாஸ்யத்தை, சுற்றி யிருந்தவர்கள் ரசித்தார்கள்.

*　　　*　　　*

'கலைமகள்' பத்திரிகையில் புத்தக மதிப்புரைப் பகுதியை 'உரைகல்' என்ற தலைப்பில் வெளியிட்டு வந்தார்கள். அது பற்றிச் சில இலக்கிய கர்த்தாக்களுக்குள் ஏதோ பேச்செழுந்தது. முடிவில் உரைகல் என்ற சொல்லில் வரும் ரகரம் வல்லின 'ற'கரமா, இடையின 'ர'கரமா என்று ஒருவர் ஒரு சந்தேகத்தைக் கிளப்பினார். புதுமைப்பித்தன் சிறிதும் யோசிக்காமல் ''வல்லினம்தான்'' என்று கூறினார். உடனே சந்தேகத்தைக் கிளப்பிய அதே அன்பர் ''அது எப்படி? உராய்தல் என்பதிலிருந்துதானே உரைதல் வந்திருக்க வேண்டும்!'' என்று கூறினார். புதுமைப்பித்தன் உடனேயே தமது தவற்றை உணர்ந்து கொண்டார். ஆனால் தோல்வியை ஒப்புக் கொள்ளவில்லை.

''வாஸ்தவம்தான், ஆனால் கொஞ்சம் அழுத்தித் தேய்த்தால்?'' என்று ஒரு போடு போட்டார். 'ர'வை அழுத்திக் கூறினால் 'ற'தானே!

*　　　*　　　*

ஒரு பாராட்டுக் கூட்டத்துக்குச் சென்றுவிட்டு நானும் புதுமைப்பித்தனும் வெளியே வந்தோம். அந்தப் பாராட்டுக் கூட்டத்தின் 'பாட்டுடைத் தலைவ'ரான இலக்கிய கர்த்தாவைப் பற்றி, புதுமைப்பித்தனுக்கு மட்டமான அபிப்பிராயம். அந்தக் கூட்டத்தில் பெரிய பெரிய தலைவர்களும் பிரபலஸ்தர்களும் 'பாட்டுடைத் தலைவரை' எப்படியெல்லாமோ பாராட்டினார்கள். புதுமைப்பித்தனுக்கு ஏனடா வந்தோம் என்றிருந்தது.

கூட்டம் முடிந்து வெளியே வந்ததும், ''ராசா, நான் வரும்போது ரெண்டு பொம்பிளைகள் பேசிக்கிட்டாஹ. என்ன தெரியுமா?'' என்றார்.

''கதையா? இல்லை....''

''கேளப்பா. அது ஒரு பாட்டு'' என்று கூறிக்கொண்டு ஒரு வெண்பாவை, தாம் இயற்றிய வெண்பாவைக் கூறத் தொடங்கினர். முதல் இரண்டு அடிகளில் இன்னர் இன்னரை இலக்கிய கர்த்தா என்று பாராட்டிய விஷயம்தான் பாட்டின் கருத்து. அந்த அடிகளை ஒரு பெண் பிள்ளை சொன்னளாம்; உடனே அதைக் கேட்ட அடுத்த பெண் பின்வருமாறு பதில் சொன்னளாம்.

—'ஆமக்கா!

பப்படத்துக் காரி பார்வதியின் அத்தை மகள்
அப்படித்தான் சொன்னள் அன்னைக்கி'

என்று குறைப்பாட்டையும் கூறி முடித்தார் புதுமைப்பித்தன்.

''இலக்கணம் சரியில்லையே?'' என்றேன் நான்.

''பப்படம் விற்கிறவளுக்கு இலக்கணம் தெரியுமா?'' என்று சொல்லிவிட்டு, ''இவர்கள் சொல்கிற அபிப்பிராயத்துக்கும், ரோட்டில் போகிற எவளோ ஒரு பெண் சொல்கிற அபிப்பிராயத்துக்கும் எந்த வித்தியாசமும் கிடையாது. வா, போவோம்'' என்றுர் புதுமைப்பித்தன்.

* * *

ஒரு பொதுக்கூட்டத்துக்குச் சென்றுவிட்டு வெளியே வந்த சமயம் எங்களோடு ஒரு எழுத்தாளரும் வந்தார். எழுத்தாளர் என்ருல் 'கதை எழுதுவாரோ என்னவோ? ஆனல் எழுத்தாளர்களின் கற்பனைச் சுரங்கமான (!) மது, மாது இரண்டிலும் திளைத்த ஆசாமி அவர். அப்போது எங்களுக்குத் தெரிந்த ஒரு புத்தக வியாபாரி தம் மகளுடன் முன்னே போய்க் கொண்டிருந்தார். அதைக் கண்ட எழுத்தாளர் புதுமைப்பித்தனைப் பார்த்து, ''அதோ—அவருடன் போகிருளே, அவள் யார்? மகளா?'' என்று கேட்டார்.

புதுமைப்பித்தன் உடனே, ''பாவம், இதுவா? இது ரொம்பச் சின்னப் பொண்ணு. மகள் இல்லை; அவர் பேத்தி!'' என்ருர்.

பிறகு அவர் என்னிடம் திரும்பி "I saved that girl. (நான் அந்த பெண்ணைக் காப்பாற்றினேன்). மகள் என்று சொல்லியிருந்தால் பயல் அவள் பின்னலேயே போயிருப் பான்!" என்று ரகசியமாகச் சொன்னர்!

* * *

ஒரு நூலாசிரியர் மேலைநாட்டு இலக்கிய விமர்சன முறை யில் தமிழில் ஒரு புத்தகம் எழுதியிருந்தார். எனினும் அந்த நூலில் மேலை நாட்டு இலக்கிய விமர்சன நூல்களிலிருந்து அதிகமான மேற்கோள்களைத்தான் நிறைத்திருந்தார். மேலை நாட்டுக் கருத்துக்களை அவர் மனத்தில் வாங்கி உணர்ந்து எழுதியதாகத் தெரியவில்லை. ஆனால் அந்த நூலுக்கு ஒரு பாராட்டுரை எழுதியிருந்த நூலாசிரியரின் நண்பரொருவர் தேசிக விநாயகம் பிள்ளையின் பாட்டு ஒன்றை உதாரணமாகக் குறிப்பிட்டிருந்தார்:

பச்சைப் புல்லைத் தின்று வெள்ளைப்
    பால் தர நீ என்ன
பக்குவஞ் செய்வாய் அதனை
    பகருவையோ பசுவே!

எப்படிப் பசுமாடு பச்சைப் புல்லைத்தின்று அமுதமான பாலைத் தருகிறதோ, அது போலவே நூலாசிரியர் மேலை நாட்டு நூல்களை உண்டு மாந்தி நமக்கு அமுதம் தருகிறார் என்று பாராட்டியிருந்தார் அந்த நண்பர்.

புதுமைப்பித்தன் இதைப் பார்த்தார். "பச்சைப் புல்லா வது, பாலாவது? இது வைக்கோலையே தின்றுவிட்டு வைக் கோலாகவே கழிந்து தள்ளுகிற மாடு அல்லவா?" என்று கூறினர்!

* * *

ஸ்ரீ. ஆசார்யா 'சித்திர ராமாயணம்' எழுதுவதற்காகக் கம்பனுக்குப் பலபேர் எழுதியுள்ள உரைகளைத் தம் அருகே வைத்து ஏதோ பார்த்துக் கொண்டிருந்தார். தாம் சொல்ல வேண்டிய பாடலுக்குச் சரியான அர்த்தம் அந்த உரைகளில் எதிலும் அவருக்குப் புலப்படவில்லை.

இந்தச் சமயத்தில் புதுமைப்பித்தன் அங்கு வந்து சேர்ந்தார்.

பி. ஸ்ரீ. புதுமைப்பித்தனைப் பார்த்து, ''என்ன சோவி, இந்தப் பாட்டுக்கு என்ன பொருள்? இந்த உரையாசிரியர்கள் எவருமே தெளிவாகச் சொல்லவில்லையே'' என்றார்.

உடனே புதுமைப்பித்தன், ''ஆமாமா, எல்லாரும் கம்பனுக்கு உறைதானே போட்டிருக்கானுக!'' என்று அழுத்திக் கூறினார்.

* * *

புதுமைப்பித்தனுடன் நண்பர் முல்லை முத்தையாவும் நானும் காப்பி சாப்பிடச் சென்றோம். அதாவது, காலைக் காப்பி பலகாரம் சாப்பிடத்தான். ஆனால் புதுமைப்பித்தன் கடைக்குள் சென்றதும் முதலில் காப்பிக்கு ஆர்டர் கொடுத்தார். ''என்ன, ஏதாவது சாப்பிட வேண்டாமா?'' என்றோம். ''சாப்பிடத் தான். முதலில் காப்பி. அப்புறம் தோசை. அப்புறம் இன்னொரு காப்பி'' என்றார் புதுமைப்பித்தன்.

''இது என்ன வழக்கம்?'' என்றேன் நான்.

''உனக்குத் தெரியாது. இவன் கடைத் தோசையை இப்படி முன்பாரா பின்பாரா கொடுத்து உள்ளே தள்ளினால் தானப்பா திங்க முடியும். தெரிந்ததா?'' என்றார் புதுமைப்பித்தன்.

* * *

ஒரு நாள் புதுமைப்பித்தனும் சில நண்பர்களும் ஒரு ஹோட்டலுக்குச் சாப்பிடச் சென்றார்கள்.

''என்னப்பா, சூடாக என்ன இருக்கிறது?'' என்று சர்வரைக் கேட்டார் புதுமைப்பித்தன்.

''இட்லி.''

''சரி. கொண்டு வா.''

சௌர்வர் இட்லியைக் கொண்டு வந்து வைத்தான்; ஆவி வந்து கொண்டிருக்கும் சூடான சாம்பார் தட்டு நிறைய திரம்பியிருந்தது. புதுமைப்பித்தன் இட்லியைப் பிட்டார். அது ஆறிப் போன இட்லி. கொதிக்கிற சாம்பாரை அதன்மீது ஊற்றி அதற்குச் சூடேற்றும் வியாபார தந்திரத்தைக் கண்டு விட்டார் புதுமைப்பித்தன்.

உடனே சௌர்வரைக் கூப்பிட்டார்.

''என்னப்பா, ஆத்மா குளிர்ந்து விட்டதே!'' என்ருர்.

சௌர்வர் விழித்தான். ''இல்லே. சாம்பார்தான் சுடுகிறது. இட்லி செத்துப் போச்சே!'' என்று அதற்கு விளக்கம் கூறினுர் புதுமைப்பித்தன்.

* * *

ஒரு சினிமாக் கம்பெனி பிரம்மாண்டமான செலவில் ஒரு படம் தயாரித்தது. ஆனுல் படம் முடிந்த பாட்டைக் காணுேம். காரணம், அந்தப் படத்தில் புதிய புதிய அம்சங்களைப் புகுத்தவேண்டும் என்பதற்காக, அப்போதைக்கப் போது வெளிவரும் ஆங்கிலப் படங்களிலிருந்து பல அம்சங்களைக் காப்பியடித்து, தன் படத்தில் புகுத்திக் கொண்டிருந்தது அந்தக் கம்பெனி.

இதைப் பற்றிப் புதுமைப்பித்தன் குறிப்பிட்டுச் சொல்லும் போது பின்வருமாறு சொன்னுர். ''கண்ட படத்திலிருந்தும் காப்பியடித்துக் கொண்டிருக்கிருர்கள். கடைசியில் படம் வெளிவரும்போது எப்படி இருக்கும் தெரியுமா? குடுகுடுப்பைக்காரன் சட்டை மாதிரி இருக்கும்!'' என்ருர்.

அதாவது துண்டுத் துணிகளை ஒட்டவைத்துத் தைத்துக் கோமாளி மாதிரி குடுகுடுப்பைக்காரன் போட்டிருப்பானே அந்த மாதிரி என்பதைத்தான், அதாவது படம் கோமாளித் தனமான தோல்வியாகப் போகும் என்பதைத் தான், அவர் இப்படிக் குறிப்பிட்டார்.

* * *

பதிப்பாசிரியர் ஒருவர் புதிதாகச் சில நண்பர்களைப் பிடித்து ஒரு பிரசுராலயம் தொடங்கினர். அந்தக் கம்பெனி டைரக்டர்களின் பெயரோடு அச்சடித்த 'பிராஸ்பெக்டஸ்' வெளிவந்திருந்தது. அந்த டைரக்டர்களின் வரிசையில் அந்தக் கம்பெனிக்கு அதிகமான மூலதனம் போட்டவரின் பெயர் கடைசியில் இருந்தது, இதைக் கண்ட நண்பர் ஒருவர் ''நிறையப் பணம் போட்டவரின் பெயர் அடியிலே இருக்கிறதே, ஏன்?'' என்று கேட்டார்.

உடனே புதுமைப்பித்தன், ''மேலே இருக்கிற பேர் வழிகளையெல்லாம் தாங்கிக் கொண்டிருக்க வேண்டாமா? அதனல்தான் அவர் அடியில் இருக்கிறார்!'' என்றார்.

* * *

புதுமைப்பித்தன் தினமணியில் வேலை பார்த்துக் கொண்டிருந்த காலத்தில் அவருக்கு அச்சாக வேண்டிய புரூபுகள் பார்வைக்கு வரும். புரூபை எவ்வளவுதான் கவனமாகப் பார்த்துக் கொடுத்தாலும், சமயங்களில் கம்பாஸிட்டர்கள் பிழைகளைத் திருத்தாமல் விட்டு விடுவார்கள். இதைக் கண்டு எரிச்சலுற்ற புதுமைப்பித்தன் சமயங்களில் புரூபைப் பார்த்து முடித்துவிட்டு, கடைசியில் 'கடவுள் துணை!' என்று எழுதி விடுவார். கம்பாஸிட்டர் வந்து ''இதென்ன ஸார்? கடவுள் துணையைக் கம்போஸ் செய்யவா?'' என்று கேட்டால், ''இல்லையப்பா, நான் என்னல் ஆன மட்டும் பார்த்து விட்டேன். இனி மேலும் தவறு விழுந்தால், 'கடவுள்தான் எனக்குத் துணை. நீ அல்ல' என்பதற்குத் தான் அப்படிப் போட்டேன்'' என்பார் புதுமைப் பித்தன்.

* * *

புதுமைப்பித்தன் எப்போதும் நெடுநேரம் பேசிக் கொண்டிருப்பார். ஒரு தடவை அவரும் இன்னொரு நண்பரும் இரவில் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று அந்த நண்பர் ''நாம் பாட்டுக்குப் பேசிக் கொண்டிருந்தால்? மணி என்ன வே?'' என்று கேட்டார்.

''அதைப்பற்றி என்ன'வே கவலை? நான் காலம் கடந்த பெருமாள்!'' என்றார் புதுமைப்பித்தன்.

புதுமைப்பித்தன் 'காலம் கடந்த பெருமாள்' என்று தம்மைச் சொல்லிக் கொண்டாலும் அவரிடம் ஒரு கைக்கடிகாரம் இருந்தது. ஆனால் அவர் அதைக் கையில் கட்டமாட்டார். ஆபீசுக்குச் செல்லவேண்டிய நேரத்தைப் பார்ப்பதற்காக அந்தக் கடிகாரத்தை வைத்திருந்தார். ஆனால் அதில் ஒரு போதும் அவர் மணி பார்ப்பதில்லை!

* * *

பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்முவைப் பற்றி ஒரு புத்தகம் வெளிவர வேண்டும் என்று விரும்பினார் புதுமைப்பித்தன். ஒரு பதிப்பாசிரிய நண்பர் சரித்திரப் பரிசயமுள்ள ஒரு எழுத்தாளரைக் கொண்டு அதை எழுதச் செய்து வெளியிட்டார்.

புத்தகம் வெளிவந்த பிறகு, அந்தப் பதிப்பாசிரியர் ஒரு பிரதியைப் புதுமைப்பித்தனிடம் கொடுத்து, ''படித்துப் பார்த்து எப்படி இருக்கிறது என்று சொல்லும்'' என்றார்.

புதுமைப்பித்தன் புத்தகத்தைப் படித்துப் பார்த்து விட்டுச் சொன்னார்:

''வே! இது காயடிச்ச கட்டபொம்மு!''

புத்தகத்தில் வேகமில்லை என்பதையே அவர் இப்படிக் குறிப்பிட்டார்.

* * *

ஒரு கதாசிரியர் ஒரு உருவகக் கதை எழுதி அதை ஒரு பத்திரிகையில் வெளியிட்டிருந்தார்; பின்னர் அதே பத்திரிகையில் அதே உருவகக் கதையின் கருத்தையே ஆதாரமாக வைத்து இன்னொரு எழுத்தாளர் ஒரு பாட்டு எழுதி யிருந்தார். இதைப் பற்றிப் புதுமைப்பித்தனிடம் குறிப்பிட்டபோது அவர் சொன்னார்:

''புருஷன் தன் சோரநாயகியைத் தேடி இருட்டில் போனான்; அந்தப் புருஷனின் மனைவி தன் சோர நாயகனைத் தேடி இருட்டிலே போனாள். இருட்டில் இருவரும் ஒருவரை யொருவர் இனம் தெரியாமல், புருஷனைச் சோர நாயகனென்றும், மனைவியைச் சோரநாயகி என்றும், இருவருமே தப்பாகக் கருதி, ஒருவர் கையை ஒருவர் பிடித்தவாறு வெளிச்சத்துக்கு வந்தனர். பிறகு இரண்டு பேரும் ஒருவரை ஒருவர் பார்த்து விழித்தார்கள். இதைப் போலத்தான் இந்தக் கதாசிரியரும் கவிஞரும் இப்போது விழிக்கிறார்கள். இருவருமே காப்பி யடித்தவர்கள். இரண்டுக்குமே மூலம் வேறு. அதனால் அந்தக் கதா சிரியர் தம் கதையைக் காப்பியடித்து விட்டதாகக் கூறுவது தப்பு; கவிஞர் காப்பியடிக்கவில்லை என்று கூறுவதும் தப்பு! இது தான் விஷயம்!''

* * *

நவயுகப் பிரசுராலயத்தில் புதுமைப்பித்தனின் நூல் ஒன்று அச்சாகி, பாரங்கள் ஒருபுறத்தில் அடுக்கி வைக்கப் பட்டிருந்தன. அந்த அடுக்கின்மீது ஏறி உட்கார்ந்து கொண்டு சிகரெட் பிடித்தார் புதுமைப்பித்தன். ஞாபகமறதியாக சிக ரெட் கட்டையை அடுக்கின்மீதே போட்டு விட்டார். சிறிது நேரத்தில் புகை கிளம்பி, பாரங்கள் தீப் பிடித்து விட்டன. உடனே பக்கத்தில் இருந்தவர்கள் ஓடி வந்து தீயை அணைத்து விட்டனர். புதுமைப்பித்தன் மட்டும் சும்மா அசையாது இருந் தார்.

''அட, என்ன மனுஷனையா நீர்? உம்முடைய புத்தகம் எரியுது. சும்மா இருக்கிறீரே'' என்று சத்தமிட்டார் பக்கத்தி லிருந்த காரைக்குடி சா. கணேசன்.

''எரிகிற நெருப்பை ஏன் அணைக்க வேண்டும்? சாம்பல் குவியல் எத்தனையோ தத்துவங்களைத் தந்திருக்கும். அதெல் லாம் இப்போ நஷ்டமாய்ப் போச்சு'' என்று சாவதானமாகப் பதில் கூறினார் புதுமைப்பித்தன்.

* * *

[illegible]ய்மாலக்காரர்களைக் கண்டால் புதுமைப்பித்தனுக்குப் பிடிக்காது. ஒரு நண்பர் கம்யூனிஸத்தைப் பற்றி சரமாரியாகப் பேசுவார். அவரது உற்சாகத்தில் 'நான் ஒரு கம்யூனிஸ்ட்' என்றும் கூறி தமது கட்சியை எடுத்துரைப்பார். ஆனால் உண்மையில் கம்யூனிஸக் கொள்கையில் அவருக்குப் பற்றுதல் இருந்ததே ஒழிய, அவர் ஒரு கம்யூனிஸ்ட் அல்ல. புதுமைப் பித்தனிடம் வந்து இந்த நண்பர் ஒரு தடவை இதுமாதிரிப் பேசிவிட்டு, ''நானும் ஒரு கம்யூனிஸ்டுதான்!'' என்றார்.

புதுமைப்பித்தன் விடுவாரா? ''வே. நீர் உண்மையான கம்யூனிஸ்டாக இருந்தால் உம் நாமத்தையும் பூணூலையும் முதலில் களைந்து எறியும்!'' என்று ஒரு போடு போட்டார். நண்பர் வெலவெலத்துப் போய்விட்டார்.

பிறகு புதுமைப்பித்தன் ''வர்க்க பேதத்தை ஒழிக்க வேண்டும் என்கிறது கம்யூனிஸம். நீரோ வருண பேதத்தைக் கூட விடமாட்டீர் போலிருக்கிறதே!'' என்றார். வருண பேதம் என்ற சொல்லில் தொனித்த சிலேடை நயத்தைக் கண்டதும் அந்த நண்பருக்கே சிரிப்பு வந்து விட்டது.

* * *

ஒருமுறை நண்பர் அழகிரிசாமியும், புதுமைப்பித்தனும் நானும், தமிழாராய்ச்சித் தலைவர் எஸ். வையாபுரிப்பிள்ளை வீட்டுக்குப் புறப்பட்டுப் போனோம். போகிற வழியில் அழகிரி சாமி ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார். அந்தச் சமயத்தில் ஒரு தமிழ்ப் பத்திரிகையில் வையாபுரிப்பிள்ளை எழுதிய திரு வள்ளுவரைப் பற்றிய கால ஆராய்ச்சி வெளி வந்திருந்தது. அந்த ஆராய்ச்சியைப் படித்த அழகிரிசாமியின் தமிழ்ப்பண்டித நண்பர் ஒருவர், ''இந்த வையாபுரிப்பிள்ளையே இப்படித்தான். ஒரே அநியாயம். பழைய தமிழ்ப் புலவர்களின் காலத்தை யெல்லாம் மிகவும் பிற்பட்டதாகவே கூறுகிறார்'' என்று அழகிரிசாமியிடம் குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார். வையாபுரிப்பிள்ளையின் ஆராய்ச்சியைப் பற்றி எங்கள் மூவருக் குமே சிறந்த அபிப்பிராயம். காய்தல் உவத்தல் இல்லாத

நடு நிலைமையான ஆராய்ச்சி என்பது எங்கள் கருத்து. புதுமைப்பித்தனிடம் அழகிரிசாமி அன்றுதான் பழகத் தொடங்கினார். எனவே புதுமைப்பித்தனை நோக்கி, ''நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இந்தப் பண்டித நண்பர்கள் கோபப்படுவதில் அர்த்தம் உண்டா?'' என்று கேட்டார். புதுமைப்பித்தன் சொன்ன பதில் இதுதான்: ''பண்டிதர்தானே? நமது பண்டிதர்களுக்கு நம் இலக்கியம் பல்லாயிரம் வருஷங்களுக்கு முந்தியது என்று சொல்லிக் கொள்வதில் ஒரு பெருமை. பரிணாம தத்துவப்படி தோன்றிய முதல் குரங்கு தமிழ்க்குரங்கு என்றால்தான் நம்மளவனுக்குத் திருப்தி!''

* * *

புதுமைப்பித்தனும் நண்பர் அழகிரிசாமியும் 14-ம் நம்பர் பஸ்ஸுக்காக ஒரு ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தார்கள். பஸ் வர வெகு நேரமாகிவிட்டது. சுமார் அரைமணி நேரம் கழித்து வந்தது.

''இது ஏன் இவ்வளவு நேரம் கழித்து வருகிறது!' என்றார் அழகிரிசாமி.

''அதுவா? இந்த பஸ்தான் ராமனைக் காட்டுக்குக் கொண்டு போய் விட்டு விட்டுத் திரும்பி வருகிற பஸ். நேரமாகத்தானே செய்யும்?'' என்றார் புதுமைப்பித்தன்.

* * *

புதுமைப்பித்தன் வீட்டுக்குச் சில எழுத்தாள நண்பர்கள் சென்றார்கள். புதுமைப்பித்தன் தரையில் கிழிந்து போன பாயில் உட்கார்ந்திருந்தார். வந்திருந்தவர்களை வரவேற்று உட்கார வைப்பதற்காகக் கிழிந்து போயிருந்த இன்னொரு பாயை இழுத்து ஒட்டுப்போட்டு விரித்து, ''உட்காருங்கள். இதுதான் எழுத்தாளரின் சங்கப்பலகை! சும்மா உட்காருங்கள்!'' என்று கிழிந்த பாயை சுட்டிக்காட்டினார் புதுமைப்பித்தன்.

* * *

ஈழகேசரி பத்திரிகை ஆசிரியர் ராஜ அரியரத்தினம் சென்னைக்கு வந்திருந்தார். வந்திருந்த இடத்தில் புதுமைப் பித்தனை ஜோதி நிலையப் பிரசுராலயத்தில் சந்தித்தார். அப்போது ஜோதி நிலையத்தில் புதுமைப்பித்தன் மொழி பெயர்த்திருந்த 'பிரேத மனிதன்' வெளிவந்திருந்தது. அதில் ஒரு பிரதியை எடுத்து ஈழகேசரி அரியரத்தினத் திடம் அன்பளிப்பாகக் கொடுத்தார் புதுமைப்பித்தன். அப் படிக் கொடுக்கும்போது அதில் தம் கைப்பட ஒரு விஷயம் எழுதிக் கொடுத்தார்.

அது இதுதான் : 'அறம் செய விரும்பு — ஆனால், செய்யாதே!'

* * *

புதுமைப்பித்தன் முதன் முறையாக அ. சீனிவாச ராகவனோடு அறிமுகம் ஆவதற்காக அவரது வீட்டுக்குச் சென்றார். அவர் சென்ற சமயத்தில் தெருவில் ஆடிக் காற்று புழுதியை வாரி இறைத்துக்கொண்டிருந்தது. புதுமைப்பித்தன் கண்களில் மண் விழுந்து விட்டது. கண்ணைக் கசக்கிக் கொண்டே அ. சீ. ரா. வின் வீட்டு வாசலுக்கு வந்தார். வாசலில் தம் கண்ணில் விழுந்த மண்ணையும் கசக்கிக்கொண்டு நின்ற அ. சீ. ரா. வைப் பார்த்து,

''....அவர்கள்தானே!'' என்று கேட்டார் புதுமைப் பித்தன்.

''....ஆமாம். அவர்தான் நான். ஆனால் தங்களைத் தெரிய வில்லையே!'' என்றார் அ. சீ. ரா.

''எப்படித் தெரியும்? இந்தப் புழுதியிலேதான் கண்ணைத் திறக்க முடியவில்லையே!'' என்று கூறிக்கொண்டு, தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார் புதுமைப்பித்தன். பிறகு, ''நீங்கள் நேற்று நெல்லை மாணவர் சங்கத்தில் பேசியதைக் கேட்டேன். உங்களை நண்பராக்கிக் கொள்ள வந்திருக்கி றேன்'' அன்று அ. சீ. ரா. விடம் கூறினார்

''அதற்குத்தான் அழுதுகொண்டே வருகிறீர்களோ?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டார் அ. சீ. ரா.,

''நீங்களும்தாம் அழுகிறீர்கள்? இந்த மண்ணின் வலிமை யாரை விட்டது! ஆனால் ஒன்று. சந்திக்கும்போது அழுதால், பிரியும்போது சிரிக்கலாம் அல்லவா?'' என்றார் புதுமைப்பித்தன்.

* * *

சென்னைக்கு காந்திஜி வந்திருந்த சமயத்தில் தியாக ராய நகரில் ஒரு எழுத்தாளர் கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்துக்குப் புதுமைப்பித்தனுக்கும் அழைப்பு வந்திருந்தது. கூட்டத்துக்குச் சென்ற எழுத்தாளர்களுக்கு எழுத்தாளர் மகாநாட்டின் பிரதிநிதி என்பதைக் குறிக்கும் பாட்ஜுகள் வழங்கப்பட்டன. ஆனால் தமிழ் எழுத்தாளர்கள் நிறைந்த அந்தக் கூட்டத்தில் வழங்கபட்ட பாட்ஜுகளோ, ஹிந்தி பாட்ஜுகள். புதுமைப்பித்தனுக்கு ஹிந்தி தெரியாது. இருந்தாலும் ஹிந்தி எழுத்து எப்படி இருக்கும் என்பது தெரியும். எனினும் அவர் அந்த பாட்ஜை வேண்டுமென்றே தலைகீழாகக் குத்திக் கொண்டார். யாராவது கேட்டால் 'தெரியாத பாஷையை எப்படிக் குத்தினாலும் ஒன்றுதான்!' என்று கூறி அந்த பாட்ஜை வழங்கியவர்களுக்குச் சூடு கொடுத்தார் புதுமைப்பித்தன். ''இது என்னப்பா பாஷை? எழுத்துக்கள் எல்லாம் தலைகீழாக வௌவால் மாதிரி தொங்கிக்கிட்டு இருக்கு. அதனால்தான் நான் அதை நேராகத் திருப்பிக் குத்திக் கொண்டேன். கொஞ்சம் அழகாயிருக்கட்டுமே!'' என்று கேலியும் செய்தார் அவர்.

* * *

ராமா வரேர்கார் என்ற மராத்தி எழுத்தாளருக்குச் சென்னை எழுத்தாளர்கள் ஒரு உபசாரக் கூட்டம் நடத்தினார்கள். அந்தக் கூட்டம் முடிந்து திரும்பும்போது நண்பர் கொத்தமங்கலம் சுப்பு புதுமைப்பித்தனையும் அவருடன் வந்த சில எழுத்தாள நண்பர்களையும் தம் வீட்டுக்கு அழைத்தார். கொத்தமங்கலம் சுப்பு அப்போது தமது 'காந்தி மகான் கதை'யை எழுதிக் கொண்டிருந்தார். அதை வாசித்துக் காட்டத்தான் அவர் அழைத்தார். 'ராத்

திரிச் சாப்பாடும் தந்து, ஒரு சினிமாவுக்கும் அழைத்துப் போவ தானல் வருகிறோம்' என்றார் புதுமைப்பித்தன். சுப்பு சம்மதித் தார். நாங்கள் அனைவரும் போனோம்.

காந்தி மகான் கதையை வாசித்துக் காட்டினார். சுப்பு நாங் கள் கேட்டோம். புதுமைப்பித்தனும் கேட்டார். ஆனால் அவர் அபிப்பிராயம் சொல்லவில்லை. சுப்புவின் கிராமியப் பாடல்கள் பலவற்றையும் போற்றிய புதுமைப்பித்தனுக்குக் காந்தி மகான்கதை மட்டும் பிடிக்கவில்லை.

''என்னப்பா, அபிப்பிராயம் சொல்லமாட்டேன்கிறியே!'' என்று கேட்டார் சுப்பு.

''சொல்றேன்'' என்று தலையை ஆட்டினார் புதுமைப் பித்தன். ஆனால் சொல்லவில்லை.

பிறகு சுப்பு எங்களுக்கு உப்புமா வழங்கினார். சாப்பிட் டோம். அப்போது உப்புமாவுக்குத் தொட்டுக்கொள்ள ஊறு காய் வந்தது. புதுமைப்பித்தன் தமக்கு ஊறுகாய் வேண்டாம் என்னார்.

''உனக்கு நல்லது எதுவும்தான் பிடிக்காதே!'' என்னார் சுப்பு.

''எனக்கு உன் பாட்டும் பிடிக்கவில்லை. எனவே அதை நல்லது என்று நினைத்துவிடாதே!'' என்று பதில் கூறினார் புதுமைப்பித்தன்.

* * *

புதுமைப்பித்தனுக்குத் திருநெல்வேலி லாலாக்கடை அல்வா என்றால் மிகவும் பிரியம். ஒரு தடவை நான் திருநெல் வேலிக்குச் சென்றிருந்தபோது, புதுமைப்பித்தனுக்கு அல்வா வாங்கி அனுப்புவதாகச் சொல்லிவிட்டுப் போனேன். நான் சென்ற சில தினத்தில் புதுமைப்பித்தனும் திருவனந்தபுரம் செல்ல வேண்டியிருந்தது. எனவே தாம் புறப்படும் தினத் தைக் குறிப்பிட்டு விருதுநகரில் தம்மைச் சந்திக்கும்படி கூறி எனக்கு ஒரு கடிதம் எழுதினார். கடிதம் வெறும் கடிதம் அல்ல; இரண்டு பாட்டுக்களைக் கொண்ட சீட்டுக் கவி.

அல்வா எனச் சொல்லி அங்கோடி விட்டாலும்
செல்வா! நீ தப்ப முடியாது — அல்வா
விருதுநகர்க் கொடியில் உன்னுடனே கட்டாயம்
வருது எனக் காத்திருப்பேன் நான்!

என்பது முதல் பாட்டு. இவரது கடிதத்தை நம்பி நான் விருது நகர் ஸ்டேஷனுக்கு வந்ததுதான் மிச்சம். ஆசாமி வரவில்லை. பிறகு நான் அவருக்கு அல்வாவைப் பார்ஸலில் அனுப்பி வைத்து விட்டேன். நான் எந்தக் கடையிலே அல்வா வாங்கினேனோ, அந்தக் கடைக்காரர் அப்போதுதான் ஒரு புத்தகம் வெளியிடும் கம்பெனியில் பங்குதாரராகச் சேர்ந்திருந்தார். இது புதுமைப்பித்தனுக்கும் தெரியும். தாம் ஆவலோடு எதிர் பார்த்திருந்த அல்வாவைப் புதுமைப்பித்தன் தின்று பார்த்து விட்டு எனக்கு ஒரு கடிதம் எழுதினார்.

கடிதத்தின் பகுதி இது:

''....அல்வா கிடைத்தது. இன்றுதான் தின்று பார்த்தேன்....நீ அதில் ரொம்பப் பணத்தைக் கரியாக்கி இருப்பாயோ என்பதுதான் வருத்தம். ஊன்றித் தின்று பார்த்தால் ....(இன்னார்) அல்வா போடுவதைவிட, புஸ்தகம் போடுவது தான் நல்லது. நெல்லையில் கோயில் மாதிரி அந்தஸ்து வகித்து வந்த அல்வா இப்படியாச்சே என்பதுதான் எனக்கு ரொம்ப வேதனை. அல்வாவில் சில பகுதிகள் பாகிஸ்தான் கேட்கின்றன. நீ அனுப்பிய அல்வா. அதற்காக அதை நான் மன்னிக்கிறேன் ....விருதுநகரில் ரயில் இரண்டு நிமிஷங்கள்தான் நிற்கும். ஆனால் நீ செங்கோட்டை வரை என்னுடன் வருவதற்கு ரயில் காரன் ஆட்சேபிக்க மாட்டான். நீயும் நானும் இரண்டு மணி நேரமாவது பேசிப் பொழுதை கழிக்கலாமே. டிக்கட் வாங்கியதும் உனக்கு எழுதி விடுகிறேன். அல்வா வேண்டாம். நீ வா...''

* * *

அல்வாவை விருதுநகர்க் கெடியில் எதிர் நோக்கிச் சீட்டுக்கவி விட்டது போலவே, புதுமைப்பித்தன் பல

சமயங்களில் பாட்டாகவே பதில் எழுதி விடுவதுமுண்டு.

1945-ம் வருஷத் தொடக்கம்.

பொங்கலுக்கோ மற்ற சுபதினங்களுக்கோ வாழ்த்து அனுப்பும் 'கெட்ட பழக்கம்' எனக்கோ புதுமைப்பித்தனுக்கோ கிடையாது. அந்த வருஷம் நான் வம்புக்காயினும் ஒரு செய்தி அனுப்புவோமே என்று எண்ணி, 'குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியனுரிங்கில்லை....' என்று தொடங்கும் தனிப்பாடலைச் சிறிது சமய சந்தர்ப்பத்துக்குத் தக்கபடித் திருத்தி இலக்கிய நண்பர்களுக்கும், பாட்டு எழுதும் 'கவிஞர்' பெருமக்களுக்கும் ரசிகர்கள் சிலருக்கும் 'பொங்கல் செய்தி' என்று அச்சிட்டு அனுப்பி வைத்தேன். இந்தப் பாடலுக்கு இரண்டே இரண்டு பேரிடமிருந்துதான் எனக்கு எதிரொலி கிடைத்தது. ஒருவர் டி. கே. சி,. மற்றவர், வேளூர் வெ. கந்தசாமிக் கவிராயர் என்ற புனைபெயரைக் கொண்ட புதுமைப்பித்தன். டி. கே. சி என் மனவேதனையை நன்ருக உணர்ந்து போலிப்புலமை பெருத்துவிட்டதற்காக நான் படும் மன உளைச்சலை எண்ணி, ''ஹிம்ஸை என்பது அஹிம்சை அறுதியான தத்துவம். இதற்கு நாமெல்லாம் கவலைப்படுவானேன்?'' என்று தமது உளைச்சலையும் வெளியிட்டு ஒரு கடிதம் எழுதினர். ஆனல்; இந்தச் சமாதானம் எனக்குத் துக்க விசாரணையிலிருக்கும் வறண்ட அனுதாபமாகவே பட்டது.

ஆனல் புதுமைப்பித்தனே, மனத்துக்குக் காயகல்பம் அளிக்கும் முறையில் பதில் எழுதினர்; பாட்டாகவே எழுதினர்.

**குட்டுதற்கும் வெட்டுதற்கும் கூட்டமுடன் அன்னவரைச்**
**சுட்டு எரித்துத் தகிப்பதற்கும்—வெட்டரிவாள்**
**பாட்டுண்டு; நானுண்டு; நீயுண்டு; பாவறியா**
**மோட்டெருமைக் கவிராயன் உண்டு.**

**மோட்டெருமைக் கவிராயன் 'முக்காரம்' கேட்டால்தான்**
**காட்டமுள்ள பாட்டின் நயம் தெரியும்—பாட்டுள்ள**
**ரகுநாதா, நெஞ்சே, ரவைவைத்துப் பாட்டிசைக்கும்**
**ரகுநாதா ஏங்காதே நீ!**

**வேளூர், வெளுக் காரு**

என்ற இரு பாடல்களைப் 'பொங்கல் நம்பிக்கை' என மகுட மிட்டு அனுப்பி வைத்தார் புதுமைப்பித்தன். புதுமைப்பித்த னின் 'நம்பிக்கை'க்கு நானும் நாலு வெண்பாக்களில் பதில் அனுப்பினேன். அந்தப் பதிலை இங்கு தெரிவிக்க வேண்டிய தில்லை யல்லவா?

* * *

புதுமைப்பித்தனுக்கு ஒரு கொள்கை. அதாவது, 'எழுத்தாளனுக்கு நிதி திரட்டக் கூடாது. அவன் தன் எழுத்திலேயே பிழைப்பு நடத்த வேண்டும்' என்று சொல்வார். அதைப்போலவே கலைஞான மில்லாத ஒரு 'எழுத்தாளனோ' அல்லது 'கவிஞனோ' பரம தரித்திரனாக இருக்கிறான் என்பதற்காக, அவனுக்குக் கௌரவம் கொடுத்து நிதி பிரித்துக் கொடுப்பதும் அவருக்குப் பிடிக்கவே பிடிக்காது. ''ஏழை என்றால், ஏழை என்பதற்காகத் தானம் செய். அவனை ஏன் கவிஞன் என்றும் எழுத்தாளன் என்றும் கௌரவிக்க வேண்டும்?'' என்பார். ஆனால் அதே புதுமைப்பித்தனை நாம் உயிரோடிருந்த காலத்தில் கௌரவிக்கவில்லை. இருந்தாலும் அவர் தாமே தமது கௌரவத்தை எடுத்துக்கூறி, அதே சமயத்தில் தமது ஏழைமையையும் எடுத்துக்கூறி, தமது அந்திம காலத் தில் நிதி கேட்கத் துணிந்தார். அதற்காக அவர் வருத்தப் பட்டிருக்க வேண்டியதில்லை. கௌரவத்துக்குத் தகுதி யான எழுத்தாளனை வாழவைக்க, எழுதிப் பிழைக்கும் படிச் செய்யத் திராணியற்றுப் போன சமூகம்தான் வருத்தப்பட வேண்டும்.

* * *

எழுத்தாளனுக்கு யாராவது நினைவுநாள் கொண்டாட வேண்டுமென்று சொன்னால், ''எழுத்தாளனை நல்ல வெள்ளிக் கிழமையாகப் பார்த்து அடித்துக் கொல்லுங்கள். அப்புறம் அந்தச் சுபயோக சுபதினத்தில் வருஷா வருஷம் அவனுக்குப் குருபூஜை பண்ணுங்க'வே'' என்பார் புதுமைப்பித்தன். எழுத்தாளனைப் பாராட்டி அவனது படத்துக்குப் பூமாலை போட்டுப் பஜனை பாடுவதுதான்

அவனைக் கொல்வதற்குச் சரியான வழி என்பார். இத னுல்தான் தமது 'காஞ்சனை' என்ற கதைத் தொகுதியின் முன்னுரையில்.... ''என்னைச் சட்டம் போட்டுச் சுவரில் மாட்டிப் பூப்போட்டு மூடிவிடுவதுதான் என்காலை இடறி விடுவதற்குச் சரியான வழி'' என்று அவர் எழுதினர்.

புதுமைப்பித்தன் 'எழுத்தாளனை நாம் மனிதப் பிறவியாகக் கருதவேண்டும். அவனை ஒரு வீரனுக்கி வீர வணக்கம் செய்து, கல்நாட்டுவதுபோல் அவனைப் பாராட்டி அவனை நம்மைவிட்டு விலக்கி விட்டுவிடக் கூடாது. அவனை நாம் உணர்ந்து, குற்றங்குறைகளைக் கூறி, அவனை மனித குலத்தின் பிண்டமாகத்தான் கருத வேண்டும்' என்றே கருதினர்.

* * *

புதுமைப்பித்தனின் 'நாசகாரக் கும்பல்' என்ற கதையைப் படித்திருக்கிறீர்களா? அத்தக் கதையை முதலில் புதுமைப்பித்தன் மணிக்கொடிப் பத்திரிகையில் எழுதினர். அப்போதெல்லாம் அவர் முழுக் கதையையும் எழுதிச் சரி பார்த்து அனுப்புவது கிடையாது. முதல் பக்கம் எழுதி முடிந்தவுடன் அது கம்போசுக்கு— அச்சுக்குப் போய்விடும்; இரண்டாம் பக்கத்தை அவர் எழுதுவார். எழுத எழுத ஒவ்வொரு தாளும் உடனுக்குடன் அச்சுக்குப் போகும். அத்தனை அவசரம். அவசரத்துக்குக் காரணம், கடைசி நிமிஷத்தில் எழுத உட்காருவது.

'நாசகாரக் கும்பல்' கதையை எழுதியபோது அதில் வரும் 'மருதப்ப மருத்துவனுருடைய மனைவி இசக்கியம்மாள் காலமாகி வெகு காலமாகிவிட்டது' என்று எழுதியிருந்தார். கதையின் பிற்பகுதியில் மருதப்பன் அடிபடும்போது அவரது மனைவி அலறுவதாகவும், மனைவியின் கைத்தாங்கலில் மருதப்பன் சென்றதாகவும், பின்னர் மனைவியும் அவருமாக மதம் மாறியதாகவும் எழுதியிருந்தார்.

கதாபாத்திரத்தைச் சிருஷ்டித்துக்கொண்டு போகும் போது சில சமயங்களில் இந்த மாதிரி ஞாபக மறதிக்கு எழுத்தாளர்கள் ஆளாவதுண்டு. எனவே கதையின் ஆரம்

பத்தில் காலமாகிப்போன மனைவி, பிற்பகுதியில் உயிர் பெற்று எழுந்து வந்து விட்டாள்!

இதைப்பற்றிப் புதுமைப்பித்தனிடம் ஒருவர் கேட்டார்: ''என்னய்யா இது? உங்கள் கதையில் செத்தவர்கள்கூடப் பிழைத்து விடுவார்களோ?''

புதுமைப்பித்தன் அதற்குச் சாதுரியமாகப் பதில் கொடுத்தார்: ''வீணாக என்றால் ஒரு பெண் ஏன் சாக வேண்டும்? எனவே நான் அவளுக்கு உயிர் கொடுத்து விட்டேன்!''

* * *

புதுமைப்பித்தன் நண்பர்களின் இன்பத்திலும் துன்பத்திலும் பங்கெடுக்கும் பண்பு பெற்றவர். நானும் அவரும் மிகவும் நெருங்கிப் பழகிய காலத்தில் அவரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் — ஒரு மகத்தான இலக்கியம் — வந்தது. கடிதம் வந்ததற்குக் காரணம் இது: நான் ஒரு பத்திரிகாலயத்தில் வேலை பார்த்து வந்தேன். அது ஒரு முதலாளித்துவ ஸ்தாபனம். எழுத்தாளர்களின் உரிமை பறி போவதற்குக் கேட்க வேண்டுமா? என் உரிமைக்கு ஆபத்து வந்தது. இதன் காரணமாக எனக்கும் நிர்வாகத்துக்கும் இழுபறி. 'உரிமையைப் பறிகொடு; இல்லை, வெளியேறு' என்றது நிர்வாகம். 'வேலையை வேண்டுமானால் பறி; உரிமையைப் பறிக்காதே' என்று நின்றேன் நான். இந்தச் சந்தர்ப்பத்தில் புதுமைப்பித்தன் நான் உரிமையைப் பறிகொடுத்து வெளியேறி விட்டேனே என்ற அங்கலாய்ப்பில் ஒரு நீண்ட கடிதம் எழுதினார். அந்தக் கடிதம் 18 பக்கங்கள் கொண்டது. தபால்காரனிடம் தெண்டம் கொடுத்துத்தான் அதை நான் வாங்கினேன். கடிதத்தில் முன் பகுதியில் புதுமைப்பித்தன் அருமையான கதை—என் கதையை—எழுதியிருந்தார். அந்தக் கதை இங்கு தேவையில்லை. கடிதத்தின் பிற்பகுதியில் அவர் எழுதியிருந்த வரிகள்....

''....ரகு, நான் உனக்கு வேறு என்னத்தைச் சொல்லப்போகிறேன். பிடி உன் கையிலிருப்பதால்தானே

உறுமலும் மாய்மாலக் கண்ணீரும்!....ஹிம்சை செய்யும் கண்ணீருக்கு நீ ஏன் இளக வேண்டும்? உன்னுடைய நெஞ்சழுத்தம் எங்கே?.... உனக்கு ஏன் நெஞ்சிளக்கம்? கோழை என்ற மாய்மாலத்தால் காரிய சாதனை செய்யும் அயோக்கியத்தனத்தை, கோழைத்தனம் என்று ஏமாறுதே. அது ஒரு வேஷம். உனக்கு 22 வயசு. இளாதவது இயல்பு உரிமைக்காகப் போராடு என்று பெரிய வார்த்தைகளைப் போட்டு நான் உன்னை நிர்ப்பந்தப் படுத்தவில்லை.... பதிப்பிக்கும் அயோக்கியர்கள் மத்தியில் பெரிய வார்த்தைகளுக்கு இடமில்லை. பெருச்சாளியைக் கொல்வதற்கு Bren-gun தேவை இல்லை. பெரிய தடி போதும். பிரென் கன் உபயோகிப்பது நமது முட்டாள்தனத்துக்கு அறிகுறி. நீ உன் உறுதியை அயோக்கியர்களிடம் பிரயோகித்துப் பாரேன். உரிமைக்காகப் போராடச் சொல்லவில்லை. அதில் எனக்கு நம்பிக்கை கிடையாது........ உன்னுடைய கடிதத்தைக் கண்டதும் 'கை கடக்க விட்ட பின்பு கட்டுரைப்ப தென்கொலோ' என்ற வார்த்தைகள்தான் ஞாபகத்துக்கு வந்தது. இந்தக் கடிதம் வருமுன்பு நீ இப்பொழுதுள்ள நிலையில் காரியத்தை உனக்குப் பாதகமாக முடித்துக்கொண்டு விடுவாய் என்றுதான் எதிர்பார்க்கிறேன். வேலையைத் தீர்த்து விட்டால், உனக்கு அவகாசம் உண்டு. சென்னை அப்டாயருக்கு (ஆடு வெட்டும் இடம்) போய்ப் பார். ஆடுகளை வரிசையாக நிறுத்தி, பளபளவென்ற கொலைக் கத்தியை ரூல்தடி வைத்துக் கோடு போட்டமாதிரி இழுத்துவர, தலைகள் உருளும். ஆடுகள் தன்தன் முறை வரும்போது குனிந்து கொடுக்கும். இந்த ஆடுகளில் ஒன்றுதான் என்னுடைய ரகு, என் ராசா என நினைக்க எனக்கு நெஞ்சு கொதிக்கிறது. இந்த ஒரு விசை கை சுட்டு விட்டது. இனியாவது இந்த விஷப் பரீட்சை செய்யாதே. இனிமேல் செய்ய உனக்கு உரிமை இல்லாதபடி உனது கைப்பிடித்து ஒருத்தி நிற்பாள். அவளையும் மறந்து சோதனை செய்வாயோ? சத்திய சோதனை செய்ய எல்லோருக்கும் உரிமை கிடையாது, கதையில்

ஒருவன் செய்து நமக்கு நம்பிக்கை ஊட்டுகிருன்; வாழ்வில் ஒருவன் செய்து நம்மையெல்லாம் காயடித்து விட்டான். இரண்டு பேர் போதும். மூவருக்கு நிற்கக்கூட இடமில்லை நான் கடுமையாகத்தான் எழுதுவேன். ஒன்று, நீ எதற்கும் நிலைகுலையாதே. என் தோள்பலம் உனக்கு எப்போதும் உண்டு. உனது ரத்த பந்தங்கள் உன்னைக் கண்டு மிரளலாம். உனது செய்கை என்னைச் சிரிக்கத்தான் வைக்கிறது. உன் சொ. வி. யிடம் உன்னல் கோபப்பட முடியாது. போனது போகட்டும். வருந்தாதே. இனிமேல் ஏமாருதே. அதற்கு அவசியமும் இராது.

உனது
சொ. வி."

ஆனல் புதுமைப்பித்தன் எதிர்பார்த்திருந்தபடி நான் நடக்கவுமில்லை; ஏமாறவுமில்லை. அது வேறு கதை. ஆனல் புதுமைப்பித்தன் எப்படிச் சமயங்களில் உணர்ச்சி மயமாகக் கடிதம் எழுதுவார் என்பதற்கு, எப்படித் தம் நட்புக்குப் பாத்திரமானவரின் துன்பத்தைக் கண்டு சீறுவார் என்பதற்கு, இந்தக் கடிதப் பகுதி ஓர் உதாரணம். அவ்வளவுதான்.

* * *

புதுமைப்பித்தன் வேளூர்க் கவிராயராக அவதாரம் எடுத்துப் பாட்டுகள் எழுதியது போலவும், சீட்டுக்கவி எழுதியது போலவும், சமயங்களில் துக்கடாவாகச் சில வேடிக்கைப் பாட்டுக்களும் சொல்வதுண்டு.

யுத்த காலத்தில் வேவல் சுமத்ராவிலிருந்து விலாவெலும்பு முறிந்து ஓடி வந்தது ஞாபகமிருக்கிறதா? அப்போது புதுமைப்பித்தன் அந்தச் செய்தியைக் கேட்டதும் பக்கத்திலிருந்த நண்பர்களைப் பார்த்து ஒரு விடுகதைப் பாட்டுப் பாடினர்.

**''வேலமுன் விழுந்ததேன்?**
**வேவல்விலா முறிந்ததேன்?"**

என்று கேட்டார். பிறகு ''வலுவற்று, வலுவற்று'' என்று அவரே அதற்குப் பதிலும் கூறினர்!

இதுபோலவே அவர் ஒரு சமயம் ஒரு வேடிக்கைப் பாட்டு சொன்னர். ஒருவன் ஒரு பெண்ணேடு சிநேகமா யிருந்தான். அவளோடு நெருங்கிப் பழகிச் சரசங்களாடும் வரையிலும் பழகினன். ஆனல் 'கல்யாணம் பண்ணிக் கொள்' என்ருல் மட்டும் தட்டிக் கழித்தான். இதைக் கண்டு அந்தப் பெண் சீறி விழுந்தாள். 'நீ இந்த மாதிரி நடப்பது சரியில்லை. அம்மா கண்டால் என்னையும் உன்னை யும் கொன்று விடுவாள். போய் விடு' என்று சொன்னன். இதுதான் பாட்டுக்குரிய சந்தர்ப்பம். பாட்டு பின் வருமாறு:

பண்ணுத வம்பெல்லாம் பண்ணிவச்சி, இன்னைக்குக்
கண்ணாலே மின்ன கசக்குதோ?—அண்ணாத்தே!
ஆயாவந் தாலுன்னை அடுப்பில் முறிச்சி வைப்பாள்
போயேன் தொலைஞ்சி போயேன்!

இதுபோலவே அவர் அந்தந்தச் சந்தர்ப்பத்தில் ஏதாவது விளையாட்டாகப் பாட்டுச் சொல்வார். பாட்டு பரிபூரணமாக இருந்தாலும் இருக்கும்; அரைகுறையாக நின்ருலும் நிற்கும்.

அவர் பாட்டாகச் சொன்னலும் சரி, வசனமாகச் சொன்னலும் சரி; அவரது பாஷை ஈட்டி போலிருக்கும்; அதில் இனிய ஹாஸ்யமும் இருக்கும்.

# 'புதுமைப்பித்தன்'

இந்த நூல் புதுமைப்பித்தனின் வாழ்க்கைச் சரிதத்தைக் கூறப்புகுந்த நூலேயன்றி, புதுமைப்பித்தனின் இலக்கிய சரிதத்தையோ குறை நிறைகளையோ விமர்சனம் செய்யப் புகுந்த முயற்சி அல்ல. எனினும் அவை பற்றி ஒரு சிறிதும் கூறாமல் விடுப்பது தவறு என்பது எனக்குத் தெரியும். புதுமைப்பித்தனின் இலக்கிய சிருஷ்டியின் தன்மையைப் பற்றித் திட்டவட்டமான நீண்டதொரு விமர்சனம் எழுத எனக்கு ஆசையுண்டு; நினைப்புமுண்டு. ஆனால் அந்த ஆசையை நான் இப்போது நிறைவேற்றிக்கொள்ள விரும்ப வில்லை. எனினும் புதுமைப்பித்தனின் இலக்கிய மேதத்து வத்தைப் பற்றிச் சுருக்கமாகச் சில குறிப்புக்கள் மட்டுமே தர விரும்புகிறேன்.

புதுமைப்பித்தன் தமது 'புதுமைப்பித்தன்' என்ற பெயரில் மட்டும் இலக்கியம் படைக்கவில்லை. சொ. விருத் தாசலம், சொ. வி., வேளூர். வெ. கந்தசாமிக் கவிராயர், ரசமட்டம், கூத்தன், நந்தி, கபாலி, சுக்ராச்சாரி என்னும் பற்பல பெயர்களிலும் அவர் திருவவதாரம் எடுத்து இலக் கியத் திருவிளையாடல்கள் புரிந்து போயிருக்கிறார். இந்தப் பெயர்களில் புதுமைப்பித்தன் கதைகள் எழுதியிருக்கிறார் மொழி பெயர்த்திருக்கிறார்; விமர்சனம் செய்திருக்கிறார்; பாட்டு எழுதியிருக்கிறார்; அரசியல் கட்டுரைகள் எழுதி யிருக்கிறார். சினிமா வசனமும், ஒன்றிரண்டு ஓரங்க நாடகங் களும் எழுதியிருக்கிறார். புதுமைப்பித்தன் மொத்தத்தில் சுமார் நூறு சொந்தக் கதைகள் எழுதியிருக்கிறார்;

சுமார் நூறு மொழிபெயர்ப்புக் கதைகள் எழுதியிருக்கிறார். பத்துப் பதினைந்து பாடல்கள் எழுதியிருக்கிறார். எத்தனையோ விமர்சனங்களும், நூற்றுக்கு உட்பட்ட கட்டுரைகளும், ஒன்றிரண்டு ஒற்றையங்க நாடகங்களும், மூன்று சினிமா வசனமும், நாவல் என்ற அம்சத்துக்குப் பொருந்தாத சில நெடுங் கதைகளும், அபூர்ணமாக நிற்கும் நாவல்களும் சினிமா கதைகளும், வேறு பலவும் எழுதியிருக்கிறார். ஆனால் அவரது சிருஷ்டிகளில் பெரும்பாலானவை சமீபகாலத்தில் தான் புத்தக உருவில் முறையாக வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவரது சகல சிருஷ்டிகளும் வெளிவந்த பின்னர் தான் அவரைப் பற்றிய பரிபூரணமான விமர்சனத்தை நான் எழுத முடியும்; அப்போதுதான் வாசகர்களுக்கும் அது புரியும்.

புதுமைப்பித்தன் பற்பல விதமான இலக்கிய சிருஷ்டி களிலும் பற்பல பெயர்களிலும் தம்மை வெளிப்படுத்திக் கொண்டிருந்தாலும்கூட, அவரது மற்றப் பெயர்களை விட, இயற் பெயரையும்விட, பிரசித்தமும் பெருமையும் பெற்றது 'புதுமைப்பித்தன்' என்ற புனைபெயர்தான்; அவரது மற்ற இலக்கியங்களைவிட பேரும், புகழும், பிரசித்தமும், உயர்ந்த ஸ்தானமும் பெற்றவை அந்தப் 'புதுமைப்பித்த னின் கதைகள் தாம். ஏனெனில் புதுமைப்பித்தனின் மேதாவிலாசம், சுவானுபூதியான கற்பனை வளம், அகண்டமும் ஆழமும் நிறைந்த சிந்தனை முதலியன எல்லாவற்றுக்கும் அவரது கதைகள்தாம் சிறந்த உரைகல்லாக, உலகமறிந்த பிண்டப் பிரமாணங்களாக நம்முன் விளங்குகின்றன. புதுமைப் பித்தனின் கதைகள் விஷயத்துக்குப் பின்னர் வரலாம்.

இன்று தமிழ் நாட்டாரால் சிறந்த சிறுகதை இலக்கிய கர்த்தா என்றெல்லாம் போற்றிப் புகழப்படும் புதுமைப் பித்தன் உயிரோடிருந்த காலத்தில் அவருக்கு இலக்கிய உலகில் நண்பர்களைவிடப் பகைவர்களே அதிகம். ஆனால் அந்தப் பகைமைக்குப் புதுமைப்பித்தனின் கதைகள் பிரதான மான காரணம் அல்ல; புதுமைப்பித்தன் சொல்லும் அபிப் பிராயங்கள், எழுதும் மதிப்புரைகள், விமர்சனங்கள் முதலியனவே இதற்குக் காரணம். ஆனால் அபிப்பிராயம்

கூறுவதிலும் விமர்சனம் செய்வதிலும் புதுமைப்பித்தனிட மிருந்த தீவிரத் தன்மை எப்படிப் பகைவர்களைச் சிருஷ்டித்ததோ, அதுபோல் அவரது விமர்சனத்தை ஆவலோடு வரவேற்கும் நண்பர்களையும் ஒருபுறம் சிருஷ்டித்து விட்டது.

'இளம் எழுத்தாளர்; ஆதரிக்க வேண்டும்' என்று யாரேனும் கூறினால் அவர் அதை ஒப்புக்கொள்ள மாட்டார். 'இளையவனாகட்டும், முதியவனாகட்டும், வாலையாட்டிக் கொண்டு மீன்மாதிரி திரியும் தவளைக் குஞ்சிடம் எப்படித் தவளையின் அம்சம் குடியிருப்பது தெரிந்து விடுகிறதோ, அதுபோலவே அவனிடம் திறமை இருக்குமாயின், அதன் அம்சம் அவனது எழுத்தின் குஞ்சுப் பருவத்திலேயே வெளியே தெரியத்தான் வேண்டும்; அப்படித் தெரியாவிட்டால் அவனிடம் திறமை இல்லை என்றுதான் அர்த்தம்' என்று கருதுபவர் புதுமைப்பித்தன். எனவேதான் அவர் விமர்சனம் செய்யும்போது இலக்கியக் கர்த்தாவின், அல்லது இலக்கியத்தின் வயதையோ வாலிபத்தையோ, முதுமையையோ கவனிக்கமாட்டார். திறமை இருந்தால் தாராளமாகப் போற்றுவார். திறமை இல்லையெனத் தட்டுப்பட்டால் அந்தக் காளான் பிறவிகளை முளையிலேயே கிள்ளியெறிந்துவிடும் வேகத்தில் எழுதித் தீட்டி விடுவார். அவரது விமர்சனங்களை கண்டு பயந்தவர்களும் உண்டு; பாராட்டியவர்களும் உண்டு.

மணிக்கொடிப் பத்திரிகையில் புதுமைப்பித்தன் பின் வருமாறு எழுதினார்: ''மதிப்புரைகள் எழுதும் விஷயத்தில் இப்படிப்பட்ட 'அபேதவாதம்' (†அதாவது, பேதா பேத மின்றிச் சகல நூல்களையும் பாராட்டுவது) ஒரு நிரந்தர மான கெடுதலை விளைவிக்கிறது. இப்பொழுதுதான் புஸ்தகம் வாங்கிப் படிக்கும் பழக்கம் ஏற்பட்டு வருகிறது. இப் பழக்கம் பெற்றவர்கள் மிகுந்த உற்சாகமுள்ள சிலர். இவர்கள் அடிக்கடி ஏமாற்றப்பட்டால், அவர்களுக்கு உற்சாகம் குன்றிவிடும்; அல்லது அவர்களது உற்சாகம் எல்லாம் அசட்டுத் தனங்களைக் கட்டி மாரடிக்கும் ஒரு

†என் குறிப்பு—ரகுநாதன்

விபரீத நிலையில் அவர்களைப் புகுத்திவிடும். மதிப்புரை எழுது வோர் கொஞ்சம் ரண வைத்தியரின் மனப்பான்மையைக் கொண்டிருப்பதால் உண்மையிலேயே சக்தி பெற்ற இலக்கிய கர்த்தர்களைச் சாகடித்துவிட முடியாது. இதற்குப் பாரதியார் சிறந்த உதாரணம்....''

புதுமைப்பித்தன் விமர்சன விஷயத்தில் இப்படிப்பட்ட ரண வைத்தியரின் மனப்பான்மையோடுதான் நடந்து கொண் டார்.

''எனது பாலிய நண்பர் (இன்னாரை) சமீபத்தில் ஆசிரிய ராகச் சந்தித்தேன். இப்பொழுது இந்தப் புத்தகத்தின் மூலம் கிரந்த கர்த்தராகச் சந்திக்கிறேன். இது மகிழ்ச்சிக்குரிய விஷயமா என்பது அவரிடம் நேரில் சொல்ல வேண்டிய விஷயம்..'' என்று ஆரம்பமாயிற்று அவரது கண்டன மதிப் புரை ஒன்று. மதிப்புரை எழுதுவதில் அவருக்கு நண்பர் என்றோ, பகைவர் என்றோ விருப்பும் கிடையாது; வெறுப்பும் கிடையாது.

இது போலவே ஒரு கதாசிரியரின் கதைத் தொகுதியைப் பற்றி எழுதியபோது ''........சாரமற்ற கதைக் குவியல்'' என்று அவர் ஒரே வரியில் எழுதிவிட்டார். அந்தக் கதாசிரியர் பின்னொரு முறை புதுமைப்பித்தனைச் சந்தித்தார். அப்போது புதுமைப்பித்தனிடம் அவராகவே அந்த மதிப்புரையைக் குறிப் பிட்டுக் கூறி, ''நீங்கள் புதுமையான ஆசாமிதான்; ஆனால் பித்தமும் உங்களுக்கு இருக்கிறதல்லவா?'' என்று புதுமைப் பித்தனைக் குத்திக்காட்ட விரும்பினார். புதுமைப்பித்தன் தமக்குள் எழுந்த கோபத்தை உள்ளடக்கிக்கொண்டு பதில் சொன்னார்: ''பித்தன்தான்! ஆனால் இந்தப் பித்தன் அந்த மதிப்புரையை எழுதும்போது நெற்றிக் கண்ணைத் திறக்க வில்லை. திறந்திருந்தால் நீங்கள் இன்று என் எதிரில் நின்று பேச முடிந்திருக்காது!'' அதற்குமேல் புதுமைப்பித்தனோடு பேசுவதற்கு அந்த ஆசிரியருக்குப் 'பித்தமா' என்ன? போய் விட்டார்!

புதுமைப்பித்தன் காரசாரமாக மதிப்புரை எழுதுவது போலவே ஹாஸ்யமாகவும் எழுதுவதுண்டு. ஒரு ஹிந்திக் கதையின் மொழிபெயர்ப்பு மதிப்புரைக்கு வந்திருந்தது.

புத்தகத்தின் முன்னுரையில் ஒரு விஷயம் குறிப்பிடப்பட்டிருந் தது. அதாவது, வாழ்க்கையிலே தோற்று நொடித்துத் தற் கொலை பண்ணிக் கொள்ளப்போன ஒருவன் அந்தக் கதையைப் படிக்க நேர்ந்து, பின் மனம்மாறி வீடு திரும்பி, அதன்பின் கோடீசுவரன் ஆனான் என்ற ஒரு உண்மைச் சம்பவத்தைக் கூறி, அந்தக் கதைக்குப் பெருமை தேடியிருந் தார் மொழிபெயர்ப்பாளர். புதுமைப்பித்தன் அந்தப் புத்தகத் துக்கு மதிப்புரை எழுதும் போது இதே விஷயத்தை குறிப் பிட்டுவிட்டு, வாசகர்களும் அந்தப் புத்தகத்தைப் படித்து விட்டுத் தாமும் கோடீசுவரன் ஆகிவிடலாம் என்று எதிர் பார்க்கக் கூடாது என்று கூறி, கீழே குறளிலிருந்து ஒரே ஒரு வரியை மட்டும் எடுத்து எழுதியிருந்தார்:

''திருவேறு; தெள்ளிய ராதலும் வேறு!''

இலக்கியத்திலும் இலக்கியத்தை விமர்சனம் செய்வதிலும் புதுமைப்பித்தனுக்குப் பிடிக்காத விஷயங்கள் இரண்டு: 1. திருட்டு இலக்கியம். 2. இலக்கிய ஆசிரியர்களை வேறொரு பிரபல இலக்கிய ஆசிரியராகப் (தமிழ் நாட்டு பெர்னுட்ஷா, தமிழ்நாட்டு ஷேக்ஸ்பியர் என்பது போல்) பட்டம் சூட்டி அழைப்பது.

'தழுவலா. மொழிபெயர்ப்பா' என்பது குறித்து, அந்தக் காலத்து இலக்கிய கர்த்தாக்கள் மணிக்கொடியில் 'யாத்ரா மார்க்கம்' என்ற தலைப்பில் சர்ச்சை செய்தார்கள். புதுமைப் பித்தன் மொழிபெயர்ப்பு ஒன்றையே ஆதரிப்பவர்; பிற நாட்டு இலக்கியங்களைத் தழுவி எழுதுவதை—அதாவது மூலத்தைக் குறிப்பிடும் நேர்மையான தழுவல், குறிப்பிடாத திருட்டுத் தழுவல் உள்பட — எல்லாவற்றையும்-எதிர்ப்பவர். அதற்கு அவர் கூறும் காரணம் இது:

''கதையைத் தழுவித்தான் எழுதவேண்டும் என்று விவாதிக்கிறவர்கள் ஒரு கட்சி. தமிழ் மக்கள் விதேசி ஆசாரங் களை—ஒன்றும் புரியாது என்பதால்—ரசிக்கமாட்டார்கள் என்பது இவர்கள் கூற்று....இக்கட்சி பேசுகின்றவர் கள் தம்மையே தம் வாதத்தால் அளந்து கொள்கின்ற னர்.... 'ஏன், ஸார், ஈசாப்புக் கதைகள் இருக்கிறதே,

அவைகளையும் மொழிபெயர்க்கத்தான் வேண்டுமா?' என்று சில படித்த மேதாவிகள் கேட்கிருர்கள். ஈசாப்பு கதையில் வரும் பூனைகளும் குரங்குகளும் ரோம சாம்ராஜ்யத்தின் வாசனை பெற்றிருக்க வேண்டும் என்று நான் சொல்ல வர வில்லை....உலகத்தின் பொதுப் பாஷை என்று சொல்லக் கூடியதாக இருக்கும் அவற்றைப் பற்றி இங்குப் பேச்சே கிடையாது. சமுத்திரத்தையும் வானத்தையும்போல அது எல்லாருக்கும் பொது....

''....அயல் நாட்டுக் கதையைச் சொல்வதன் விசேஷ நோக்கம் என்ன? சரித்திர சம்பந்தமான நாவல் எழுதும் கிரந்த கர்த்தனின் தொழிலையே மொழிபெயர்ப்பவனும் செய் கிருன், சரித்திரக் கதாசிரியன் காலத்தில் உலாவுகிருன்; மொழிபெயர்ப்பவனும் காலத்தில்தான் உலாவுகிருன். (சம காலத்துக் கதைகளை மொழிபெயர்ப்பதைக் குறிக் கிறேன்.) இதுதான் வித்தியாசம். வெறும் செப்பேட்டுச் சாசனங்களாகவும் சரிந்து கிடக்கும் ஜெயஸ்தம்பங்களாகவும் இருந்துவரும் புராதன காலத்தவரை நம்மைப்போல் சதை யும் ரத்த ஓட்டமும் கொடுத்து நம்முடன் பேச வைக்கிருன் கதாசிரியன்....

''அதைப் போலவேதான் மொழிபெயர்ப்பாளனும் விசித் திர விபரீத உடையுடன், பாஷையுடன், காணப்பட்டாலும், அதற்கும் அப்புறத்திலிருந்து துடிதுடிக்கும் மனித இயற்கை யைக் காண்பிக்க முயல்கிருன்.''

மேற்கண்ட தமது அபிப்பிராயத்தினுல் புதுமைப்பித் தன் எந்தத் தழுவல் இலக்கியத்தையும் ஏற்றுக்கொள் வது கிடையாது. மதிப்புரை எழுதும்போதும் அதைச் சொல்லித்தான் தீருவார். ஓர் உதாரணம்: ஒரு ஆசிரியர் ஒரு தழுவல் நாடகம் எழுதியிருந்தார். அதன் முன்னுரை யில் இந்த நாடகம் நடிப்பதற்கே யன்றி படிப்பதற்கல்ல என்பதைக் குறிப்பிடுவதற்காக, 'இது வெறும் காப்பி டிகாக்ஷன்! மேடை, சீன், நடிகர்கள் என்னும் சர்க்கரை யும் பாலும் சேர்ந்தால்தான் இனிக்கும்' என்ற பொருளில் ஒரு முன்னுரை எழுதியிருந்தார். அந்தப் புத்தகத்துக்கு

மதிப்புரை எழுதியிருந்த புதுமைப்பித்தன் ஒரே வரியில் அந்தப் புத்தகத்தைத் தகர்த்து விட்டார்:

"இது காப்பி அல்ல; சிக்கரிப் பவுடர்!"

இதுபோலவே அவர் தழுவல் இலக்கியத்தைத் தாக்கி எழுதுவார். ஆனால் தழுவல் என்று சொல்லாமலே திருடுபவர்களைப் பற்றி அவர் ஒரு முறை 'சமீபத்தில் சிலர் சூரியனைத் தூக்கிச் சட்டைப்பையில் போட்டுக்கொள்ளும் முயற்சியைத் தழுவல் என்கின்றனர். அது வெறும் திருட்டு!' என்று எழுதி விட்டார். திருட்டு இலக்கியம் சிருஷ்டிப்பவர்களைக் கண்டால் தான் புதுமைப்பித்தன் நெற்றிக் கண்ணைத் திறக்கும் பித்தனாக மாறுவார். 'ரசமட்டம்' என்ற புனைபெயரில் அவர் 'தினமணி'யில் எழுதிய கட்டுரைகளும், 'இரவல் விசிறி மடிப்பு' என்ற தலைப்பில் 'தினசரி'யில் 'பில்ஹணன்' என்ற நாடக நூலுக்கு அவர் எழுதிய மதிப்புரையும் புதுமைப்பித்தன் திருட்டு இலக்கியத்தைத் தாக்கி எழுதியதற்குச் சரியான உதாரணங்கள். திருட்டு இலக்கியம் சிருஷ்டிப்பவர்களைப் பற்றிப் புதுமைப் பித்தன் பின்வருமாறு குறிப்பிடுவார்:

"இன்னொருவன் கதையைத் திருடி, தன் சொந்தக்கதையென்று கூசாமல் சொல்லும் பொய்யர்களை, சோரம் போன மனைவிக்குப் பிறந்த குழந்தைக்குத் தான்தான் தகப்பன் என்று கூறிக் கொள்ளும் வெட்கம் கெட்டவருக்குத்தான் ஒப்பிடலாம்!"

புதுமைப்பித்தன் மதிப்புரை விஷயத்தில் இவ்வளவு காரசாரமாயிருப்பதுபோல், ஆசிரியர்களைத் தமிழ்நாட்டு பெர்னாட்ஷா, தமிழ்நாட்டு மாப்பஸான் என்ற ரீதியில் ஒப்பிட்டுக் கூறுபவர்களையும். எடுத்ததற்கெல்லாம் பிற நாட்டு இலக்கியங்களோடு ஒப்புநோக்கும் பேர்வழிகளையும் அவருக்குப் பிடிக்காது. "ஏன் அது மேல்நாட்டுடன் ஒப்பிட வேண்டிய காரியமோ தெரியவில்லை. நம்மூர் நாயர் ஓட்டல் இட்லியையும் பரமசிவம்பிள்ளை ஓட்டல் தோசையையும் ஹன்ட்லி பாமர்ஸ் பிஸ்கோத்துடன் வெற்றிகரமாக ஒப்பிட்டு வெளிவரும் கருத்துக்களைக் காணப்பெறும்

பாக்கியம் எனக்கு இதுவரை சித்திக்கவில்லை'' என்று ஒரு கட்டுரையில் அவர் வயிற்றெரிச்சலோடு எழுதியிருக்கிறார்.

'புதுமைப்பித்தன் கதைகள்' என்ற புத்தகம் ஞாபகம் இருக்கிறதா? அதற்கு ரா. ஸ்ரீ. தேசிகன் ஒரு முன்னுரை எழுதியிருக்கிறார். அதில் புதுமைப்பித்தனின் கதைகள் பலவற்றை மேல் நாட்டுக் கதைகளுடன் ஒப்புநோக்கி எழுதியிருக்கிறார். அந்த முன்னுரையை எல்லோரும் ரசித்துப் படித்தனர். ஆனால் முன்னுரையை விரும்பாத, பாராட்டாத ஒரே ஆசாமி, புதுமைப்பித்தன் ஒருவர்தான்! காரணம், இந்த ஒப்புநோக்கு விவகாரம்தான்.

புதுமைப்பித்தன் ஒப்புநோக்கு விஷயத்தில் இத்தனை வெறுப்புக் கொண்டிருந்ததால், அவருக்கு வெளிநாட்டுக் கருத்துக்களோ கதைகளோ ஆசிரியர்களோ பிடிக்காது என்பது பெருந்தவறு. அவருக்கு வெளிநாட்டு ஆசிரியர்களைப் பிடிக்கும்; அவர்கள் எழுதிய கதைகளும் பிடிக்கும். ஒரு தடவை சென்னையில் நடந்த இலக்கிய நண்பர்கள் சங்கக் கூட்டத்தில் புதுமைப்பித்தன் பின்வருமாறு கூறினார்:

''மேல்நாட்டு மோகம் கூடாது என்று நான் சொல்லவில்லை. மேல் நாட்டிலிருந்து டுத் பேஸ்டையும் பிரஷ்ஷையும் உபயோகிக்க மோகம் கொள்கிறீர்கள். அதுதான் கூடாது. பேஸ்டையும் பிரஷ்ஷையும் விட்டு விடுங்கள். மேல் நாட்டுக் கருத்துக்களை வாங்கிப் பாருங்கள்!''

புதுமைப்பித்தன் இப்படியெல்லாம் மதிப்புரை விஷயத்தில் மிகவும் கடின சிந்தையராக இருந்ததற்குக் காரணம் உண்டு. உண்மையான இலக்கியத்தை உணர்ந்து பாராட்ட அவருக்குத் தெம்பு உண்டு; திராணியும் உண்டு. எதையுமே அர்த்தமற்றுத் தூக்கியெறிந்து பேசுகிற விவகாரம் மதிப்புரை விஷயத்தில் அவரிடம் இல்லையென்றே சொல்ல வேண்டும். ஆனால் அவர் காரசாரமாக எழுதியதற்கு காரணம் என்ன? அவரே பதில் சொல்லட்டும்:

''இன்று வெளிவரும் புத்தகங்களில் சித்த வைத்தியம் சோதிடம் சிற்றின்பம் பற்றியவை தவிர மற்றவையெல்லாம் தம்மை ஒரு இலக்கிய மைல்கல் என மார் தட்டிக்

கொண்டு வருகின்றன. இப்படிப்பட்டதொரு மயக்க நிலையைப் போக்க, சற்றுக் காரமான கருத்துக்கள் வெளியிடப் படுவது குற்றமல்ல. நல்ல இலக்கியமென்ருல், எத்தனை நந்திகள் வழி மறித்துப் படுத்துக் கொண்டாலும் அவை உரிய ஸ்தானத்தை அடைந்தே தீரும். பனைமரத்தில் ஊசியைச் சொருகிக் கொண்டு சுமந்து நடந்த பரமார்த்த குருவின் சீடர்களைப்போல எத்தனை பேர் சுமந்து வந்தாலும் பரங்கிக்காய் குதிரை முட்டையாகி விடாது. மதிப்புரை எழுதுகிறவனிடம் எதிர்பார்க்க வேண்டியது ஒன்றுதான். நல்ல இலக்கியத்தைக் காணும்பொழுது அதைத் தெரிந்து கொள்ளவும் பரிசயம் செய்து வைக்கவும் அவனிடம் திராணி வேண்டும் அப்படியே, போலியைக் காணும்போது யார் வந்து நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் அது போலி என்று சொல்வதற்கு நெஞ்சழுத்தம் கொண்டிருக்க வேண்டும். அது போதும்''.

புதுமைப்பித்தனின் மதிப்புரையால் எந்தக் கெடுதலுமில்லை என்பதற்கு எத்தனையோ நந்திகள் வழி மறித்தும், இன்று அவரது கதைகள் பேரும் புகழும் பெற்று நாடெங்கும் ஒலிப்பதே நல்ல அத்தாட்சி.

இருக்கட்டும்.

புதுமைப்பித்தன் வேளூர். வெ. கந்தசாமிக் கவிராயராக அவதாரம் எடுத்தது 1944-ம் வருஷம். அதற்கு முன்பும் அவர் ஒன்றிரண்டு பாடல்கள் எழுதியிருக்கிருர். எனினும் தாம், எழுதப்புகும் புதுமுறைப் பாடலுக்காக அவர் தமது புனை பெயரையும் மாற்றிக் கொண்டார். பாட்டுக்காக மட்டும்தான். வேளூர். வெ. கந்தசாமிக் கவிராயர் என்று ஒருவர் எழுதுவதை, அதிலும் மிகவும் புதுமையாக எழுதுவதைக் கண்ட ரசிகர்கள் 'இவர் யார்?' என்று திகைத்தார்கள். சாதாரணமாக நமது நாட்டில் 'பித்தன்', 'சித்தன்', 'பிரியன்' என்ற புனைபெயர்கள்தான் நடமாடுவதுண்டு. ஓ. ஹென்றி போன்று விலாசத்துடன் கூடிய புனைபெயர்கள் புகவில்லை. எனவே புதுமைப்பித்தன் ஊர், விலாசம், பெயர் எல்லாம் அமைந்த ஒரு புதிய புனைபெயரை உண்டாக்கியதால் அவர் யார் என்று

பலருக்கு வெகு நாட்களாகத் தெரியாதிருந்தது. வேலூர். வெ. கந்தசாமிப்பிள்ளை என்ற பெயரில் எழுதிய அவரது முதல் பாட்டு 'ஓடாதீர்!' என்பது இது 'கிராம ஊழியன்' பத்திரிகையில் வெளிவந்தது. பாட்டு வெளிவந்த காலத்துக்கு முன்னர் தான், கு. ப. ரா. காலமாகியிருந்தார். அவரைச் செத்த பிறகு கவனிக்க முனைந்த, நிதி சேர்க்க முனைந்த தமிழர்களின் நிலையைக் கண்டு பாடிய பாட்டு அது என்றுதான் சொல்ல வேண்டும். கு. ப. ரா. செத்துவிட்டார்; அவரது குடும்பத்துக்கு நிதி திரட்டப்பட்டது. எழுத்தாளனைச் சாகவிட்டுக் கௌரவிப்பதைக் கண்டு மனம் புழுங்கினர் புதுமைப் பித்தன்.

இத்தனைக்கும் மேலே
இனி ஒன்று;
ஐயா, நான்
செத்ததற்குப் பின்றால்
நிதிகள் திரட்டாதீர்!
நினைவை விளிம்பு கட்டி
கல்லில் வடித்து
வையாதீர்!
'வானத்து அமரன்
வந்தான் காண்!
வந்தது போல்
போனான் காண்' என்று
புலம்பாதீர்!
அத்தனையும் வேண்டாம்
அடியேனை விட்டுவிடும்!

இது பாட்டின் ஒரு பகுதி. ஆனால், நாம் புதுமைப் பித்தனையும் சாகவிட்டுத்தான் கௌரவிக்கிறோம். அவர் பாட்டு நமக்குப் புத்தி கற்பிக்கவில்லை; எதிர்காலத்திலாவது பலன் அளிக்கட்டும்!

பாட்டின் கருத்து இருக்கட்டும். இந்தப் பாட்டு சிலருக்குப் பாட்டாகவே தோன்றாமல் இருக்கும். இதுவும்

புதுமையின் பித்தம்தானோ என்று கூடக் கேட்கத் தோன்றும். 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல.' வசன கவிதை என்று சில மறுமலர்ச்சியாளர்கள் வறட்டுக் கூச்சல் போட்டுக் கொண்டிருந்த காலத்திலே புதுமைப்பித்தன் தொடங்கி வைத்த புதிய பணி இது. இது வசன கவிதை என்று யாராவது மயங்கினால் அது தவறு. வசன கவிதை என்ற சொல்லே அர்த்தமற்ற சொல். அந்த ஆராய்ச்சி இங்கு வேண்டாம்.

பாட்டுக்குத் தாள லயமும் பாவமும்தான் பிரதானம் என்று உருவத்தைப் பற்றிப் பேசும் இன்றைய இலக்கிய விமர்சகர்கள் கருதுகிறார்கள். இந்தத் தாள லயத்தையும் பாவத்தையும் உருவாக்க எதுகை மோனை இலக்கணங்கள் பேரளவில் பயன்படும். ஆனால் எதுகையும மோனையும் கருத்துக்கோ பாட்டின் கதிக்கோ விலங்கிட்டுத் தடை செய்யக் கூடாது. எனவே, புதுமைப்பித்தன் செய்த காரியம் இதுதான். யாப்பு எதுகைகளில் பாட்டுக்குப் பயன் அளிப் பதைப் பயன்படுத்தி, தடை செய்வதை விலக்கி எழுதினார். இலக்கணம் கவிதை உணர்ச்சியைத் தடை செய்யும்போது, அதை விட்டு விலகியோ, ஏறி விழுந்தோ, பாதை மாற்றியோ, சொல்லவந்த விஷயத்தைக் கொண்டு செல்வதே புதுமைப்பித்தன் கையாண்ட முறை. எனினும் அப்படிச் செய்வதன்மூலம் பாட்டின் தாள லயத்தைச் சிதைத்து விடாமல் பாட்டுக்குப் புதிய லயம் ஒன்றைக் கொடுத்தார். இந்தப் பாணியைப் பற்றி நிதானமாக சிந்தித்துப் பார்த்தால் ரசிகர்களுக்கு இந்த உண்மை புலப்படும். இந்த மாதிரி யான பாட்டுக்கள் வெற்றி பெருது என்று சொல்ல முடியாது. ஏனெனில் புதுமைப்பித்தன் எழுதிய பாடல்களுக்கும் வரவேற்பிருந்தது. இன்று அதே பாணியைத் தீட்டி தீட்டி மெருகேற்றி, புதிய லயங்களை உண்டாக்கிப் பார்த்துவரும் என் பாட்டுக்களுக்கும் வரவேற்பு இருக்கிறது. எனவே இந்தத் துறையில், இன்னும் பழகிப் பழகி, மரபு தவறிய காகரப்பு ஏதேனும் இருந்தால் அதைத் தேய்த்து மழுக்கி மெருகேற்றி, புதிய லய சுகத்தையும், கவிதானுபவத்தையும் உண்டாக்க முடியும் என்பது என் நம்பிக்கை.

புதுமைப்பித்தன் தமது கதைகளில் எப்படி வைரம் பாய்ந்த சொற்களையும் கருத்துக்களையும் கையாண்டாரோ, அதுபோலவே தமது பாடல்களிலும் அபூர்வமான சொல்லாட்சியையும் கருத்துக்களையும் கையாண்டார். 'இணையற்ற இந்தியா' என்பது அவரது பாடல். அதன் இறுதி வரிகள் பின் வருமாறு:

வேதம் படிந்திடுவோம்; வெறுங்கை முழம் போட்டிடுவோம்;
சாதத்துக் காகச் சங்கரனை விற்றிடுவோம்;
அந்தனைக்கும் மேலல்லோ அஹிம்சைக் கதை பேசி
வித்தகனும் காந்தியினை விற்றுப் பிழைக்கின்றோம்!

பாட்டுக்கு விளக்கம் தேவையில்லை. உண்மைதான் இன்றும் கரதலாமலகமாகக் கண்முன் தோன்றுகிறதே!

புதுமைப்பித்தன் தமிழ்க் கவிதைகளில் நன்கு ஊறிப் போனவர். தமிழ் மரபு தெரிந்தவர். எனவே அவரது பாடல்களில் வரும் சொற்பிரயோகங்கள் மிகுந்த சுகத்தோடு, லயத்தோடு ஒலிக்கும்.

''வட்ட முலை மின்னார்
வசமிழந்த காமத்தால்
நீலமணி மாடத்து
நெடியதொரு சாளரத்தைத்
தொட்டுத் தடவி வந்து
தோயும் நிலாப் பிழம்பை
எட்டி, எடுத்து
இடை சுற்றி, சேலையென
ஒல்கி நடப்பதாய் உவமை சொல....''

ஆமாம். கலிங்கத்துப் பரணியின் கடைதிறப்புப் பாடலில் உள்ள 'நிலவைத் துகிலாய் எடுத்துடுக்கும்' உவமையைத் தான் புதுமைப்பித்தன் குறிப்பிடுகிறார். ஆனால், புதுமைப் பித்தனது புதிய முறைக் கவிதையிலும் 'எட்டி, எடுத்து' என்பதை நாம் நிறுத்தி வாசிக்கும்போது, நமக்கு நிலாப் பிழம்பின் தோய்வும், அது தடவித் தடுமாறி வருவதும்,

தாளத்தின் ஸ்தம்பிப்போடு இணைந்து தோன்றவே செய்கிறது என்று சொல்ல வேண்டும்.

இந்த மாதிரியான அம்மானைச் சந்தத்தின் அடிப்படையில் மட்டும் புதுமைப்பித்தன் பாடல்கள் எழுதவில்லை. வெண்பாவிலும் பாடல்கள் எழுதினார். அவர் பாடிய வெண்பாவில் இலக்கணம் இராதுதான்; ஆனால் உயிர் இருந்தது. அதற்கு ஓர் உதாரணம், திருச்சி ரேடியோ நிலையக் கவியரங்கில் அவர் பாடிய பாட்டில் ஒரு வெண்பா:

பண் என்பார்; பாவம் என்பார்; பண்புமர பென்றிடுவார்;
கண்ணைச் சொருகிக் கவிஎன்பார்—அண்ணாந்து
கொட்டாவி விட்டதெலாம் கூறுதமிழ்ப் பாட்டாச்சே!
முட்டாளே இன்னமுமா பாட்டு?

புதுமைப்பித்தன் பாட்டு எழுதுவதில் ஒரு புதிய முறையை, வெற்றிக்கு நம்பிக்கை அளிக்கக் கூடிய முறையை, ஆரம்பித்து வைத்தார் என்பதைத் தவிர, அவர் அதில் பரிபூரண வெற்றியை அடைந்தார் என்று சொல்ல முடியாது. ஆனால் புதுமைப்பித்தன் பரிபூரண வெற்றியும் தன்னிகரில்லாத தனித் தன்மையும் பெற்றது பாட்டில் அல்ல. கதையில் வெற்றியடைந்தார்; அதுபோலவே வசனத்திலும் வெற்றியடைந்தார். 'புதுமைப்பித்தனுவது வசன வெற்றியாவது' என்று அன்று முணுமுணுத்தவர்கள் இன்றும் முணுமுணுக்கக் கூடும். 'அவர் என்ன புரியாத தமிழை அல்லவா எழுதினார்?' என்று சிலர் கூறுகிறார்கள். 'புரியாத தமி'ழுக்கு புதுமைப்பித்தனிலிருந்து ஒரு உதாரணம்:

"(பிள்ளையாரின் மீதிருந்த) தனித்தனி நபரின் பக்திப் பெருக்கு டைபாய்ட் வியாதியஸ்தனின் டெம்பரேச்சர் படம் மாதிரி அன்றைய வியாபார ஓட்டத்தைப் பொறுத்ததாக இருந்தாலும், பொதுவாகச் சங்கத்தினரின் முழு ஆதரவு இருந்ததால் விநாயகர் பாடு சராசரி பக்தி விகிதத்துக்கு மோசமாகி விடவில்லை. அதிகாலை ஏழு மணிக்கு

அந்தப் பகுதியில் நோக்கும் திசையெல்லாம் நடமாடும் கோயில்கள்தாம். பிள்ளையார் கோயிலின் நைவேத்திய விசேஷங்கள் சிறிய சிப்பந்திகளிடையே பக்திக் கவர்ச்சிக்குத் தூண்டுதலாக இருந்தது'' ('நியாயந்தான்'— 'காஞ்சனை' தொகுதி)

எதையுமே மேலோட்டமாகப் படிக்கிறவர்களுக்கு, புதுமைப்பித்தன் இந்த நாலைந்து வரிகளுக்குள் அவரது 'பின்னல் முறையின்' மூலம் கூறியுள்ள விஷயங்கள் புரியாதுதான். ஆனால் இந்த வரிகளுக்குள் அடங்கியுள்ள நையாண்டி, தெய்வ பக்தியை வியாபாரம் பேசும் தரகுக் குணம், தெய்வத்திடம் சாதாரண நண்பர்கள் எதிர்பார்க்கும் லோகாயத நலன் எல்லாவற்றையும் உள்ளடக்கியிருப்பதைக் காண முடிந்தவர்களுக்கு, இது ஒன்றும் புரியாத தமிழ் அல்ல. சொல்லப்போனால் பக்கம் பக்கமாக எழுதியும் சொல்ல வந்த விஷயத்தைச் சொல்ல முடியாமல் தவிக்கும் வார்த்தையாண்டிகளைப்போல் அல்லாமல், அல்லது நீர்த்துப்போன தமிழ் வசன கர்த்தாக்களைப் போல் அல்லாமல், எழுத்து நடையில் லகுவில் சிக்காது நழுவும் விஷயங்களையும் இழுத்துப் பிடித்துக் கொண்டு வந்து அற்புதமான சொல்லாட்சியினால் தமது வசன கதிக்குள் சிறைப்படுத்தும் அசுரசாதனை புதுமைப்பித்தன் ஒருவரிடம்தான் இருக்கிறது.

தமிழில் வசன இலக்கியம் உண்டு. ஆனால் தமிழில் தோன்றிய வசன இலக்கியமெல்லாம் பொருளை வைத்துத் தான் பிழைத்து உயிர் வாழ்ந்தனவேயன்றி, வசனத்தின் வலு எந்த விதத்திலும் பொருளுக்கு உதவி விடவில்லை. வ. வெ. சு. அய்யர் ஒருவர்தான் தமிழில் பிறமொழிப் பதப்பிரயோகங்களால் ஒரு காம்பீர்யத்தை உண்டாக்கினார். ஆனால் அதுவே அமிதப் பிரயோகம். பாரதியார்கூட இப்படித்தான். ஞான ரதத்தில் வரும் வர்ணனைகள், சிட்டுக்குருவி வர்ணனை முதலியவற்றைச் சிலர் பாரதியின் வசனப் பெருமைக்கு எடுத்துக் காட்டாகக் கூறினாலும், தமது கவிதையில் எப்படிப்பட்ட அற்புதத்தைச் சாதித்தாரோ, அந்த மாதிரியான அசுரத்தனமான புதுமையையோ, மந்திரச் சொல்லின் சுகத்தையோ பாரதியார் தமது வசனத்தில்

சாதித்துவிடவில்லை. பாரதியின் வசனம் சர்வ சாதாரண மானது. எளிய நடை, புரியும் நடை என்பதைச் சிலர் வசனத்துக்கு எடுத்துக் காட்டாகச் சொல்கிறார்கள். எளியநடை இருக்கலாம். புரியும் நடை இருக்கலாம். இருந்தாலும், தமிழில் எழுதி வந்தவர்கள் அனைவரும். காதலாயினும் கையுறு நிலையாயினும் ஒரே மாதிரி நடையில், ஒரே மாதிரி வேகத்துடன், பாவத்துடன்தான் எழுதினார்கள். இதனால் எழுதுகின்ற விஷயம் புரியுமே தவிர, அந்த எழுத்து நெஞ்சில் நிலைப்பதில்லை. சுருங்கச் சொன்னால், எந்த விஷயத்தைப் பற்றி எழுதினாலும், ஒரே முறையில், உபயோகித்த வார்த்தைகளையே உபயோகித்து, வசன கதியை மலினப்படுத்தி, வார்த்தையின் வலுவைக் குறைத்தார்கள். ஆனால், புதுமைப்பித்தன் தோன்றுகிறவரை வசனத்துக்கென்று ஒரு தனிமதிப்பு ஏற்படவில்லை. புதுமைப்பித்தன் நல்ல கதைகளை எழுதினார் என்றால் அவரது கதைகளை நல்லவையாக்கியவை அவரது புதுமை நோக்கும் கற்பனையும் மட்டும் அல்ல; அவரது வசனமும் கூடத்தான். வசனத்திலும் கவிதையில் உள்ளதைப் போல் தாள லயம் உண்டு, உணர்ச்சி உண்டு என்பதைப் புதுமைப்பித்தனது வசனம்தான் நன்றாக, எடுப்பாகக் காட்டியது என்று கூறவேண்டும். அவரது கதைகளில் வசனம் ஒரே சுருதியில் பேசிக்கொண்டிருக்காது. கதையின் சமய சந்தர்ப்பம், பாத்திரம் முதலியவற்றுக்குத் தக்கவாறு சுருதி மாறி மாறிப் பேசும்.

## சில உதாரணங்கள்

1. 'இப்படிப்பட்ட விஷயங்களில் சுப்புப் பிள்ளையின் தீர்ப்புக்கு அப்பீலே கிடையாது. ஏனெனில் பெரும்பாலும் அழகிய நம்பியாபுர வாசிகளில் பலர் அவரிடமே குட்டுப்பட்டுச் சுவடிப் பாடம் கற்றிருக்கின்றனர். பலவேசமும் இதற்கு விதிவிலக்கல்லன். இப்பொழுது அவன் கோணல் மாணலாகக் கையெழுத்துப் போடுவதெல்லாம் அவர் புண்ணியத்தில் தான்.' [நாசகாரக் கும்பல்]

2. 'ஆனால் சூட்சும உடலின் இயற்கையால் அடிக்கடி அங்கு உந்தித் தள்ளப்படுவான். சக்திகள் பிரளயம்

போலக் கோஷித்து உருண்டு புரண்டு சிறிய வித்துப்போல் நடு மையத்தில் கிடக்கும் ஜடத்திற்கு உயிர் அணுக்களை மிகுந்த வேகத்தில் தள்ளும். அவ்விடத்திலே சக்தி அலைகள், நினைவு பிறந்து மடியும் கால எல்லைக்குள் இடை வழித் தேகத்தைக் குழப்பி நசுக்கிப் புதிய சக்திகளை அவனது சூட்சும தேகத்தில் ஊட்டி உள்ளே பூமியை நோக்கித் தள்ளிவிடும். புதிய சக்தி ஊட்டப்பட்ட அவனது சரீரம், ஜடதாதுக்கள் பாசி போல் உற்பத்தியாகி உரம்பெற்று, கீழ்நோக்கி இறங்கும் இடைச் சஞ்சிகளில் நின்று செக்கச்செவேலென்று எங்கும் பரந்து, நினைவின் எல்லைக்கோடாகக் கிடக்கும் கிரககோள்களின் வானப் பாதைகளை நோக்கும். 'அவனது உருவம் சூட்சும உருவம்............' [பிரம்ம ராக்ஷஸ்]

3. 'சற்று உள்ளே ராஜ மாளிகை. கல்லில் சமைந்து தமிழனின் மிடுக்கை, தமிழனின் வீரத்தை, தமிழனின் இலட்சியத்தை ஒருங்கே எடுத்துக் காட்டுகிறது. எங்கு பார்த்தாலும் ஏகாதிபத்தியச் செருக்கு. சாம்ராஜ்யத்தின் ஹிருதயமின்மை அழகுருவத்தில் மனிதனை மலைக்க வைக்கிறது. மிருகத்தன்மை - அதற்கு வீரம் என்று மரியாதையாகச் சொல்வார்கள் - அழகுடன் கைகோத்து உலாவுகிறது. உள்ளிருந்து சங்கும் முரசும் ஏகமாக முழங்குகின்றன.'

[கனவுப் பெண்]

4. 'அதோ மூலையில் சுவரின் அருகில் பார்த்தீர்களா? சிருஷ்டித் தொழில் நடக்கிறது. மனிதர்களா, மிருகங்களா? நீங்கள் போட்டிருக்கிறீர்களே, பாப்லின் ஷர்ட்டு உங்கள் ஷெல்பிரேம் கண்ணாடி!—எல்லாம் அவர்கள் வயிற்றில் இருக்க வேண்டியதைத் திருடியதுதான். ரொம்ப ஜம்பமாக, நாஸிக்காகக் கண்ணைமூட வேண்டாம். எல்லாம் அந்த வயிற்றுக்காகத்தான்.' [கவந்தனும் காமனும்]

மேற்காட்டிய நாலு மேற்கோள்களையும் படித்துப் பார்த்தால், ஒவ்வொன்றும் தனித் தனி சுருதியில் பேசுவது தெரியும். திருநெல்வேலிப் பண்பாட்டோடு ஊறிப்போன மரபு, சூட்சும தேகத்தை வருணித்துப் பயானக ரஸத்தை உண்டாக்கும் பிரம்ம ராக்ஷஸின் அடிமுடி காணாத அசுர

கதி, சோழ சாம்ராஜ்யத்தின் மிடுக்கைக் கோடிட்டுக் காட்டும் அரண்மனையின் ஆசார வாசல் வருணனை, நாகரிக யுகத்தின் கசப்புக் குரல்—இந்த நான்கையும் வெவ்வேறு சுருதியில், அதாவது கதையின் கருந்துக்கு இசைந்த சுருதியில், நாம் கேட்பது புலப்படும். இந்த மாதிரியான ரசபாவக் கலவைகளை வேறு எந்த வசன கர்த்தாவும் இதுவரை தமிழில் கொண்டுவர வில்லை.

எனது நண்பரும் அரிய இலக்கிய ரசிகரும் எழுத்தாளரு மான கு. அழகிரிசாமி புதுமைப்பித்தனைப் பற்றிப் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

"இருபதாம் நூற்றாண்டில் தமிழ்க் கவிதைக்குப் புதுமையும் புத்துயிரும் கொடுத்தவர் பாரதி; தமிழ் வசனத்துக்குப் புதுமை யும் புத்துயிரும் கொடுத்தவர் புதுமைப்பித்தன். ஆனால் பாரதிக்குமுன் தமிழில் மிகச் சிறந்த கவிச் செல்வங்கள் இருந் தன; புதுமைப்பித்தனுக்குமுன் மிகச் சிறந்த வசனச் செல்வங் கள் இருந்தன என்று சொல்ல முடியாது. புதுமைப்பித்தன் தமிழ் நாட்டு வசன இலக்கியத்தின் சொத்து. அவர் வசன இலக்கியத்தின் மன்னர்."

இந்த அபிப்பிராயத்தை நான் நாவலித்து வரவேற்ப தோடு, புதுமைப்பித்தனின் கதையிலேயே ஆழ்ந்துவிட்ட ரசிகர்கள், இனிமேல் அவரது வசனத்தையும் கவனித்துப் பார்க்கவேண்டும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

வசன இலக்கியத்தின் மன்னராக விளங்கிய புதுமைப் பித்தன் சிறு கதை இலக்கியத்திலும் தனிக் காட்டு ராஜாவா கத்தான் விளங்கினர்; அந்தப் பெருமையை அவர் நிலை நாட் டியும் விட்டார்.

சில வருஷங்களுக்கு முன்னால் ஒருவர் புதுமைப்பித்தனி டம் வந்து, "ஸார். தமிழ் நாட்டின் சிறந்த சிறு கதைகளாகப் பன்னிரண்டு கதைகளைப் பொறுக்கி ஆங்கிலத்திலும் ஹிந்தியி லும் வெளியிடலாம் என்று எண்ணம். நம நாட்டு மேதைகள் வெளிநாட்டிலும் பிரபலமடைய வேண்டும் அல்லவா? ஆகவே அந்தப் பன்னிரண்டு கதை

களையும் பொறுக்கித் தரவேண்டியது உங்கள் பொறுப்பு'' என்று கேட்டுக் கொண்டார்.

அதற்குப் புதுமைப்பித்தன் சொன்ன பதில் இதுதான்: ''சிறந்த சிறுகதைகளைப் பொறுக்கி எடுக்கவா? என்னுடைய கதைகள் பன்னிரண்டைத்தான் பொறுக்க வேண்டும்!''

வந்த ஆசாமிக்கு முகம் கறுத்தது. கொஞ்சம்கூட அடக்க மில்லாமல், 'அஞ்சுவது அஞ்சாமல்' துணிந்து சொல்கிருரே என்று நினைத்தாரோ என்னவோ? சிறிது நேரம் வேறு எதை யெதையோ பேசிக்கொண்டிருந்து விட்டுப் போய்விட்டார்,

புதுமைப்பித்தனின் இந்தப் பதில் அவரை மட்டும் திடுக் கிட வைக்காது. பல எழுத்தாளர்களையும் உங்களையுமே திடுக் கிட வைக்கலாம். ஆனால் தம்மிடமுள்ள நேர்மையான திறமையை நேரடியாகச் சொல்வதற்குப் புதுமைப்பித்தன் எப்போதும் கூசமாட்டார்.

தமிழில் புதுமைப்பித்தன் மட்டும் கதைகள் எழுதவில்லை. எத்தனையோ பேர்கள் எழுதித்தான் வருகிருர்கள். ஆனால், மற்றவர்களின் கதைகளில் பெரும்பாலானவை இல்லாத ஊரின் இலுப்பைப்பூச் சரக்குகள்தாம். புதுமைப்பித்தனே அப்படியல்ல. அவரது கதைகளோ பிறர் எழுதிய கதைகளை விடப் பன்மடங்கு உயர்ந்து, எவரெஸ்ட் சிகரம்போல் நிமிர்ந்து நிற்கின்றன. மேலும், அவருக்கே உரிய தனித் தன்மை அவரை எழுத்தாளர்கள் கூட்டத்தின் மத்தியில் தனித்தொரு தீபஸ்தம்பம் மாதிரி தூக்கி நிறுத்தி விட்டது.

கதைகள் மட்டுமே எழுதி ஒரு எழுத்தாளன் சாகவரம் பெற்றுவிட முடியுமா என்ற சந்தேகம் சிலருக்கு அர்த்தமற்று எழுவதுண்டு. ''புதுமைப்பித்தன் சிறுகதைகள்தானே எழுதி யிருக்கிருர். அவருடைய மகாமேதையை உணர்ந்துகொள்ள அவரை ஒரு நாவல் எழுதச் சொல்லுங்கள்'' என்று ஒரு எழுத்தாள நண்பர் என்னிடம் கூறினர். புதுமைப்பித்தன் நாவல் எழுதவும் முனைந்ததுண்டு. 'அன்னையிட்ட தீ' என்று

ஒரு பெரிய நாவல் எழுதத் திட்டம் போட்டு, ஓரளவு எழுதி வைத்து விட்டுப் போயிருக்கிருர்.

ஆனல் நாவல் எழுதாத காரணத்தால் மட்டும் ஒரு கதாசிரியனின் மேதை வெளிப்படவில்லை என்று நினைப்பது தவறு. உலக இலக்கியத்தின் சிறுகதை மன்னர்களாகக் கருதப்படும் ஆண்டன் செகாவ், மாப்பஸான் முதலியவர்கள் சிறுகதைகளை எழுதியே தங்கள் பெயரை நிலைநாட்டிக் கொண்டவர்கள். இவர்கள் இருவரும் நீண்ட சிறுகதைகளும், சில நாவல்களும் எழுதியிருந்தபோதிலும், இவர்களுக்குப் பெயர் வந்தது எல்லாம் சிறுகதைகளின் மூலமாகத்தான். புதுமைப்பித்தன் கதைகள் மட்டும் எழுதவில்லை. கவிதை, கட்டுரை முதலியன வெல்லாம் எழுதினர். எனினும் அவருக்குப் பெயரும் பிரபலமும் கிட்டியது அவரது சிறுகதைகளின் மூலமாகத்தான். 'ஆலின் சிறுபழத் தொருவிதை' என்று கூறிவைத்த புலவனின் சூத்திரம் புதுமைப்பித்தனின் கதைகளுக்கும் பொருந்தும். அவருடைய கதைகள் அண்டத்தை அளக்கும் சக்தி பெற்றவை. 'மடல் பெரிது தாழை' யென்ருலும், மகிழம்பூவே இனிமையுடையதல்லவா? பக்கம் பக்கமாக எழுதிக் குவித்து, பைண்டு வால்யூம் நாவல்களை வெளியிட்டால் மட்டும் போதுமா?

ஷேக்ஸ்பியரையும் தாந்தேயையும் பற்றி ஒரு ஆங்கில விமர்சகர் ''ஷேக்ஸ்பியர் வாழ்க்கையின் அகலத்தை அளந்தான்; தாந்தே ஆழத்தை அளந்தான்'' என்று குறிப்பிடுகிருர். புதுமைப்பித்தனுக்கும் மற்ற எழுத்தாளர்களுக்கும் உள்ள வித்தியாசத்தையும், இது மாதிரியே சொல்லக் கூடும். புதுமைப்பித்தன் வாழ்க்கையின் ஆழத்தை அளந்த ஆசிரியர்.

புதுமைப்பித்தனின் கதைகள் ஒவ்வொன்றும் ஒரு பிரச்னையைப் பற்றியதாகவே இருக்கும். அவருடைய கதைகள் பொழுது போக்குக்கான கதைகள் அல்ல. அவரது கதைகள் சமூகத்தை நோக்கிப் பல்வேறு ஆணித்தரமான கேள்விக் குறிகளை அடுக்குகின்றன; அழுகி நாற்றமெடுத்துப்போன சமூகத்தின் ஊழல்களைக் கீறிப்பிளந்து காட்டுகின்றன. வாழ்க்கையின் அன்ருடப் பாட்டின் அடிக்

குரல் அவரது கதைகளிலே எதிரொலித்தது. சொப்பனு வஸ்தையிலே சிக்கி, கனவு காணும் அபூதக் கலைஞனல்ல புதுமைப்பித்தன்.

புதுமைப்பித்தன் வாழ்க்கையின் குரூர வசீகரங்களைக் கண்டு ஒப்பாரி வைக்கவில்லை. அவற்றைக் கண்டு சிரிக்கும்படி நம்மைப் பழக்கினுர்; அவரும் சிரித்தார். ஆனுல் வாழ்க்கையின் யதார்த்தத்துவத்தை நேருக்கு நேராகக் கண்டு சொன்ன புதுமைப்பித்தன் அந்த யதார்த்தத்துவத்தை எதிர் கால நம்பிக்கைப்பாதையை நோக்கித் திருப்பி விடவில்லை. சமூகத்தைப் பார்த்து அவர் கேள்விக் குறிகளை அடுக்கினுர். ஆனுல் அவற்றுக்கு அவர் விடை காண முடியவில்லை. அன்ருட வாழ்க்கையின் வேதனைக் குரலை மறந்து சிரிப்ப தற்குக் கதை சொன்னுரே யொழிய வேதனையை நீக்கும் மார்க்கத்தைக் கூறவில்லை; காணவில்லை. மக்களது கஷ்டங் களை உணர்ந்து, அவர்கள் படும் கொடுமையைக் கண்டு அவர் சீறியெழுந்தார்; அந்த வாழ்க்கையின் கசப்பைக் கண்டு முகம் சுழித்தார். ஆனுல் அந்தக் கொடுமையை, கசப்பைப் போக்க அவர் வழி காணவில்லை. மனித சமுதாயத்தின்மீது நிர்ப்பந்தவசமாகத் திணிக்கப்பட்ட கசப்பைக் கண்டு, மனித சமுதாயத்திடமிருந்தே அவர் விலகி நிற்க முயன்ருர். அப்படி நிற்காமல், அவருக்கு இருந்த யதார்த்தத்துவ சக்திக்கும், உருவ அமைதிக்கும், ஆழ்ந்த கண்ணேட்டத்துக்கும் அவர் மக்களிட மிருந்து எட்டி விலகி நின்று கதை சொல்லாமல், மக்களோடு ஒட்டி நின்றே தமது இலக்கியங்களைச் சிருஷ்டித்திருந்தாரா னுல், மாக்ஸிம் கார்க்கியைப்போல் சிறந்த எழுத்தாளராக மட்டுமின்றி, சிறந்த வழிகாட்டியாகவும் அவர் விளங்கியிருக்க முடியும். ஆனுல் அதில் அவர் தவறிவிட்டார் என்றே கூற வேண்டும்.

எனினும் புதுமைப்பித்தன் தமிழ் இலக்கியத்திலேயே ஒரு வைரம் பாய்ந்த யதார்த்தவாதியாகத் திகழ்கிருர். இல்லாததைக் கனவு கண்டு, இருப்பதாகக் கதை கட்டி வாழ்ந்த சமூகத்திலே, அவர் ஒருவர்தான் இருட்டிலே இருந்ததை - சமூகத்தின் யதார்த்த நிலையை - ஸ்பஷ்டமாக

எடுத்துக் கூறினர். தேயிலைத் தோட்டத்துக்குச் சென்று வேலை செய்து பரங்கி நோயைச் சம்பாதித்துக் கொண்டு ஊர் திரும்பும் பறைச்சி மருதி, "உன்னாலே என் உசிரெத்தானே எடுத்துக்கிட்டுப் போவ முடியும்?....யோசிச்சிப் பாரு....ஒண்ணெ வேறயா மாத்த முடியும். உன்னாலே அழிக்க முடியுமா?" என்று எமனைப் பார்த்துக் கேட்கும் வெள்ளைக் கோயில் கிழவி, "என்னை என்ன பிச்சைக்காரின்னு நினைச்சே?" என்று கேட்கும் கவந்தன் வாய்ப்பட்ட விபசாரி, "சார், கைக்குட்டை கீழே விழுந்துவிட்டது" என்று கூறும் யந்திர மனிதனான ஹோட்டல் செர்வர், "அப்பாவுக்கு ஒண்ணுமே தெரியாது. இதைத் தின்னுபாரு. இனிச்சுக் கிடக்கும்!" என்று வேதாந்த விசாரத்துக்கு அடிகொடுக்கும் கந்தசாமிப் பிள்ளையின் புதல்வியான சிறுமி, "சாபத்துக்குத்தானே விமோசனம்? பாபத்துக்கு உண்டா?" என்று தன்னையே கேட்டுக்கொண்டு மீண்டும் கல்லாகிப் போகும் அகல்யை—இத்தியாதி கதா பாத்திரங்களால்தான் புதுமைப்பித்தன் சிறுகதை உலகத்தின் மன்னராக முடிந்தது.

நானறிந்தவரையில், 'தமிழ் நாட்டில் மட்டுமல்ல; இந்தியாவில் மட்டுமல்ல; ஆசியாக் கண்டத்திலேயே புதுமைப் பித்தனுக்கு ஈடான எந்தச் சிறுகதை ஆசிரியனும் இல்லை' என்றே சொல்லத் தோன்றுகிறது.

புதுமைப்பித்தன் யார்?

இலக்கியத் திருடனின் பேய்க் கனவு; புத்தகாசிரியர்களுக்கு ஒட்டக்கூத்தன்; வலுவற்றுக் கிடந்த தமிழ் வசனத்துக்கு வாலிபம் தந்த சஞ்சீவி; உலக இலக்கிய சத் சங்கத்திலே தாமாகவே இடம் பிடித்துக்கொண்ட மேதை; சிறுகதை இலக்கியத்தின் ஆசிய ஜோதி; இளம் எழுத்தாளர்களின் லட்சியம்; யதார்த்தவாதிகளின் முன்னோடி; தமிழ நாட்டில் எழுதிப் பிழைப்பது என்பது எத்தனை அபாயகரமானது என்பதைத் தமது உயிரையே பணயம் வைத்துக் காட்டிச் சென்ற உதாரணம்—இவர்தான் புதுமைப்பித்தன்!

—o—

அனுபந்தம்

# புதுமைப்பித்தன்

## வாழ்வும் எழுத்தும்

---

### ஒரு பேட்டி

---

பேட்டி அளித்தவர் : ரகுநாதன்

பேட்டி கண்டவர் : சுந்தர ராமசாமி

# அனுபந்தம் பற்றி

அமரராகி விட்ட தலைசிறந்த தமிழ் எழுத்தாளர்களின் வாழ்வையும் பணியையும் பற்றிய நினைவுக் குறிப்புக்களைச் சேகரித்துச் சேமித்து வைக்கும் நல்லதொரு பணியைத் திருச்சி வானொலி நிலையத்தார் ஆற்றி வருகின்றனர். அத்தகைய எழுத்தாளர்களின் இலக்கியப் பணியை நன்கறிந்துள்ளதோடு அவர்களை நேரில் அறிந்து நெருங்கிப் பழகும் வாய்ப்பினைப் பெற்ற எழுத்தாளர்களைத் தக்க இலக்கிய அன்பர்களையும் எழுத்தாளர்களையும் கொண்டு பேட்டி காணச் செய்து, அவர்கள் தமது வாய்மொழியாகக் கூறும் நினைவுக் குறிப்புக்களை வானொலி நிலையத்தார் ஒலிப்பதிவு செய்து வருகின்றனர். இவ்வாறு பதிவு செய்யப்படும் பேட்டிகளுக்குக் கால வரம்பு ஏதும் இல்லை. பேட்டி எவ்வளவு நேரம் நீடித்தாலும், அதனை முழுவதும் பதிவு செய்து கொள்கின்றனர்.

இவ்வாறு பதிவு செய்யும் ஒலிப்பதிவைச் சுருக்கித் தொகுத்து, அமரராகி விட்ட குறிப்பிட்ட எழுத்தாளரின் நினைவு நாளை ஒட்டி ஓர் இலக்கிய நிகழ்ச்சியில் ஒலிபரப்பிய பின்னர், பதிவு செய்யப்பட்ட பேட்டி முழுவதன் ஒலிப்பதிவையும் வருங்காலத் தலைமுறையினருக்காக, வானொலியின் ஆவணக் காப்பகத்தில் பத்திரப்படுத்தி வைத்து வருகின்றனர்.

''இலக்கியச் சிந்தனைகள்'' என்ற தலைப்பின்கீழ் வானொலி நிலையத்தார் பதிவு செய்து வரும் இந்த வரிசையில் புதுமைப்பித்தனைப் பற்றிய எனது நினைவுகளை, நாடறிந்த எழுத்தாளரும் எனது நண்பருமான சுந்தர ராமசாமி 4-3-1978 அன்று திருச்சி வானொலி நிலையத்தில் கேள்விகள் கேட்டுப் பெற்ற பேட்டியே இந்த அனுபந்தம். சுமார் இரண்டு மணி நேரம் நடந்த இந்தப் பேட்டியின்போது அவர் கேட்ட கேள்விகள் அவற்றுக்கு நான் அளித்த பதில்கள் அனைத்தும் இதில் முழுமையாக அடங்கியுள்ளன. இந்தப் பேட்டியின் முக்கால் மணி நேரச் சுருக்கம் புதுமைப்பித்தனின் முப்பதாவது நினைவு நாளை ஒட்டி, 25-6-1978 அன்று இலக்கியச் சிந்தனை கள்'' என்ற தலைப்பில் திருச்சி வானொலி நிலையத்திலிருந்து ஒலி பரப்பப்பட்டது.

புதுமைப்பித்தனின் வாழ்க்கை வரலாற்றைப் படித்து முடித்து விட்டு, இந்த அனுபந்தத்தினுள் புகும்போது இதில் சிற்சில விஷயங்கள் வாசகர்களுக்குக் கூறியது கூறலாகப்படும். ஆயினும் அவையும் விளக்கமான புதிய தகவல்களோடு கூறப்பட்டிருப்பதை அவர்கள் காண முடியும். மேலும், புதுமைப்பித்தன் வரலாற்று நூலில் கூறப்படாத பல புதிய தகவல்களும், விவரங்களும், மதிப்பீடுகளும் இந்த பேட்டியில் இடம் பெற்றுள்ளன. எனவே புதுமைப்பித்தனைப் பற்றி மேலும் அறிந்து கொள்ள விரும்பும் வாசக நேயர்களுக்கு இந்தப் பேட்டியும் விருந்தாகவே அமையும் என்று கருது கிறேன்.

ரகுநாதன்

# ஒரு பேட்டி

### சுந்தர ராமசாமி:

அன்பார்ந்த நண்பர் ரகுநாதன் அவர்களே, வணக்கம். புதுமைப்பித்தனைக் குறித்தும் அவரது இலக்கியங்கள் குறித்தும் உங்களைப் பேட்டி காண நேர்ந்ததில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். புதுமைப்பித்தனின் இலக்கியத்தின்மீது நாம் கொண்ட ஈடுபாடுதான் நம் இருவரையும் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் இணைத்தது என்று எண்ணுகிறேன். சில வருடங்களுக்குப் பின்னர் இன்று மீண்டும் புதுமைப்பித்தனே நம்மைச் சந்திக்க வைத்திருக்கிறார். இது ஒரு நல்ல Coincidence இல்லையா?

### ரகுநாதன்:

வணக்கம், நண்பர் சுந்தரராமசாமி அவர்களே. புதுமைப்பித்தனைப் பற்றி நாம் உரையாட நேர்ந்தது நல்ல Coincidence தான். ஆனாலும் இது ஒன்றும் Strange Coincidence அல்ல. நாம் இருவரும் இலக்கியத் துறையில் இன்று எப்படி எப்படி வளர்ந்திருந்தாலும், ஆரம்பத்தில் இருவருமே புதுமைப்பித்தனை அடியொட்டி வளர்ந்தவர்கள்தான் என்று எண்ணுகிறேன். இருபத்தெட்டு ஆண்டுகளுக்குமுன் நீங்கள் புதுமைப்பித்தன் நினைவு மலரை வெளியிட்டீர்கள். அப்போது நமக்குள் கடிதத் தொடர்பு ஏற்பட்டது. பின்னர் திருநெல்வேலியில் நடந்த புதுமைப்பித்தன் நினைவு விழாவில் கலந்து கொள்ள வந்தீர்கள். நேர்முகமாக அறிமுகமானோம். அதன் பின் புதுமைப்பித்தன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் நீங்கள்

முதற் பரிசு பெற்றீர்கள். அதன்பின் நமக்குள் நெருக்கம் ஏற்பட்டது. அன்றும் புதுமைப்பித்தன்தான் தோன்ருத்துணை யாக இருந்து நம்மை ஒன்று கூட்டினூர். இன்றும் அவர்தான் தோன்ருத் துணையாக இருந்து நம்மைச் சந்திக்க வைத்திருக் கிருர். மகிழ்ச்சிக்குரிய விஷயம்தான்.

கேள்வி:

புதுமைப்பித்தனை நீங்கள் எங்கு எந்த வருடம் சந்தித் தீர்கள்? அந்த முதல் சந்திப்பு பற்றியும் அதன் பின்னணி பற்றியும் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

பதில்:

புதுமைப்பித்தனை நான் முதன் முதலில் பார்த்த சமயம் வேறு. சந்தித்த சந்தர்ப்பம் வேறு. 1943ல் தான் நான் அவரை முதன் முதலில் பார்த்தேன். அது நான் அரசியல் ஈடுபாட்டின் காரணமாகச் சில நாட்கள் சிறைவாசம் அனுபவித்துவிட்டு, கல்லூரிப் படிப்புக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிட்டு, இலக்கியப் பயிற்சியிலும் முயற்சியிலும் ஈடுபட்டிருந்த காலம். அந்நாளில் கதை எழுதும் கலை விஷயத்தில் புதுமைப்பித்தனே என்னை முழுக்க முழுக்க ஆட்கொண்டிருந்தார். எனவே 'புதுமைப் பித்தனின் கதைகள்' என்ற தலைப்பில் புதுமைப்பித்தனே நெல்லை இந்துக் கல்லூரியில் பேசுகிருர் என்று தெரிந்து கூட்டத்துக்குப் போனேன். பேச்சைக் கேட்டேன். அதுதான் அவரை முதன் முதலில் பார்த்த சந்தர்ப்பம்.

ஆனாலும் அப்போது அவரைச் சந்தித்துப் பேச எனக்கு வாய்ப்பில்லாமல் போய்விட்டது. இதன்பின் ஓராண்டு கழித்து அவரைச் சென்னையில்தான் சந்தித்தேன். இங்கு ஒரு விஷ யத்தை குறிப்பிட வேண்டும். 1943ல் புதுமைப்பித்தன் நெல்லைக்கு வந்திருந்த சமயம் பேராசிரியர் அ. சீனிவாச ராகவன் வீட்டில், 'என்ன சொ. வி., உங்கள் வழியில் கதை எழுதும் என் மாணவன் ஒருவன் இருக்கிருன்' என்று பேராசி ரியர் புதுமைப்பித்தனிடம் கூற, அங்கு உடனிருந்த, இப் போது சென்னை வானொலி நிலையத்தின் டைரக்டரான நண்பர்

துறைவன், அந்தச் சமயத்தில் பத்திரிகையில் வெளிவந்திருந்த 'பிரிவுபசாரம்' என்ற எனது கதையைப் புதுமைப்பித்தனிடம் வாசித்துக் காட்டியிருக்கிறார். அந்தக் கதை புதுமைப்பித்த னுக்குப் பிடித்து விட்டது. எனவே 'யார் இந்த ரகுநாதன்?' என்று கேட்டு விட்டு என்னைச் சந்திக்க விரும்பியிருக்கிறார். எனினும் எங்களுக்குள் சந்திப்பு வாய்க்கவில்லை. இதன்பின் புதுமைப்பித்தன் 'தினசரி' பத்திரிகையில் காலஞ் சென்ற ஆ. முத்துசிவன் எழுதிய 'அசோக வனம்' என்ற புத்தகத்தை மதிப்புரை என்ற பெயரால் வரம்பின்றித் தாக்கி எழுதியிருந் தார். முத்துசிவன் எனக்கும் நண்பர்; புதுமைப்பித்தனுக்கும் பால்ய நண்பர். அந்த மதிப்புரைக்கு மறுப்பு எழுதவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. எனவே புதுமைப்பித்தன் பாணியிலேயே நானும் ஒரு மறுப்பு எழுதித் தினசரிக்கு அனுப்பி வைத்தேன். மறுப்பு புதுமைப்பித்தன் கையில் போய்ச் சேர்ந்தது. ஆனால் மறுப்பு வெளியிடப்படவில்லை. இதன்பின் நான் சென்னை சென்று தினமணி காரியாலயத் தின் பிரசுரப் பிரிவில் முதுபெரும் எழுத்தாளர் பி. ஸ்ரீ. ஆசார் யாவுடன் உதவியாசிரியராகப் பணியாற்றி வந்தேன். புதுமைப்பித்தன் ஆசார்யாவைப் பார்க்க அங்கு ஒருநாள் வந் தார். ஆசார்யா என்னை அறிமுகப்படுத்திக் குலமுறை கிளத் தியவுடன், புதுமைப்பித்தன் பேராசிரியர் சீனிவாசராகவன் வீட்டில் கேட்ட என் கதையையும் நினைவு கூர்ந்தார். இரண்டையும் எழுதியது நான்தான் என்று தெரிந்ததும் "நீதானா அது? அப்போ நீ நம்ப ஆளு. உன்னைத்தான் இத்தனை நாளாய்த் தேடிக் கொண்டிருந்தேன்" என்று குஷியாகப் பேசத் தொடங்கி விட்டார். எங்கள் முதல் சந்திப்பு இப்படித்தான் தொடங்கியது.

கேள்வி:

அவரைச் சந்திக்கும் முன்பே அவரது படைப்புக்களில் உங்களுக்குப் பரிச்சயம் இருந்தது என்பது என் எண்ணம். இது அவரைப் பற்றி சில கற்பனைகளை உங்கள் மனத்தில் உருவாக்கியிருக்கக் கூடும். முதல் சந்திப்பு நிகழ்ந்தபோது

உங்களுக்கு ஏற்பட்ட உணர்வுகள் என்ன? ஏமாற்றமா? கற்பனைக்கு அநுசரணையாகத்தான் நிஜக்கோலமும் இருந்ததா?

பதில்:

அவரைப் பார்ப்பதற்கும் முன்பே அவரது படைப்புக்கள் அனைத்தையும் நன்கு படித்திருக்கத்தான் செய்தேன். மேலும் அவரை நேரில் நன்கு அறிந்திருந்த எனது கல்லூரி ஆசிரியர்கள் பேராசிரியர் சீனிவாசராகவன், வித்வான் அருணசலக் கவுண்டர், மற்றும் நண்பர்கள் முத்துசிவன் முதலியோரின் மூலம் அவரது நோக்கு, போக்கு, தோற்றம், நடையுடை பாவனை எல்லாவற்றையும் பற்றி ஓரளவு கேள்வியும் பட்டிருந்தேன். அதனால் நானாகக் கற்பனை செய்து கொள்வதற்கு அதிகம் எதுவும் இல்லை. அவரைப் பற்றி என் மனத்தில் விழுந்திருந்த சித்திரத்துக்கும் நேரில் கண்ட அனுபவத்துக்கும் வித்தியாசம் இல்லை எனலாம். இதைப் போலத்தான் ஓராண்டுக்குப் பின்னர் அவரைச் சந்தித்த போதும் எனக்கு ஏமாற்றமில்லை. நான்தான் அவருக்கு மறுப்பு எழுதியவன் என்று தெரிந்தால், அவர் கோபித்துக்கொள்வார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. அவரும் கோபித்துக் கொள்ளவில்லை. ஆயினும் அந்த நாள் தொடங்கி அவர் என்னைத் தமது நிழலில் வளர வேண்டிய பயிர் என்று கருதியதும், என்மீது அன்பையும் ஆதரவையும் பொழிந்ததும், இருவரும் சந்தித்துப் பேசா நாள் எல்லாம் பிறவா நாளே என்று கருதியதுபோல் தினம் தினம் என்னைச் சந்தித்ததும், எனது கதைகளை வாசிக்கச் சொல்லிக் கேட்டதும், நான் சற்றும் எதிர்பாராததவை என்றே சொல்ல வேண்டும்.

கேள்வி

அப்போது அவருக்கு என்ன வயதிருக்கும்? அவருடைய தோற்றம் எப்படி இருந்தது?

பதில்

சந்தித்தது 1944ல் தானே. அப்போது அவருக்கு வயது முப்பத்தெட்டு. என்றாலும் அப்போதே அவருக்குத் தலையில்

நரை புரையோடிருந்தது. வாழ்க்கை நெருப்பில் அடிபட்டுக் காய்ந்த முகம்; வயதுக்கு மீறிய முதுமை; நோஞ்சான் உடம்பு. தொளதொளத்துத் தொங்கும் வெள்ளைக் கதர் ஜிப்பாதான் உடம்பின் சோனித் தன்மையை மூடி மறைத்திருந்தது. அவரது தோற்றம்பற்றிக் குறிப்பிடும்போது கண்களைப்பற்றிக் குறிப்பிட்டாக வேண்டும். அந்தக் கண்கள் ஓர் அசாதாரண மான ஒளி நிறைந்த கண்கள். தீராத ஏக்கமும் பித்தமும் ஒளியும் தீட்சண்யமும் தென்படும் கண்கள். அந்தக் கண்களை வெகு நேரம் பார்க்க முடியாது. பார்க்கிறவர்களின் கண்களைச் சீக்கிரம் உறுத்திவிடும் கண்கள் அவை. ஆழக் குழிக்குள் அமிழ்ந்து கிடந்தாலும் தெறித்துச் சிதறும் ஒளியும் வேகமும் கொண்ட கண்கள் அவை. அவரை அறியாதவர்கள் முதலில் அவர் கண்களைச் சந்தித்தால், அது அவர்களுக்கு ஏதோ ஓர் இனந் தெரியாத அச்சத்தை எழுப்பிவிடும் என்று கூடச் சொல்லலாம்.

**கேள்வி:**

சரி, அந்நாட்களில் அவரது ஈடுபாடுகள் என்ன? அவருடைய படிப்பு—Reading—எழுத்து, சமூக அக்கறைகள், லட்சியங்கள்—இவை பற்றிச் சொல்ல முடியுமா?

**பதில்:**

நான் அவரைச் சந்தித்துப் பழகிய காலத்தில் அவர் 'தினசரி'ப் பத்திரிகையையும் விட்டு விலகி, சுயேச்சை எழுத்தாளராக, Free lance writer ஆக மாறியிருந்தார். அதே சமயம் சினிமாத்துறையிலும் காலடி வைத்து 'அவ்வையார்' படத்துக்குக் கதை வசனம் எழுதும் பொறுப்பையும் ஏற்றிருந்தார். இதற்கிடையிலும் அவர் சில கதைகள் எழுதினார். 'அன்றிரவு' 'எப்போதும் முடிவிலே இன்பம்', 'கபாடபுரம்' அவரது கடைசி கதை எனச் சொல்லத் தகும் 'கயிற்றரவு' முதலிய கதைகள் எல்லாம் அப்போது எழுதியவைதான். இந்தக் கதைகளின் தன்மையே 'புதுமைப்பித்தன் கதைகள்' என்ற தொகுதியில் இடம் பெற்றுள்ள கதைகளை எழுதிய புதுமைப்பித்தனின் ஈடுபாடுகள் வேறு, இந்தக் கதைகளை எழுதிய புதுமைப்பித்தனின் ஈடுபாடுகள் வேறு என்பதைப் புலப்படுத்தி விடும்,

படிப்பு—reading—ஐப் பொறுத்த வரையில் எப்போதுமே அவருக்கு அதில் ஒரு தணியாத தாகம் இருந்தது. சொந்தத்திலேயே ஏராளமான புத்தகங்கள் வைத்திருந்தார். இதுபோக, கையில் பணம் புரள்கிற வேளையில், புத்தகக் கடைக்குள் நுழைந்து விலையைப் பாராமல் புத்தகங்களை அள்ளிக் கொண்டு வருவதும் உண்டு. வாங்கிய புத்தகங்களை வாங்கிய சூட்டோடு படிக்கவும் செய்வார்; மாதக் கணக்கில் படிக்காமல் போட்டும் வைப்பார். ஆனாலும், தனியாக இருந்தால் எப்போதும் எதையாவது படித்துக் கொண்டுதான் இருப்பார். எனினும் படிப்பவற்றுக்கு ஒரு வரன்முறை கிடையாது. அது கம்பனாகவும் இருக்கலாம்; கண்ணுடையம்மன் பள்ளாகவும் இருக்கலாம். Arabian Nights ஆகவும் இருக்கலாம். அல்லது அண்மையில் வெளிவந்த W. H. ஆடனின் கவிதைத் தொகுப்பாகவும் இருக்கலாம். படிப்பு விஷயத்தில் அவருக்குப் பழைய இலக்கியங்களிலும் ஈடுபாடு இருந்தது; புதிய நூல்களிலும் ஈடுபாடு இருந்தது. புதிய இலக்கியங்களில் அவர் டி.எஸ்.எலியட், W. H. ஆடன், கிறிஸ்டபர் இஷர்வுட், லூயி மக்னீஸ், V. S. பிரிச்செட் மற்றும் பலரது புத்தகங்களை நான் பழகிய காலத்தில் வாங்கிப் படித்ததுண்டு.

நான் அவரோடு பழகிய காலத்தில் அவர் சமூக அக்கறைகளைப் பற்றிப் பிரமாதமாகக் கவலை கொண்டார் என்றோ, அவை பற்றிச் சிந்தித்தார் என்றோ சொல்ல முடியாது. ஆனால் சமூகத்தில் காணும் சிறுமைகளைக் கண்டு வருந்தும், மனம் குமையும், சினந்து சீறும் குணம் அவருக்கு என்றும் இருந்தது. ஆனால் இந்த உணர்வு பெரும்பாலும் மனப் புழுக்கத்துடனேயே நின்று விட்டது எனலாம்.

லட்சியங்களைப் பொறுத்த வரையில், உலகில் தாம் இன்னின்ன கதைகளை, நாவல்களை எழுதி முடிக்க வேண்டும் என்று அவர் கூறிய நிறைவேறாத, நிறைவேற்றுவதற்கான வாய்ப்போ வசதியோ, அதற்கான மனஉறுதியோ திட்டமோ எதுவுமே இல்லாத ஆசைக் கனவுகளாகவே இருந்து வந்தன எனலாம்.

### கேள்வி:

வாழ்க்கைமீது அவர் கொண்டிருந்த அவநம்பிக்கை, அவர் எழுத்தில் பல இடங்களில் வெளிப்படுகிறது. அந்த நம்பிக்கை வறட்சியின் ஊற்றுக்கள் என்ன? பிறப்பிலும் வளர்ப்பிலும் நிகழ்ந்துபோன குறைகள் காரணமாக, தம்மளவில் முதலில் கசந்து, அக் கசப்பையே வெளிஉலகத்திலிருந்தும் பொறுக்கிச் சேர்த்துவிடுகிறாரா? அல்லது சொந்தக் குறைகளை விலக்கி வாழ்க்கையை முழுமையாகவும் சுதந்திரமாகவும் பார்த்ததன் விளைவாகவே இந்த நம்பிக்கை வறட்சி. அவரிடம் தோன்றியுள்ளதா?

### பதில்:

புதுமைப்பித்தனின் பிறப்பிலும் வளர்ப்பிலும் அவருக்குக் கசப்பான அனுபவங்கள் மலிந்திருந்தன என்பது உண்மை தான். ஆனால் அந்தக் கசப்புக்கும் மத்தியில் அவருக்குத் தாம் ஓர் இலக்கிய கர்த்தா ஆகவேண்டும் என்ற தாகமும் வேகமும் இருந்தது. அந்தப் பிடிப்பும் இல்லாது போயிருந்தால் அவர் என்றோ தற்கொலை கூடச் செய்து கொண்டிருக்கலாம். எனினும் வாழ்க்கையில் அவர் அனுபவித்த கசப்பு அவரது இலக்கியங்களிலும் பிரதிபலித்தது உண்மை. ''ஒரு கவியுள்ளம்—சோகத்தால் சாம்பிய உள்ளம்—வாழ்க்கை முட்களில் விழுந்து ரத்தம் கக்குகிற உள்ளம்—கதைகள் மூலம் பேசுகிறது. இதுதான் நான் கண்டது இந்தக் கதைக் கொத்திலே'' என்று ரா. ஸ்ரீ தேசிகன் புதுமைப்பித்தன் கதைகளுக்கு எழுதிய முன்னுரையில் குறிப்பிடுகிறாரே, அது ஓரளவுக்கு உண்மைதான். தனிமனிதன் மட்டுமல்ல, சமுதாயமே வாழ்க்கை முட்களில் விழுந்து ரத்தம் கக்குகிற பரிதாபத்தையும் புதுமைப்பித்தன் பார்த்ததனால்தான் சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் அவரது கதைகளிலும் கசப்பும் நம்பிக்கை வறட்சியும் பிரதிபலித்தன எனலாம். அவரே ''என் கதைகளின் பொதுத்தன்மை நம்பிக்கை வறட்சி'' என்று ஒப்புக்கொள்கிறார். அவரே அதற்குப் பதிலும் அளிக்கிறார்.

''எதிர்மறையான குணங்கள் இலக்கியத்துக்கு வலுக் கொடுக்குமா? என்று கேட்கலாம். அது ஏற்பவர்களின் மனப் பக்குவத்தைப் பொறுத்ததே ஒழிய, எதிர்மறை பாவத்தின் விஷயத் தன்மையைப் பற்றியதல்ல'' என்று அவரே கூறு கிருர். அவரே ஒரு முன்னுரையில் கூறியதுபோல், அவரது கதையில் அவர் தமக்குப் பிடித்தவர்களேயும் பிடிக்காதவர்களே யும் .கேலி செய்கிருர். இதனேக் கண்டு அவர்களது முகம் சிவப்பதைக் கண்டு, புதுமைப்பித்தன் மகிழ்ச்சி கொள்கிருர். அவர்களது முகம் மேலும் சிவக்க வேண்டும் என்று விரும்பு கிருர். சுருங்கச் சொன்னல், சமுதாயச் சிறுமைகளேக் கசப் புணர்ச்சியோடு, விரக்தியுணர்வோடு குத்திக் காட்டுவதன் மூலம், அவர் வாசகர் மனத்தில் சீற்றத்தைக் கிளப்பவே முயல்கிருர். அதாவது அப்படியாவது சமுதாயத்துக்கு ரோஷம் வரட்டும் என்பதுதான் அவரது நோக்கம். எனினும் இந்த ரோஷத்தைக் கிளப்பி விடுவது மட்டும் தான் தமது வேலே என்று அவர் கருதினர். அதற்குமேல் அவர் செல்லவும் இல்லே; செல்ல விரும்பவும் இல்லே.

### கேள்வி:

வாழ்வின் ஊனங்கள் பற்றியும் அதனேக் களேயும் வழிகள் பற்றியும் எப்பொழுதேனும் அவர் உங்களிடம் பேசியது உண்டா?

### பதில்:

முந்தைய கேள்விக்கு அளித்த பதிலிலேயே வாழ்வின் ஊனங்கள் பற்றிய புதுமைப்பித்தனின் கண்ணேட்டம் எப்படி இருந்தது என்பதைப் புரிந்து கொண்டிருப்பீர்கள். வாழ்வின் ஊனங்கள், சிறுமைகள் குறித்து அவர் மனம் புழுங்கியதுண்டு. ஆனல் அவற்றைப் போக்குவதற்கு எது வழி என்று அவர் அதிகம் கவலேப்பட்டதுமில்லே; இதுதான் வழி என்ற திட்ட வட்டமான முடிவு எதையும் அவர் தேர்ந்திருக்கவும் இல்லே இதுபற்றி நான் அவரிடம் எப்போதாவது பேச முனேந்தால், இலக்கிய கர்த்தாவின் வேலே அதுவல்ல என்று அடித்துக் கூறிவிடுவார். புதுமைப்பித்தனேடு நான் பழகிய காலத்தில்

நான் வாழ்க்கையை நம்பிக்கையோடு எதிர்நோக்கிக் கொண்டிருந்த 22 வயது இளைஞன். எனவே இந்த விஷயத்தில்தான் எனக்கும் அவருக்கும் முரண்பாடு இருந்தது. சொல்லப் போனால், அப்போது எனக்கிருந்த சமுதாய, அரசியல் கருத்துகளைத் தகர்த்துவிட வேண்டும் என்றுகூட அவர் முயன்றார். இதற்கு அவரது சமகாலத்து மேலைநாட்டு எழுத்தாளர்கள் சிலர், அவரது கவனத்தையும் கருத்தையும் கவர்ந்திருந்த எழுத்தாளர்கள் சிலர், அந்தக் காலத்துக்கும் முன்பே இத்தகையதொரு நிலையை ஏற்றுக் கொண்டிருந்ததும் ஒரு காரணம் என நான் கருதுகிறேன். அவர்களின் பாதிப்புக்குப் புதுமைப் பித்தனும் ஆட்பட்டிருந்தார் என்றே நான் உணர்ந்தேன்.

கேள்வி:

அவருடைய மிக நெருங்கிய இலக்கிய நண்பர்கள் யார்? சமகால எழுத்தாளர்களில் யாருடைய எழுத்தின்மீது அவருக்கு அதிக மதிப்பு இருந்தது?

பதில்:

மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் என்று கூறப்பட்ட அந்தக் காலத்து எழுத்தாளர்கள் பலரும் அவருக்கு நண்பர்கள்தான், குறிப்பாக, மணிக்கொடிப் பத்திரிக்கையோடு சம்பந்தப்பட்டிருந்த பி. எஸ். ராமையா, கி. ரா. என்ற கி. ராமச்சந்திரன், க நா. சுப்ரமண்யம், ந. சிதம்பர சுப்ரமண்யம், ந. பிச்சமூர்த்தி முதலியோர் பலரும் அவருக்கு நண்பர்களே. இவர்களைத் தவிர, பாரதிதாசன், காளிதாசன் என்ற பெயரில் எழுதிவந்த ச. து. சுப்ரமண்ய யோகி, மஞ்சேரி ஈஸ்வரன், சங்கு சுப்ரமண்யம், கொத்தமங்கலம் சுப்பு, வையாபுரிப் பிள்ளை முதலிய இலக்கிய கர்த்தாக்களும் அவருக்கு நண்பர்கள்தான். இளைஞர்களில் அப்போது நானும் அழகிரிசாமியும் அவருக்கு நெருங்கிய நண்பர்களாக இருந்தோம். சமகால எழுத்தாளர்களின் அவர் பி. எஸ். ராமையா, பிச்சமூர்த்தி, மௌனி போன்றோரின் கதைகள், . பாரதிதாசன், ச. து. சு. யோகி போன்றோரின் கவிதைகள், கொத்தமங்கலம் சுப்புவின் கிராமியப் பாடல்கள் முதலியவற்றையெல்லாம் பாராட்டினார். எனினும்

எவரையும் ஒட்டுமொத்தமாகப் பாராட்டிவிட மாட்டார்; சிலவற்றைப் பாராட்டவும் செய்வார். சிலவற்றை உதறித் தள்ளவும் செய்வார். என் விஷயத்திலும் அழகிரிசாமி விஷயத்திலும் அப்படித்தான். எனினும் ஒரு முறை எங்களை ஒரு கவிஞரிடம் அறிமுகப்படுத்தும்போது, ''இவர்கள் இருவரும் என் எதிர்கால நம்பிக்கைகள்'' என்று குறிப்பிட்டார்.

### கேள்வி:

சுவையான சம்பாஷணைக்காரர் என்று அவரைப்பற்றிக் கூறப்படுகிறது. அவருடைய சம்பாஷணையில் சுவை ஏறக் காரணம் என்ன? ஹாஸ்யமா? கிண்டலா? கோணல் பார்வையா? அவருடைய பார்வையினாலே அவர் தொடும் விஷயத்தின் தளம் மாறி விடுகிறதா? விஷயத்தில் சுவை ஏற வேண்டும் என்பதற்காக Facts-ஐத் திரித்தல், மிகைப்படக் கூறல் ஆகிய யுக்திகளை அவர் கையாள்வாரா? அதாவது முதன்மையான நோக்கம் பேசும் நேரத்தில் நண்பர்கள் மத்தியில் ஒரு சந்தோஷத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதா? அல்லது உண்மை நிலையில் சிறு சிதைவும் ஏற்படக்கூடாது என்பதா?

### பதில்:

ஆமாம். புதுமைப்பித்தன் சுவையாக உரையாடக்கூடியவர் தான். பேசுவதற்கு இதுதான் விஷயம் என்ற நியதி ஏதும் அவருக்குக் கிடையாது. பழைய இலக்கியம், புதிய இலக்கியம், வைத்தியம், சோதிடம், தத்துவ விசாரணை, ஊர்வம்பு—எது வேண்டுமானாலும் பேச்சுக்குரிய விஷயமாகிவிடும் அவருக்கு. அவரது சம்பாஷணை சுவையாக இருப்பதற்கு முதற் காரணம் அவர் பேசுகின்ற விஷயத்தை ஈடுபாட்டோடு பேசுவார். அவர் பேசுகின்ற பாணியைப் பார்த்தால், அவர் அந்த விஷயத்தில் அத்துபடியானவர் போன்ற ஒரு மயக்கம் தோன்றும். பொதுவாக விஷயத்தைத் திரித்துக் கூற முயல மாட்டார். ஆனால் தனது கருத்தை அழுத்திக்கூற மிகைபடக் கூறுவதுண்டு. அவரது பேச்சின் முதன்மையான நோக்கம் பேசிக் கொண்டிருக்கும் நண்பர்களை மகிழ்விக்க வேண்டும் என்பதைவிட, எதி

ராளியை ஆழம் பார்க்கும் காரியமாகவே இருக்கும். பேச்சு சூடு பிடித்து வாதமாக மாறிவிட்டால், பிறகு தம் கருத்தை வலியுறுத்தத் தடம் புரளவும் தயங்கமாட்டார். ஜான்சனைப் பற்றிச் சொல்வார்கள். ஜான்சன் வாதத்தில் கெட்டிக்காரர். எனினும் தமது வாதத்தில் துப்பாக்கியில்குண்டு தீர்ந்துவிட்டால், அதாவது மேற்கொண்டு கூறுவதற்கு எதுவும் இல்லையென்றால், துப்பாக்கியை மாற்றிப் பிடித்துக் கட்டையால் அடிக்கவும் தயங்க மாட்டார் என்று. புதுமைப்பித்தனும் அப்படித்தான். நகைச்சுவை அவருக்கு உடன்பிறந்தது. அந்த நகைச்சுவையுணர்வு இல்லாவிட்டால், அவர் பட்ட கஷ்டங்களுக்கு வாழ்க்கையே அவருக்கு நரகமாகியிருக்கும். அவரது பேச்சிலும் ஹாஸ்யமும், கிண்டலும் தானாகவே குதித்துக் கொண்டு வரும். அவர் எதைப் பேசினாலும், அவர் நம்புவதைப் பேசினாலும் நம்பாததைப் பேசினாலும், மின்னல்வெட்டுப் போல் அபூர்வமான கருத்துக்கள், அற்புதமான வாக்கியங்கள், ஆழ்ந்த மேதாவிலாசத்தைப் புலப்படுத்தும் உண்மைகள், அத்துடன் அதிர்வெடி போன்ற ஹாஸ்யங்கள் எல்லாமே புரண்டு புரண்டு வரும். மணிக்கணக்கில் அவர் பேசிக் கொண்டிருந்தாலும் இந்தச் சுவைகள் குன்றுவதில்லை.

**கேள்வி:**

ஒரு விஷயத்தின் மீது அவர் பார்வை எப்படிப் படியும் என்பதற்கு உதாரணமாக ஒரு சம்பவத்தையோ ஒரு சம்பாஷணைத் தொடரையோ வருணிக்க முடியுமா? அவருக்கே உரித்தான பாணியில் கொஞ்சம் பேசிக்காட்ட முடிந்தால் நல்லது.

**பதில்:**

ஒரு முறை நண்பர் அழகிரிசாமியும் புதுமைப்பித்தனும் நானும் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை வீட்டுக்குப் போனோம். அன்றுதான் அழகிரிசாமி என்னோடு வந்து புதுமைப்பித்தனை முதன்முதலில் நேரில் சந்தித்தார். வையாபுரிப் பிள்ளை வீட்டுக்குப் போகும் வழியில் அழகிரிசாமி ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார். அந்தச் சமயத்தில் வையாபுரிப்

பிள்ளை திருவள்ளுவரின் காலம் பற்றி ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதில் மற்றவர்கள் கூறி வந்த காலத்துக்கும் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவர் திருவள்ளுவர் என்று எழுதியிருந்தார். இதைப் படித்த ஒரு பண்டித நண்பர் அழகிரிசாமியிடம் "இந்த வையாபுரிப் பிள்ளையே இப்படித்தான். பழைய தமிழ்ப்புலவர்களின் காலத்தையெல்லாம் மிகவும் பிற்பட்டதாகவே கூறுகிறார்" என்று குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார். இதைக்கூறி "இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? பண்டித நண்பர்கள் கோபித்துக் கொள்வதில் அர்த்தமுண்டா?" என்று புதுமைப்பித்தனிடம் கேட்டார். அதற்குப் புதுமைப்பித்தன், "பண்டிதர்தானே. நம் பண்டிதர்களுக்கு நமது பழைய புலவர்களின் காலத்தையும் இலக்கியங்களின் காலத்தையும் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்னால் தள்ளிப் போடுவதில் பரமதிருப்தி. அப்படிச் சொல்லிக் கொள்வதில் ஒருபெருமை. டார்வின் பரிணமத் தத்துவப்படி தோன்றிய முதல் குரங்கே தமிழ்க்குரங்கு என்று சொன்னால்தான் நம்மனவனுக்குத் திருப்தி!" என்று தமக்கே உரிய நகைச்சுவையோடு கூறிவிட்டார். கொஞ்சம் Crude ஆன ஹாஸ்யம்தான். என்றாலும் அவர் சொல்லக் கருதிய விஷயத்தை இதைக் காட்டிலும் அழுத்தமாகக் கூறியிருக்க முடியயாது, இல்லையா?

**கேள்வி:**

பொதுவாக அவரிடம் நேரில் பழகும்போது ஒரு தீவிர நிலை எய்திவிட்ட மனத்துடன் தொடர்பு கொள்கிறோம் என்ற எண்ணம் ஏற்படுமா? அல்லது ஒரு விளையாட்டுப் போக்குடைய மனிதருடன் நேரம் சுவையாகக் கழிகிறது என்ற எண்ணம் ஏற்படுமா?

**பதில்:**

தீவிர நிலை என்று நீங்கள் கூறுவது ஒரு Superlevelதான் என்று கொண்டால், அவரோடு பழகும்போது நமக்கு அத்தகைய உணர்வு ஏற்படாது. என்றாலும், உலகஞானமும் அறிவு விசாலமும் மிக்க ஒரு மேதையோடு பேசிக்கொண்டிருக்கிறோம் என்ற உணர்வு நிச்சயமாக ஏற்படும். அவருடைய பேச்சில்

விளையாட்டுத்தனமான குறும்பும் வேடிக்கையும் ரவை மாதிரி புரளும். ஆனால் அவர் விளையாட்டு மனிதரல்ல. அவர் சீரிய ஸாகப் பேச முனைந்தால் சிவன் ருத்ராவதாரம் எடுத்த மாதிரியே இருக்கும் என்று சொல்லலாம். ருத்ர தாண்டவம் மாதிரி வானையும் மண்ணையும் அளந்து பாயும் வார்த்தைப் பிரயோகங்களோடு விஷயங்கள் அருவி மாதிரி கொட்டுவதும் உண்டு. அவரது மனோநிலை விரக்தியுற்றிருக்கும் பொழுதில் தான், வார்த்தைகளில் கசப்பும் கைப்பும் அதிகமாகப் புரையோடியிருக்கும். மற்ற வேளைகளில் அவரோடு பழகுவதும் பேசுவதும் இன்பானுபவமாகவே விளங்கும்.

கேள்வி:

நீங்கள் அவருடன் பழகும் காலத்தில் அவருடைய உடல் நிலை எப்படி இருந்தது? ஆரோக்கிய நிலையில் அப்பொழுதே குறை இருந்ததாக உணர்ந்திருந்தீர்களா?

பதில்:

நான் பழகத் தொடங்கிய காலத்தில் அவர் உடல்நிலை மோசமில்லை. ஆனால் ஓரிரு ஆண்டுகளில் அவரை எப்போதாவது கொடிய இருமல் வாட்டி வதைத்ததுண்டு. இரும ஆரம்பித்தால், விடாமல் கண்ணிலிருந்து கண்ணீர் தெறிக்கிறவரை இருமுவார். பிறகு மூச்சு வாங்குவார். கேட்டால், 'இன்னைக்கு வெளியிலேயே ரொம்ப நேரம் அலைந்து விட்டேன் பாரு' என்றோ, 'உன்னோடு சேர்ந்து நேற்று சிகரெட்டை ஊதித் தள்ளினேன் பாரு' என்று ஏதோ காரணம் சொல்வார். அந்த இருமலை அவரும் க்ஷயரோகம் என்று சந்தேகிக்கவில்லை; அவரோடு நெருங்கிப் பழகிய என் போன்ற நண்பர்களும் சந்தேகிக்கவில்லை. காரணம் க்ஷயத்திற்குரிய சாதாரண அறிகுறிகள் கூடத் தென்படாததுதான். எனினும் ஒரே ஒரு முறை அவர் இவ்வாறு கொடூரமாக இருமி முடித்த பிறகு, என்னைப் பார்த்து "என்ன ராசா! ஒருவேளை என்னைச் சாவு துரத்திக் கொண்டு வருகிறதோ? அப்படி ஒரு பயம் தோன்றியிருக்கிறது எனக்கு" என்று சொன்னார். அப்போதும் நான் அவருக்கு உயிரைக் குடிக்கும் காச நோய் பற்றியிருப்பதாகக் கருத

வில்லை. ஒருவேளை அவருக்கு அந்தச் சந்தேகம் மனத்தில் இருந்து வெளியில் சொல்லாமல் இருந்திருக்கலாம்.

கேள்வி;

அந்தக் காலத்தில் ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்கான பழக்க வழக்கங்கள் எதுவும் மேற்கொண்டிருந்தாரா? அதாவது உடற்பயிற்சி, நல்ல உணவுப் பழக்க வழக்கங்கள், போதுமான அளவு ஓய்வு முதலியவை.

பதில்:

ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக் கொள்ளும் பழக்க வழக்கங்கள் என்று எதுவுமே கிடையாது அவருக்கு. அதே மாதிரி உடற் பயிற்சி, திட்டமிட்ட ஓய்வு, நேரத்துக்கு உணவு என்ற நியதிகளும் கிடையாது. வாய்க்கு ருசியாகச் சாப்பிட வேண்டும் என்று ஆசைப்படுவார். அதற்காகக் குறிப்பிட்ட ஓட்டலைத் தேடியும் போவார். ஆனல் சாப்பாடு குறைவுதான். அதே போல் வேளா வேளைக்குச் சாப்பிடவும் மாட்டார். சாப்பாட்டையே மறந்து விட்டு வேலையும் பார்ப்பார்; பேசிக் கொண்டும் இருப்பார். சாப்பிடவில்லையே என்று நினைவூட்டினல், ''ஓஹோ! அப்படி ஒரு விஷயம் பாக்கியிருக்கிறதா? வா, சாப்பிடப் போகலாம்'' என்று எழுந்து விடுவார். அத்தகைய பிறவி அவர்.

கேள்வி:

அந்த நாட்களில் அவருடைய வாழ்க்கைச் செலவுக்குப் போதுமான வருமானம் இருந்ததா? ஒரு எழுத்தாளனின் ஆசைகளான புத்தகம் வாங்குதல், கலை நிகழ்ச்சிகளைப் பார்த்தல் அல்லது நண்பர்களை உபசரித்தல் ஆகிய அபிலாஷைகளையேனும் அவரால் நிறைவேற்ற முடிந்ததா?

பதில்:

நான் அவருடன் பழகிய காலத்தில் அவருக்கு நல்ல வருமானம் வந்த சமயமும் உண்டு; இருந்த பணமும் தீர்ந்து எந்த வருமானமும் இல்லாது இருந்த நாட்களும் உண்டு. பத்திரிகைகளில் வேலை பார்த்து வந்த காலத்திலும், குறைந்த

வருமானமுள்ள எல்லா மத்தியதரக் குடும்பங்களையும் போலத் தான் அவரது வாழ்வும் இருந்தது. புத்தகம் வாங்குவது அவரது நிரந்தர ஆசை. கையில் இருக்கும் பணத்தைப் பொறுத்தது அது. ஆயிரக்கணக்கில் பணம் புரண்டபோது நூற்றுக்கணக்கில் புத்தகங்களை வாங்கினுர். சினிமாவுக்கு எப்போதாவது போவார். நண்பர்களை உபசரிப்பதிலும் அவருக்குத் தாகம் உண்டு. கையில் பணமிருந்தால் தாராள மாகவே உபசரிப்பார். ஒருமுறை நான் இரானி ஹோட்டலில் சாப்பிடப் போனேன். புதுமைப்பித்தன் சுத்த சைவம். ''அதனுல் அங்கு நீ சாப்பிடு. நீ சாப்பிடுவதை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்று என்கூட வந்தார். சாப்பிட்டு முடிந்ததும் பில்லை அவர்தான் கொடுத்தார். அதேபோல் வீடு தேடிவரும் எழுத்தாள நண்பர்கள், அதிலும் சாப்பாட்டு நேரத்தில் வந்து விட்டால், அவர்களைச் சாப்பிடச் சொல்வார். ''எழுத்தாளன் சமயங்களில் பட்டினியாகக்கூட இருப்பான். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் ஜம்பமாகப் பேசிக் கொண்டும் இருப்பான். சாப்பிட்டாயிற்ரு என்ருல் ஆயிற்று என்று பொய்யும் சொல்வான். அதற்காகத்தான் வருபவனைச் சாப்பிடச் சொல்வேன்'' என்று அவரே ஒருமுறை கூறினுர்.

**கேள்வி:**

பொருளாதார முடையினுல்தான் அவர் சினிமாத்துறை யில் நுழைந்தாரா? அல்லது சினிமா என்ற கலைச் சாதனத் தில் அவருக்குத் தனி ஈடுபாடு இருந்ததா?

**பதில்:**

'மணிக்கொடிப்' பத்திரிகையில் சிறிது காலம் சம்பளம் என்று எதுவும் இல்லாமல் சேவை செய்த பிறகு, பத்தாண்டுக் காலத்துக்கும் மேலாக 'தினமணி', 'தினசரி' ஆகிய இரண்டு பத்திரிகைகளிலும் மாதச் சம்பளம் பெற்று வேலை பார்த்து வந்தவர் புதுமைப்பித்தன். தினசரியை விட்டு விலகியதும். வருவாய்க்கு வழி என்ன என்பது அவரது நியாயமான கவலை, வேறு பத்திரிகைகளிலும் சேர முடியாது. சேர்ந்தாலும் தினசரி யில் வந்த அளவுக்கு வருமானம் வந்திராது. எனவே அவர்

சினிமாத்துறையில் நுழைவதற்குப் பொருளாதாரம்தான் முதற்காரணம் என்பது மட்டுமல்ல, அதுவே முழுக்காரணமும் கூட. மற்றப்படி அவருக்கு அந்தக் கலைச்சாதனத்தில் தனித்த ஈடுபாடு எதுவும் கிடையாது. தமது போக்குக்கும் எழுத்துக்கும் அந்தத் துறையில் ஒத்து வராது என்று அவருக்குத் தெரியும். எனவே அவர்தான் அந்தத் துறையின் போக்குக்கு ஒத்துப் போய் சினிமாவுக்கு எழுத முற்பட்டார்.

கேள்வி:

'சோதனை' என்ற தலைப்பில் ஒரு பத்திரிகை ஆரம்பிக்க வேண்டும் என்று அவர் யோசித்ததாக எழுதி இருக்கிறீர்கள். அவர் உயிரோடு இருந்திருந்தால், அதனை ஆரம்பித்திருப் பார் என்று கருதுகிறீர்களா? அல்லது அது எழுத்தாளரின் வழக்கமான கனவுதானா?

பதில்:

சினிமாவில் வரும் வருவாயைக் கொண்டு, தமது ஆத்ம சாந்திக்காக அவர் 'சோதனை' என்ற பெயரில் ஒரு பத்திரி கையை நடத்தத் திட்டமிட்டது உண்மைதான். அந்தப் பத் திரிகை இப்படி இப்படி இருக்க வேண்டும் என்று அவர் என்னோடும் அழகிரிசாமியோடும் யோசனைகள் கூறிப் பேசிய தும் உண்டு. அவர் நினைத்தபடியே சினிமாத் துறையில் நிறையப் பணம் தொடர்ந்து வந்திருந்தால், அவர் அந்தப் பத்திரிகையை நிச்சயம் ஆரம்பித்திருப்பார். அப்படி ஆரம் பித்திருந்தால் அது நிலைத்திருக்குமா, நீடித்திருக்குமா என்பது வேறு விஷயம். என்றாலும், அவர் தமது கதைகளை, கருத்துக்களைத் தடையின்றிச் சுமந்து செல்ல ஒரு வாகனம் வேண்டும் என்று விரும்பியது உண்மை. அந்த அளவில் அது அவரது ஆசைக் கனவில் ஒன்றாகவே இருந்தது. ஆனால் அவரது ஆசைக் கனவுகளில் பலவும் கருகியதுபோல் அதுவும் கருகிவிட்டது. அவ்வளவுதான்.

கேள்வி:

'இரவில் விசிறிமடிப்பு' என்ற தலைப்பில் அவர் பல எழுத்தாளர்களின் போலி முகங்களை அம்பலப்படுத்தியதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த எழுத்தாளர்கள் யார்? அவர்களைப் பற்றி அவர் முன் வைத்த வாதத்தின் சாராம்சம் என்ன?

பதில்:

'இரவில் விசிறி மடிப்பு' என்ற தலைப்பில் அவர் ஒரே ஒரு எழுத்தாளரைத்தான் தாக்கி எழுதியிருந்தார். புதுமைப் பித்தனுக்குப் பிறமொழிக் கதைகளைத் தழுவி எழுதுவது—அதாவது மூலத்தைக் குறிப்பிடும் நேர்மையான தழுவல், மூலத்தைக் குறிப்பிடாத திருட்டுத் தழுவல்—இரண்டுமே பிடிக்காது. இரண்டுக்கும் அவர் எதிரி. பிறமொழிக் கதைகளை அப்படியே மொழி பெயர்த்துத்தான் தரவேண்டும் என்பது அவர் கட்சி. உதாரணமாக, பேராசிரியர் கே. சுவாமிநாதன் 'கட்டை வண்டி' என்ற தழுவல் நாடகத்தை எழுதியிருந்தார். அந்த நாடகம் நடிப்பதற்கேயன்றி படிப்பதற்கல்ல என்று குறிப்பிடுவதற்காக அவர் தமது முன்னுரையில் 'இது வெறும் காப்பி டிகாக்ஷன், மேடை, சீன், நடிகர்கள் என்னும் சர்க்கரையும் பாலும் சேர்ந்தால்தான் இது சோபிக்கும்' என்ற பொருளில் எழுதியிருந்தார். இதற்கு மதிப்புரை எழுதிய புதுமைப்பித்தன் ஒரே வரியில் ''இது காப்பி அல்ல. சிக்கரிப் பவுடர்!'' என்று எழுதி அதனைத் தகர்த்து விட்டார். இதே போல் சினிமாத் துறையில் புகுமுன்னர் ஏ. எஸ். ஏ. சாமி என்ற எழுத்தாளர் 'பில்ஹணன்' என்ற நாடக நூலை எழுதியிருந்தார். வடமொழியிலுள்ள பில்ஹணன் கதையையோ அதைப் பின்பற்றிப் பாரதிதாசன் எழுதியுள்ள புரட்சிக் கவி என்ற குறுங்காவியத்தையோ குறிப்பிடாமல், எனினும் அதிலுள்ள விஷயங்களை இந்த எழுத்தாளர் பயன்படுத்திக் கொண்டிருந்தார் என்ற காரணத்திற்காகவே 'இரவல் விசிறி மடிப்பு' என்ற தலைப்பில் புதுமைப்பித்தன் 'தினசரி'யில் அவரைத் தாக்கி விமர்சனம் எழுதியிருந்தார். நீண்ட விமர்

சனம்தான். இதேபோல் இதற்கு முன் 'ரசமட்டம்' என்ற புனை பெயரில் அவர் 'கல்கி' எழுதியுள்ள கதைகள் பல வற்றுக்கு மூலாதாரம் மேலை நாட்டுக் கதைகள்தான் குறிப் பிட்டு, ஒரு பெரிய கட்டுரைப் போரே நடத்தினர். இவ்வாறு திருட்டு இலக்கியம் படைப்பவர்களைப் பற்றி, ''இன்னொருவன் கதையைத் திருடி, தன் சொந்தக் கதையென்று கூசாமல் உரிமை கொண்டாடிக் கொள்பவர்களை, சோரம் போன மனைவிக்குப் பிறந்த பிள்ளைக்குத் தான்தான் தகப்பன் என்று கூறிக்கொள்ளும் வெட்கம் கெட்டவர்களுக்குத்தான் ஒப்பிட லாம்'' என்று ஒருமுறை கூறினர் புதுமைப்பித்தன்.

கேள்வி:

துடுக்குப் பேச்சால் நண்பர்களையும் சில சமயம் அவர் புண்படுத்தி விடுவார் என்று சொல்லப் படுகிறது. இது உண்மைதானு? அல்லது தகுதியானவர்களுக்குத்தான் அந்த வெகுமதி கிடைக்குமா?

பதில் :

புதுமைப்பித்தன் கூறும் விமர்சனம் அல்லது Comment எப்போதும் கூர்மையாகவே இருக்கும். அது அவர் இயல்பு. பொதுவாக அதில் வன்மம் இருக்காது. அவரை அறிந்தவர் கள் அதனைப் பொருட்படுத்த மாட்டார்கள்; அறியாதவர்கள் அவரை நெருங்கவே அஞ்சுவார்கள். எனினும், பொதுவாக மாய்மாலக்காரர்கள், போலிப் பெருமை பாராட்டுபவர்கள் போன்றவர்கள் விஷயத்தில்தான் அவர் மிகவும் காரசாரமான வார்த்தைகளைப் பிரயோகிப்பார். அவருக்குப் பிடிக்காதது போலித்தனம். எனவே அத்தகையோர் அவரிடம் வாங்கிக் கட்டிக் கொள்ளத் தவறமாட்டார்கள். உதாரணமாக, என் னேடு வேலைபார்த்து வந்த இன்னொரு எழுத்தாளரிடம் கட் டுரை கேட்டுப் போவதற்காக ஒரு பத்திரிகை ஆசிரியர் வந் திருந்தார். அப்போது புதுமைப்பித்தனும் அங்கிருப்பதைப் பார்த்து உபசாரத்துக்காக, ''நீங்களும் ஒரு கதை எழுதித் தாருங்களேன்'' என்று அவர் கேட்டு விட்டார். அந்தப்

பத்திரிகை தரமான பத்திரிகை அல்ல என்பது ஒரு பக்கம்; ஏதோ வந்த இடத்தில் போகிற போக்கில் கேட்டது ஒரு பக்கம், எனவே புதுமைப்பித்தன் அந்தப் பத்திரிகை ஆசிரியரைப் பார்த்து, ''அப்பா, நீ என்னிடம் கதை கேட்காதே. என் கதையை உன் பத்திரிகை தாங்காது. என் கதை நெருப்பப்பா நெருப்பு. உன் பத்திரிகை சாம்பலாகி விடும்!'' என்று கூறிவிட்டார். தமது எழுத்தைப்பற்றி அவர் கொண்டிருந்த மதிப்பின் காரணமாகத்தான் அவர் இவ்வாறு கூறினார். இந்த மாதிரிப் பல சந்தர்ப்பங்கள்.

### கேள்வி:

அவர் மணிக்கொடியில் எழுதியவர். காந்திஜி எழுப்பிய தேசிய உணர்ச்சி எங்கும் பரவியிருந்த காலம் அது. அவரது நண்பர்களில் பல தேசியவாதிகளாக இருந்திருக்கிறார்கள். சிலர் நேரடி அரசியலில் இறங்கி சிறையும் சென்றிருக்கிறார்கள். இவ்வுணர்ச்சிகளைப் புதுமைப்பித்தனும் பகிர்ந்து கொண்டுள்ளதாக உங்களுக்குத் தோன்றுகிறதா?

### பதில் :

அரசியல் விடுதலைக்கான தேசிய இயக்கத்தின் ஓர் அம்சமாகத்தான் இலக்கியத் துறையிலும் ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டது; அந்த மறுமலர்ச்சிக் காலத்தில் மலர்ந்து மணம் பரப்பியவர்தான் புதுமைப்பித்தன். இதை மறந்து விடுவதற்கில்லை. புதுமைப்பித்தன் நேரடி அரசியலில் இறங்கியதுமில்லை, பங்கெடுத்ததுமில்லை என்பது உண்மைதான். ஆனால் அவரைத் தேசியவாதியல்ல என்று கூறிவிட முடியாது. காந்திஜியிடம் அவருக்கு மிகுந்த மதிப்புண்டு. தமது அந்திம காலத்தில் புனா நகரில் இருந்தபோது காந்திஜியைப் புனா நகரத்தைச் சேர்ந்த ஒருவன் சுட்டுக் கொன்றுவிட்டான் என்று கேள்விப்பட்டவுடன், நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில் கூட ''புனா என்ற வார்த்தை புண்ணிய என்பதன் சிதைவு என்று சொன்னார்கள். இருகண் குருடனைத்தானே நல்ல கண்ணுபிள்ளை என்பார்கள். அதே மாதிரி சரித்திரக்கின்

பாவத்தைக் கட்டிக்கொண்டது இந்த ஊர். எனக்கு இங்கு இருக்கப் பிடிக்கவில்லை'' என்று எழுதினார். மேலும், புதுமைப்பித்தன் தமது கடைசிக் காலம் வரையிலும் கதரைத் தவிர வேறு எதையும் அணிந்ததில்லை. அவரது தேசிய இயக்க காலக் கதைகளைப் படித்துப் பார்த்தால், அவர் ஓர் ஏகாதிபத்திய எதிர்ப்பாளராக விளங்கினார் என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். துன்பக்கேணி என்கிற நெடுங்கதையே ஏகாதிபத்தியச் சுரண்டலின் கொடுமையை விளக்க எழுந்த கதைதானே. இதைப்போல் பல கதைகளில் அவரது இந்த உணர்வை நாம் இனம் காண முடியும்.

கேள்வி :

இந்திய தேசிய விடுதலை இயக்கம், காந்திஜியின் எழுச்சி ஆகியவை அவரைக் கவரவில்லை எனில், இவற்றுக்கு அப்பால் அவரை ஆட்கொண்டிருந்த நம்பிக்கைகள் என்ன? இந்தச் சமுதாயத்தில் ஓர் மாற்றம் நிகழ அவசியம் உண்டு என அவர் கருதினாரா? எவ்விதச் சிந்தனைகள் இம்மாற்றத்தை நிகழ்விக்கும் என அவர் கருதினார்?

பதில் :

காந்திஜி தலைமையில் நடந்த இந்திய விடுதலை இயக்கத்தின் அம்சமாகத்தான் புதுமைப்பித்தனும் தோன்றினார் என்று முன்னரே கூறினேன். எனவே தேசிய இயக்கம் அவரைக் கவரவில்லை என்று அர்த்தமாகாது. தேசிய இயக்க விரோதமாகவோ ஏகாதிபத்திய ஆதரவாகவோ அவரது எழுத்துக்களில் ஜாடைமாடையாக எதுவும் காண முடியாது. எனினும் ஓர் உண்மையைக் கூறியாக வேண்டும். அவர் காந்திஜியை மதித்தார். ஆனால் காந்தீயத்தை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. எனினும் இவற்றுக்கப்பால் அவரை ஆட்கொண்டிருந்த கருத்துக்கள் என்ன என்று பார்த்தால், அவரது ஆரம்ப காலக் கதைகளில் அவர் சமுதாயப் பிரச்சினைகள், பொருளாதாரப் பிரச்சினைகள், இவற்றின் அடியொற்றிப் பிறந்த வாழ்க்கைப் பிரச்சினைகளையே கதைப்

பொருளாகக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். மேலும் ஓரளவு நாத்திக வாடை வீசும் Rationalist கருத்துக்களும், Materialist கருத்துக்களும் சற்று ஆழமாகவே வேர்பாய்ச்சியிருப்பதையும் காணலாம். எனவே அத்தகைய கருத்துக்கள் அந்தக் காலத்தில் அவரது கவனத்தைக் கவர்ந்திருந்தன என்று ஊகிக்க இடமுண்டு. சமுதாய மாற்றம் வேண்டும் என்று உணர்ந்தவர்தான் அவர். அந்த உணர்வு இல்லாவிட்டால் அவரது கதைகளில் சமுதாயப் புன்மைகளைக் கண்டு கொதிக்கும் அத்தனை வேதனை பிரதிபலித்திருக்காது. ஆனால் எந்த விதமான சிந்தனை அல்லது போராட்டங்கள் அந்த மாற்றத்தைக் கொண்டு வரும் என்று அவர் கடைசிவரை தெரிந்து கொண்டதாகவோ, புரிந்துகொண்டதாகவோ, அதுபற்றி அவர் என்றும் ஆழமாகச் சிந்தித்ததாகவோ தெரியவில்லை.

**கேள்வி:**

தமது இலக்கியக் கருத்துக்கள் பற்றி அவர் விரிவாக எழுதி வைக்கவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். நேர் முகப்பேச்சில் அவர் இது பற்றி உங்களிடம் கூறியிருக்கிறாரா? அவருடைய இலக்கிய நம்பிக்கைகள் என்ன? இலக்கியம் சமுதாய மாற்றத்துக்கான ஒரு கருவி—மிக மேம்பட்ட நுணுக்கமான கருவி—என்றே வைத்துக்கொள்வோம். அவர் அவ்வாறு எண்ணினாரா அல்லது தமது பார்வையில் சமூகத்தைப் பிரதிபலித்தால் மட்டும் போதும் என்று எண்ணினாரா?

**பதில்:**

புதுமைப்பித்தன் எழுதிய கட்டுரைகள் குறைவுதான். நிறையக் கதைகள் எழுதவேண்டும் என்பதுதான் அவரது ஆசை. ஆனால் காலக்கிரமத்தில் வரவர அவர் கதைகள் எழுதுவதும் குறைந்து கொண்டுதான் வந்தது. காரணம், வயிற்றுப் பிழைப்புக்குத் தினசரிப் பத்திரிகைத் தொழில் என்று ஆனபிறகு, ஆலைவாய்க் கரும்புச் சர்க்கரையாய்த் திரும்பிவந்த புதுமைப்பித்தன் அதிகம் எழுதியிருக்க முடியாதுதான்.

மொத்தத்தில் அவர் கதைகளே நூறுதான் தேறும். இலக்கியம் சமுதாய மாற்றத்துக்கான ஒரு கருவி என்று அவர் திட்டவட்ட மாகக் கருதவில்லை. அவரே "என்னுடைய கதைகள் பிற்கால நல்வாழ்க்கைக்குச் சௌகரியம் பண்ணி வைக்கும் இன்ஸ்யூரன்ஸ் ஏற்பாடு அல்ல" என்று தமது கதைத் தொகுதியின் முன்னுரை யொன்றில் குறிப்பிடுகிறார். எனினும் அவர் தமது கதைகளின் மூலம் பல்வேறு சமுதாயப் பிரச்சினைகளை அப்பட்டமாகத் தொட்டுக் காட்டி, சமூகத்தில் ஒரு கலகக்குரலை எழுப்பினார் என்றே சொல்ல வேண்டும். சமூகத்தை நோக்கி அவரது கதைகள் கேள்விக் குறிகளைக் கணைகளாகத் தொடுத்தன. ஆனால் அவற்றுக்கு விடைகள் என்ன? அது பற்றி அவர் அக்கறையே கொள்ளவில்லை. சொல்லப் போனால் அது தமது வேலையல்ல என்றே அவர் கருதினார். சுருங்கச் சொன்னால் பிரச்சினைகளை அவர் கதைகளின் மூலம் தொட்டுக் காட்டினார். விடை காணவேண்டிய பொறுப்பு சமுதாயத்தின் வேலை என்று விட்டு விட்டார் என்றே நாம் கொள்ள வேண்டும்.

கேள்வி :

தமது படைப்பைப் பற்றி விருப்புடன் அவர் பேசியிருக்கிறார். சரி. தம் படைப்பு என்ன பிரதிபலிப்பை ஏற்படுத்தின்று என்பதை அவர் மதிக்கும் இலக்கிய நண்பரிடமோ அல்லது வாசகரிடமோ ஆராயும் குணம் அவருக்கு இருந்ததா? அவரது படைப்புப் பற்றி உங்களிடம் ஆராய்ந்துள்ளாரா? எந்தப் படைப்புப் பற்றிக் கேட்டார்? அதற்கு நீங்கள் என்ன பதில் சொன்னீர்கள்?

பதில் :

நண்பர் அழகிரிசாமி புதுமைப்பித்தனைப் பற்றி கட்டுரை யொன்றில், "அவருடைய கதைகளில் நமக்கு எவ்வளவு மதிப்புண்டோ அவ்வளவு மதிப்பு அவருக்கும் உண்டு" என்று எழுதியிருக்கிறார். இது உண்மைதான். புதுமைப்பித்தனுக்குத் தமது எழுத்துக்களில் அத்தனை ஈடுபாடு உண்டு. தம்முடைய கதைகளை தமது குழந்தைகளைப்போல் அத்தனை புனிதமாகவும் அன்போடும் மதித்துப் பேசுவார். தனது எழுத்துக்களில்

தனக்கே விசுவாசமும் நம்பிக்கையும் இல்லாத எழுத்தாளன் நேர்மையான எழுத்தாளனாக இருக்க முடியாது. ஆனால் புதுமைப்பித்தனிடம் அத்தகைய நேர்மையும் நாணயமும் பக்தியும் தம் எழுத்தின் மீதே இருந்தன. இது போற்றத் தக்க விஷயம். இது இல்லா விட்டால், எழுத்தாளன் தன் எழுத்தையே விலையாக்கவும் தயங்க மாட்டான். எனவே அவர்தம் கதைகளைப் பற்றி விருப்புடன் பேசினால் அதில் அர்த்தம் உண்டு. அது ஓர் அறச் செருக்கு; மறச்செருக்கு அல்ல. தமது எழுத்தின் தரத்தை. தகுதியை உணர்ந்த, அறிந்த நண்பர்கள் அது பற்றிக் கருத்துத் தெரிவித்தால் அவர் கவனமாகக் கேட்பார். அத்தகைய கருத்துக்களை அவர் காது கொடுத்துக் கேட்பதும், கேட்காததும் கருத்தைத் தெரிவிக்கும் மனிதனைப் பற்றி அவர் வைத்துள்ள மதிப்பு அல்லது செய்துள்ள மதிப்பீடு—அதனைப் பொறுத்ததாகவே இருக்கும். ஒரு கடைத்தர எழுத்தாளன் அவரை முகஸ்துதி செய்வதற்காக அவரது கதையைப் பாராட்டினால் அவர் சீறிவிடுவார். ''நீ யார், என் கதையைப் பாராட்டுவதற்கு?'' என்றே கேட்டு விடுவார். அவர் மதிக்கும் நண்பர்கள் விமர்சன ரீதியில் கருத்துத் தெரிவித்தால், கூர்ந்து கேட்பார். ஆனாலும் அந்த விமர்சனத்தை ஏற்றுக் கொள்வாரா என்று சொல்ல முடியாது. அதை வாங்கி மனசில் அசை போடுவதற்கு வைத்து விடுவார். ஒருமுறை நான் அவரிடம் 'பிரம்ம ராட்சஸ்' என்ற கதையைப் பற்றிப் பேசினேன். ''அந்தக் கதையில் என்னதான் சொல்ல விரும்புகிறீர்கள்? அதில் என்னவோ ஏழு சஞ்சிகளைப் பற்றி வேறு சொல்கிறீர்கள். எதுவும் புரியவில்லையே?'' என்று ஆரம்பித்தேன். முதலில் அவர் அந்தச் சஞ்சிகளை என்னவென்று விளக்கவே தொடங்கி விட்டார். ''இந்த விளையாட்டெல்லாம் வேண்டாம். அந்தக் கதையை ஏன் எழுதினீர்கள்? நோக்கம் என்ன?'' என்று நேராகவே கேட்டேன். உடனே அவர் சடசடவென்று சிரித்தார். பிறகு சொன்னார். ''பச்சையாகச் சொல்லட்டுமா? வார்த்தைகளை வைத்துக்கொண்டு வாசகனைப் பயங்காட்டி மிரட்ட முடியும் என்பதற்காகவே அதனை எழுதினேன். படித்தால் பயமாக இருக்கிறதல்லவா?'' என்று கூறி முடித்து விட்டார் அவர்.

**கேள்வி :**

அவரது தலைமுறையைச் சேர்ந்த எழுத்தாளர்களின் எழுத்துக்களையும், அவர் காலத்து இளம் தலை முறையினரின் எழுத்துக்களையும்—அவற்றில் பொருட்படுத்தத் தகுந்தவற்றை யேனும் — படித்துப் பார்க்கும் பழக்கம் அவருக்கு இருந்ததா? இப் படிப்பு அவரிடம் ஏற்படுத்தும் எண்ணங்களை வெளிப் படையாகச் சொல்வாரா? அல்லது ரகசியமாக வைத்துக் கொள்வாரா?

**பதில் :**

தமது தலைமுறையைச் சேர்ந்த எழுத்தாளர்கள் படைப்புக் கள் எல்லாவற்றையும் அவர் படித்தார் எனச் சொல்ல முடியாது. என்றாலும், அவற்றை அவர் நிறையவே படித் திருந்தார். அவற்றில் பாராட்டுக்குரியவற்றைத் தமது கட்டு ரைகளில் அவர் பாராட்டியும் இருக்கிறார். உதாரணமாக, மணிக்கொடி எழுத்தாளர்கள் எழுதிய கதைகள் சிலவற்றைப் பற்றி மட்டுமல்லாமல், எஸ்.வி.வி., கொனஷ்டை போன்ற வர்கள் எழுத்துக்கள் சிலவற்றையும் அவர் பாராட்டியிருக் கிறார். ராஜாஜியின் அரசியலை அவர் விமர்சனம் செய்ததுண்டு. என்றாலும், அவரது தேவானை என்ற கதையை அவர் பாராட்டியிருக்கிறார். இளம் தலைமுறையைச் சேர்ந்த எழுத் தாளர்களில், அவரது கவனத்துக்கு வந்தவற்றைப் படித்துப் பார்ப்பதும் உண்டு. தமது மனத்தில் அவை பற்றி ஏற்பட்ட கருத்தை அவர் சொல்லத் தயங்குவதில்லை. அதை நேரிலும் சொல்வார்; எழுதவும் செய்வார். அதில் ஒன்றும் அவருக்கு ரகசியம் கிடையாது. இளம் தலைமுறையினரில் நம்பிக்கை யளிக்கக் கூடியவர்களை ஊக்குவிக்கவும் செய்வார். உதாரண மாக, எனது கதைகளைக் கையெழுத்துப் பிரதியிலேயே என்னை வாசிக்கச் சொல்லிக் கேட்பார். சில நல்ல திருத்தங்களுக்கும் கூட அவர் யோசனை கூறியதுண்டு. அதே போல் ஒருமுறை அழகிரிசாமியின் 'வெந்தழலால் வேகாது' என்ற கதையின் சாராம்சத்தை நான் அவரிடம் சொன்னேன். உடனே அவர், "அந்தக் கதையைக் கொண்டுவரச் சொல். அது நல்ல பத்திரி கையில் வெளிவர வேண்டும்" என்று சொல்லி, அந்தக் கதை

யின் கையெழுத்துப் பிரதியைத் தாமே வாங்கி, அதனை ஒரு பிரபல பத்திரிகையில் கொடுத்து வெளிவரவும் செய்தார்.

கேள்வி :

தாம் வாழ்ந்த காலத்தில் தமது எழுத்துக்கள் பரவலாகப் படிக்கப்படவில்லை என்ற குறை அவருக்கு இருந்ததா? அல்லது தமது எழுத்தின் தன்மை அதுபோன்ற ஒரு பிரசாரத்தை அளிக்காது என்ற சுய மதிப்பீடு செய்து கொண்டிருந்தாரா?

பதில் :

அப்படிப்பட்ட குறையும் அவருக்கு இருந்தது. அதே சமயம் தமது எழுத்தின் தன்மை அத்தகையது என்ற பிரக்ஞையும் அவருக்கு இருந்தது. ''புகழ் இல்லாமல் இலக்கிய கர்த்தா உயிர்வாழ முடியாது. நேர்மையான புகழ் இலக்கிய கர்த்தாவுக்கு ஊக்கமளிக்கும் உணவு. இதைக் கொடுக்கக் கூடச் சக்தியற்ற கோழையான ஒரு சமூகத்துக்கு என்ன எழுதிக் கொட்ட வேண்டியிருக்கிறது?'' என்று 'கடிதம்' என்ற கதையில் அவர் எழுதுகிறாரே. அது புதுமைப்பித்தனின் இதயக் குரல் என்றே சொல்லலாம். அதே சமயத்தில் தமது கதைகளை எல்லோரும் ரசித்துவிட முடியாது. அவை பாமர ரஞ்சகமானவையல்ல என்பதையும் அவர் உணர்ந்தே இருந்தார். எனவேதான் அவர் தமது கதைத் தொகுப்பின் முன்னுரையொன்றில் ''வாழையடி வாழையான வரும் எவனோ ஒரு ரசிகனுக்காக நான் எழுதுகிறேன்'' என்று குறிப்பிடவும் நேர்ந்தது. அந்த வாழையடி வாழையான ரசிகர் கூட்டம் இன்றுள்ள அளவுக்குக்கூட அவர் காலத்தில் இல்லை என்பதும் உண்மை. எனவே அப்போதும் அவர் எழுதினார் என்றால், பலனை எதிர்பாராத கர்மயோகியைப்போல், தமது இதயத்தை அழுத்திக் கொண்டிருக்கும் விஷயங்களைக் கதைகளாக எழுதித் தீர்ப்பதொன்றே தமது கடமை என்று அவர் கருதினார். அவ்வாறு பாரத்தை இறக்கி வைப்பதில்தான் அவர் மகிழ்ச்சியும் நிவர்த்தியும் கண்டார் என்றுகூடச் சொல்லலாம்.

**கேள்வி :**

பண்டை இலக்கியத்தில் அவருடைய கவனத்தைக் கவர்ந்த நூல்கள் என்ன? தமிழின் மகோன்னதமான படைப்பு என்று அவர் எதைக் கூறிவந்தார்?

**பதில் :**

பண்டைய இலக்கியங்களில் கம்பராமாயணம், திருப் குறள், கலிங்கத்துப் பரணி, அப்பர் தேவாரம், நாலாயிரப் பிரபந்தத்தில் பெரியாழ்வார், ஆண்டாள் பாசுரங்கள், காரைக் காலம்மையார், பட்டினத்தார் பாடல்கள், சித்தர் பாடல்கள், பின்னால் வந்த சிற்றிலக்கியங்களான நந்திக்கலம்பகம், முக் கூடற் பள்ளு, குற்றாலக் குறவஞ்சி, பஞ்சலட்சணத் திருமுக விலாசம், விறலிவிடு தூதுக்கள் முதலியவை எல்லாமே அவரைக் கவர்ந்திருந்தன என்றே சொல்லலாம். தமிழின் மகோன்னதமான படைப்பு என்று அவர் கருதியது கம்ப ராமாயணம்தான். ‘‘கம்பன் தான் எனக்குத் தமிழ் நடை யைக் கற்றுத் தந்தவன்’’ என்று அவரே கூறுவார். ஒரு பெண்ணை வருணிக்கும்போது அவளைக் ‘‘கவிதா ரசிகனுக்குக் கம்பன் மாதிரி’’ என்று கூட அவர் வருணித்திருக்கிறார்.

**கேள்வி :**

சிலப்பதிகாரம் பற்றி அவர் எதுவும் பிரஸ்தாபித்துள்ள தாக நான் படித்ததில்லை. அந்தக் காப்பியம் அவரைக் கவர வில்லையா? கவர்ந்திருந்தும் அது பற்றி எழுதச் சந்தர்ப்பம் இல்லாது போயிற்றா?

**பதில் :**

சிலப்பதிகாரம் பற்றி அவர் எதுவும் எழுதவில்லை என்பது உண்மைதான். என்றாலும், அந்தக் காவியத்தை அவர் படிக்கவில்லையென்றோ, அது அவரைக் கவரவில்லையென்றோ சொல்லமுடியாது. அவர் சிலப்பதிகாரத்தையும் நன்கு கற்றி ருக்கிறார் என்பதை அவரது ‘சிற்பியின் நரகம்’ என்ற கதையைப் படித்தாலே தெரிந்து கொள்ளலாம். பட்டினப்பா லையையும் சிலப்பதிககாரத்தையும் படித்து, அவற்றில் கண்

டுள்ள புகார் நகரச் சித்திரத்தை மனத்தில் உருவேற்றிக் கொள்ளாமல், அந்தக் கதையில் அவர் காவிரிப்பூம் பட்டினத்தைப் பற்றி எழுதியுள்ள வரிகளையும், அந்தக் காலத்துச் சூழ்நிலையை வடித்துக் காட்டும் கற்பனையையும் எழுதியிருக்கவே முடியாது. இல்லையா?

கேள்வி :

தமிழில் வசனம் தோன்றியபின் எழுந்த இலக்கிய ஆசிரியர்கள் பற்றி அவர் என்ன அபிப்பிராயங்களைக் கொண்டிருந்தார்? வேதநாயகம் பிள்ளை, ராஜமய்யர், மாதவய்யா, வ. வெ. சு. ஐயர், மறைமலை அடிகள், உ. வே. சாமிநாத அய்யர், திரு. வி. க., டி. கே. சி., பரிதிமாற் கலைஞர், எஸ். வையாபுரிப்பிள்ளை, பாரதிதாசன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆகியோர் பற்றி அவருடைய அபிப்பிராயங்களைச் சுருக்கமாகவேனும் கூற முடியுமா?

பதில்:

பலபேரைப் பற்றிய அபிப்பிராயங்களையும் கேட்டு விட்டீர்கள். அவற்றைச் சுருக்கமாகக் கூறுவதும் சங்கடமான காரியம். ஆயினும் இவர்கள் எல்லோரையும் பற்றி அவருக்கு அபிப்பிராயங்கள் உண்டு. வேதநாயகம் பிள்ளையை அவர் தமிழ் நாவலின் தந்தை என்றே மதித்தார். ராஜமய்யரிடம் அவர் ஈடுபாடு கொண்டிருந்ததை ஆடுசாபட்டி அம்மையப்ப பிள்ளையைப் பற்றி அவர் குறிப்பிட்டுள்ளதிலிருந்தே கண்டு கொள்ளலாம். எனினும் ராஜமய்யரின் 'கமலாம்பாள் சரித்திர'த்தை அவர் ''இதன் முற்பாதி நாவல், பிற்பாதி கனவு'' என்று கூறிவிட்டார். பிற்பாதியில் வேதாந்த விசாரம் கதையின் சுவையைக் குறைக்கிறது என்பது புதுமைப்பித்தனின் கருத்து. உண்மையும் அதுதான். மாதவையாவின் குசிகர் குட்டிக்கதைகளை அவர் பாராட்டுவார். எனினும் மாதவையாவின் கதைகள் சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களைக் கொண்டிருந்ததால், கதைகள் வெறும் உபாக்கியானமாக அமைந்து விட்டன என்பது புதுமைப்பித்தன் பட்டுக்கொண்ட குறை. வ. வெ. சு. அய்யர்பற்றிப் புதுமைப்பித்தனுக்கு மிக

வுயர்ந்த அபிப்பிராயம் உண்டு. தமிழில் சிறுகதைக்கு உயிரும் உருவும் கொடுத்தவர் அவர்தான் என்பது அவர் கருத்து. அவரைத் தமிழ்ச் சிறுகதையின் தந்தை என்றே மதிப்பார். உ. வே. சா. தமிழுக்குச் செய்த தொண்டு மிகப்பெரிது என்று போற்றுவார். திரு. வி. க. வின் பத்திரிகையுலக சேவையைப் பாராட்டுவார். ரசிகமணி டி.கே.சி.யிடம் அவருக்கு மிகுந்த மரியாதை உண்டு. அவரது கருத்துக்களோடு புதுமைப்பித்தன் வேறு பட்டதும் உண்டு. பாரதிதாசனைப் 'பாரதி விட்டு வைத்துப்போன சொத்து' என்று புதுமைப்பித்தனே எழுதியிருக்கிறார். அவரைப் பற்றித் தனிக் கட்டுரையும் எழுதியிருக்கிறார். கவிமணியின் கவிதைகளின் எளிமையைப் பாராட்டுவார். ஆனாலும் ச. து. சு. யோகியாரையும் பாரதிதாசனையும் மதித்த அளவுக்கு அவர் கவிமணியைப் போற்றியது இல்லை. பரிதிமாற் கலைஞர், மறைமலையடிகள் முதலியோரைப் பற்றி புதுமைப்பித்தன் உயர்ந்த அபிப்பிராயம் எதுவும் கொண்டிருக்கவில்லை. அதற்கு அவர்களது தனித் தமிழ் நடை என்ற பொய்யான நடைதான் காரணம்.

கேள்வி :

அவசரமாகக் கதைகள் எழுத நேர்ந்தது என்று சற்றுப் பெருமையுடனேயே அவர் சொல்லிக் கொள்கிறார். 'செல்லம்மாள்,' 'சாபவிமோசனம்' 'சுப்பையாபிள்ளையின் காதல்கள்,' 'சிற்பியின் நரகம்' ஆகிய கதைகளைப் படிக்கும்போது நிதானமாக உருவாக்கிய தன்மையை அவை காட்டுகின்றன. சந்தர்ப்ப சௌகரியத்தை ஒட்டி இரண்டு விதமாகவும் அவர் எழுதியிருக்கக் கூடும் என்று தோன்றுகிறது. உங்கள் அபிப்பிராயம் என்ன?

பதில் :

அவசரமாக எழுதினேன் என்று அவர் சொல்வது ஒன்றும் பெருமை பாராட்டிக் கொள்வதல்ல. எனக்குத் தெரிந்த வரையில் அவர் பல கதைகளையும் அப்படித்தான் எழுதினார். அவர் எழுத உட்கார்ந்தால், அசுரவேகத்தில் கை ஓடும். அநேகமாக அடித்தல் திருத்தல் அதிகம் இருக்காது. சில

நிதானமாக யோசித்து எழுதியவையாகத் தோன்றுகின்றன என்கிறீர்கள். ஆனால் அவரே சொல்கிறார், ''எடுத்த எடுப்பில் எழுதியும் வெற்றி காண்பதற்குக் காரணம் என் நெஞ்சில் எழுதாக் கதைகளாகப் பல எப்பொழுதும் கிடந்து கொண்டே இருக்கும். அந்தக் கிடங்கிலிருந்து நான் எப் பொழுதும் எடுத்துக் கொள்வேன்'' என்று. ஆம், எந்தவொரு எழுத்தாளனுக்கும் நெஞ்சக் குகையில் கருக்கொண்டு, மணலின் உறுத்தலைத் தாங்கமாட்டாது சுருண்டு சுருண்டு முத்தாக மாறும் சிப்பிப் புழுவைப்போல் பல கதைகள் உரு வாகி வருவதுண்டு. எனவே எழுதும்போது நிதானம் வேண்டு மென்பதில்லை. எழுதுவதற்கு முன் கதையை நெஞ்சில் உருச் சமைப்பதில்தான் நிதானம் வேண்டும். இவ்வாறு உருச் சமைவது ஒரு நாளிலும் நடக்கலாம். ஒன்பது வருஷமும் ஆகலாம. எனவே புதுமைப்பித்தன் அவசரத்தில் எழுதினேன் என்று சொன்னால், கதையே அவசர கோலத்தில் பிறந்தது என்று அர்த்தமல்ல. அது அவரது நெஞ்சில் வளர்வதற்கு எவ்வளவு காலம் பிடித்ததோ, அது நமக்குத் தெரியாது. சொல்லப்போனால், ஒரே Sittingல் எழுதி முடிக்கும் கதையே மிகவும் நன்றாக வாய்த்து விடுவதுண்டு. எனக்கும் இத்தகைய அனுபவம் ஏற்பட்டதுண்டு.

கேள்வி :

மணிக்கொடிப் பத்திரிகையைச் சிறந்த பத்திரிகையாக அவர் கண்டாரா? அல்லது ஓர் இயக்கத்தின் ஆரம்பமாக எண்ணி இருந்தாரா?

பதில் :

மணிக்கொடிப் பத்திரிகையை அவர் அந்தக் காலத்தின் தரமான பத்திரிகையாகவே மதித்திருந்தார். மணிக்கொடிப் பத்திரிகை வெளிவரும் முன்பு எத்தனையோ இலக்கியப் பத்தி ரிகைகள் இருக்கத்தான் செய்தன. ஆனால் புதிய பரிசோதனை களுக்கு இடம் கொடுக்கும், உற்சாக மூட்டும், அவற்றை வர வேற்கும் பத்திரிகைகள் அதற்கு முன்போ பின்போ கிடை யாது. அவர் தமது காலத்திலேயே எழுதினார். அன்று மறு

மலர்ச்சி என்ற வார்த்தை புதிய வேகமும் பொருளும் கொண்டதாக இருந்தது என்றும், அதனைச் சிலர் வரவேற்றனர்கள், பலர் கேலி செய்தார்கள் என்றும் அவரே குறிப்பிடுகிறார். இந்த மறுமலர்ச்சியின் விடிவெள்ளியாகத்தான் புதுமைப் பித்தன் மணிக்கொடிப் பத்திரிகையைக் கருதினார் என்பதில் சந்தேகம் இல்லை. மணிக்கொடிப் பத்திரிகை நின்று போனதைப் பற்றிக் கூறும்போது, ''இதுதான் மணிக்கொடியின் கதை. தமிழில் புதிய பரிசீலனைகள் செய்ய வேண்டும் என்று கோட்டை கட்டியவர்களின் ஆசையின் கதை. இந்தக் கதையின் ஒரு அம்சம்தான் எனது கதைகள்'' என்று அவரே எழுதியிருக்கிறார்.

கேள்வி :

மேல்நாட்டு இலக்கியத்தில் அவரைக் கவர்ந்த ஆசிரியர்கள் யார்? அவர் செய்த மொழிபெயர்ப்புக்கள் அவருக்குப் பிடித்தவற்றிலிருந்து அவ்வப்போது கைக்குக் கிடைப்பதைப் பத்திரிகைத் தேவையை முன்னிட்டு மொழிபெயர்க்கப் பட்டவையா? அல்லது தமிழ் இலக்கியத்தில் புது முயற்சிகளைத் தூண்டவேண்டும் என்ற பிரக்ஞையில் தேர்ந்தெடுக்கப் பட்டவையா?

பதில் :

நான் அவரோடு பழகத் தொடங்கிய காலத்தில் அவர் எந்தெந்த ஆசிரியர்களிடம் ஈடுபாடு கொண்டிருந்தார் என்று முன்பே கூறியிருக்கிறேன். மேலை நாட்டு ஆசிரியர்களில் அவரைக் கவர்ந்த எழுத்தாளர்கள் பலர். ஆங்கில எழுத்தாளர்களில் ஷேக்ஸ்பியர், தாமஸ் ஹார்டி, பிரெஞ்சு எழுத்தாளர்களில் எமிலி ஜோலா, பால்ஜாக், அமெரிக்க எழுத்தாளர்களில் மார்க் ட்வெய்ன், சிங்க்ளர் லெவிஸ், ஹென்றி மில்லர், இத்தாலிய எழுத்தாளர்களில் பொக்காசியோ, லூயிஜி பிரண்டெல்லோ, இக்னேஷியோ சைலோன், ரஷ்ய எழுத்தாளர்களில் டால்ஸ்டாய், டாஸ்டாவ்ஸ்கி, செகாவ்— இவ்வாறு ஒரு பெரிய பட்டியலே போட்டுக் கொண்டு போகலாம். ரஷ்ய

நாட்டின் தற்கால இலக்கியங்களில் இலியா இரென்பர்கின் Fall of Paris, வாஸிலி கிராஸ்மனின் The People Immortal இரண்டையும் அவர் படித்திருந்தார். எனினும் மாக்சிம் கார்க்கியின் Mother நாவலை அவர் படித்ததாகத் தெரிய வில்லை.

கதைகளை மொழிபெயர்க்கும்போது அவர் திட்டமிட்டுச் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து மொழிபெயர்த்ததாகத் தெரிய வில்லை. சொல்லப்போனால், அந்தக் காலத்தில் அயல் நாட்டுக் கதைகளை மொழிபெயர்த்துத் தந்த மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் பலரும், தாம் படித்த கதை நன்றாக இருப்ப தாகத் தோன்றினால் அதனை மொழிபெயர்த்து வழங்க வேண் டும் என்ற நோக்கிலேயே செயல்பட்டார்கள் எனலாம். என் றாலும் பிற நாட்டுக் கதைகளை அப்படியே தமிழில் அறிமுகப் படுத்துவதன் மூலம் பிற நாட்டு இலக்கிய வளர்ச்சியைத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகப் படுத்தும், இங்கும் புது முயற்சிகளைத் தூண்டும் பிரக்ஞையும் புதுமைப்பித்தன் உட் பட பலருக்கும் ஓரளவுக்கு இருந்தது என்றே சொல்லலாம்.

கேள்வி :

அவர் இரண்டு வாழ்க்கை வரலாறுகளை எழுதியிருக் கிறார். ஒன்று ஹிட்லரைப் பற்றி. மற்றொன்று முசோலினி யைப் பற்றி. இந்தச் சர்வாதிகாரிகள் பேரில் அவருக்குப் பாராட்டுணர்வு இருந்ததா? அறிமுகப்படுத்தும் நோக்கம் மட்டும்தான் எனக் கொண்டாலும் இவர்களைத் தேர்ந் தெடுக்கக் காரணம் என்ன?

பதில் :

ஆம். அவர் ஹிட்லரைப் பற்றியும் முசோலினியைப் பற்றி யும் அவர் இரு வரலாற்று நூல்கள் எழுதியுள்ளார். எனினும் அவற்றின் தலைப்புக்களே அவர்களை அவர் எப்படி மதித்தார் என்பதை விளக்கி விடும். ஹிட்லரைப்பற்றிய நூலின் தலைப்பு 'கப்சிப் தர்பார்'. முசோலினியைப்பற்றியதன் தலைப்பு 'பேசிஸ்டு ஜடாமுனி.' புதுமைப்பித்தன் ஏகாதிபத்திய விரோதியாகத்

தான் இருந்தார் என்று முன்னர் சொன்னேன். நாஜிசத்தையும் பாசிசத்தையும் அவர் எவ்வாறு மதித்தார்? ''சோனியாக மெலிந்து வந்த முதலாளித்துவம் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள மிகுந்த பயத்துடன் பெற்றெடுத்த குழந்தைகள் தான் பாசிசமும் நாஜிசமும்'' என்று அவரே எழுதியுள்ளார். அதேபோல் முசோலினியின் பாசிசத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, ''பாசிசம் புதிதாகப் பிறந்த தத்துவமல்ல. புராதன எதேச்சாதிகாரத்துடன், தற்போதைய மெஷின் யுகத்தின் அவசியத்துக் கேற்ப மனிதச் சிந்தனையையும் சுதந்திரத்தையும் நசுக்குவதற்காக கட்டிக்கோக்கப்பட்ட கடுதாசிக் குப்பையே அது'' என்று எழுதி, ''இது நிரந்தரமான தத்துவமாக இருக்க முடியாது என்பதில் ஆச்சரியமில்லை'' என்றே முடிக்கிறார்.

பின் ஏன் அவர் இவர்களைப்பற்றி எழுதினார்? 1937ம் வருஷத்தில் மணிக்கொடிப் பத்திரிகையைச் சேர்ந்தவர்கள் நவயுகப் பிரசுராலயம் என்ற புத்தக வெளியீட்டுப் பிரிவையும் தொடங்கி, மளமளவென்று பல புத்தகங்களை வெளிக் கொணர்ந்தார்கள். புதுமைப்பித்தன் கதைகளும் அதன் வெளியீடாகவே வெளிவந்தது. அந்தப் புத்தக வெளியீட்டுப் பிரிவில் பலரது வாழ்க்கை வரலாறு நூல்களும், முக்கியமாக அரசியல் உலகில் பிரபலமானவர்களின் வரலாற்று நூல்களும் வெளிவந்தன. உதாரணமாக ஈமன் டிவேலரா, மைக்கேல் காலின்ஸ், லெனின் முதலியோரின் வரலாறுகள் வெளிவந்தன. இந்த வரிசையில் பல எழுத்தாளர்களும் எழுதினார்கள். இந்த வரிசையில்தான் புதுமைப்பித்தன் ஒரு நூலைத் தனியாகவும் இன்னொன்றை இவர் பாதியும் இன்னொருவர் பாதியுமாக எழுதி முடித்தனர். அவைதான் முசோலினியையும் ஹிட்லரையும் பற்றிய நூல்கள். இந்த இரு புத்தகங்களையும் அசுரவேகத்தில் எழுதி முடித்து விரைவில் கொண்டுவர வேண்டும் என்ற அவசரமே, இந்தப் புத்தகங்களை எழுதி முடிக்கும் பொறுப்பை இவரிடம் தள்ளிவிடச் செய்திருக்கும் என்றே நினைக்கிறேன். வேறு விசேடக் காரணங்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

**கேள்வி :**

எழுதவிருக்கும் கதைகளைப்பற்றி அவர் உங்களிடம் கூறியதுண்டா? அப்படிக் கூறும்போது கதையின் சிந்தனை அம்சத்தைப்பற்றிப் பேசுவாரா? அல்லது சம்பவக் கோவையுடன் கதையைச் சொல்வாரா?

**பதில் :**

எழுத நினைத்திருக்கும் கதைகளைக் குறித்து அவர் கூறியதுண்டு. அப்படிப் பல கதைகள் கூறியிருக்கிறார். ஆயினும் கதையைச் சம்பவக் கோவையாகச் சொல்ல மாட்டார். கதையில் தாம் பிரதிபலிக்கவிருக்கும் மையக் கருத்தை, அது சம்பந்தப்பட்ட கதை அம்சத்தை மட்டும்தான் கூறுவார். உதாரணமாக, 'அன்றிரவு' கதையை எழுதிய மாதிரி, பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்த புராணக் கதையை மையமாகக் கொண்டு ஒரு கதை எழுத வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். கதையம்சமும் கருத்தும் இதுதான். பாற்கடலை அசுரர்களும் தேவர்களும் கடையவில்லை. மாறாக தேவர்கள்தான் இரண்டு பக்கமும் நின்று கடைந்தனர். ஒரு பக்கத்திலுள்ள தேவர்கள் கடைவதைத் தர்மமாகக் கருதிப் பயன் கருதாது கடைந்தார்கள். மறுபக்கத்திலுள்ளவர்கள் அமுதம் வந்தால் எப்படி பங்கு வைக்கலாம் என்ற எண்ணத்திலேயே கடைந்தார்கள். அப்படி நினைத்தவர்களின் எண்ணம் வலுப்பெற வலுப்பெற அவர்கள் அசுரராக மாறிவிட்டார்கள். இதுதான் அவர் சொன்ன கதை. இதேபோல் பட்டினத்தாரை வைத்து ஒருநெடுங்கதை அல்லது நாவல் எழுதவேண்டும் என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார். பட்டினத்தாருக்கு வாழ்க்கையில் பாசமும் பற்றும் கடைசியில்தான் அறுந்தன என்பது கதைப் பொருள். மனைவி, மகன், தாய் ஆகிய மூன்று பாசக் கயிறுகள் அவரைப் பிணித்திருக்கின்றன. முதலில் மகன் மறைகிறான். பிறகு மனைவியை விட்டு அவர் பிரிகிறார். என்றாலும் தாயின்மீது பாசம் அறவில்லை. அது அவளைச் சிதையில் ஏற்றிய பின்னர்தான் அறுகிறது. இந்தப் பாசப் பிணைப்பின் காரண

மாகவே அவருக்குச் கசப்புணர்வு ஏற்படுகிறது. இந்தப் பாசக் கயிறுகள் அறுந்து விடுதலை பெற்ற பிறகுதான் அவருக்குப் பேய்க் கரும்பும் இனிக்கிறது. இப்படிச் சென்றது அவரது கற்பனை. அவர் இவ்வாறு பட்டினத்தாரைப் பற்றி எழுத வேண்டும் என்ற எண்ணம், இதே போன்ற தொனியில் Christ ஐப்பற்றி எழுதப்பட்டிருந்த A Certain Jesus என்ற மேலை நாட்டு நாவலைப் படித்ததினால் எழுந்தது என்றும் அவரே சொல்லியிருக்கிறார். இப்படி அவர் சொன்ன கதைகள் எத்தனையோ உண்டு. எனினும் அவை யாவும் கருக் கொண்டதோடு சரி. உருப்பெற்று வெளிவரவே யில்லை.

கேள்வி :

பாரதியாரின் 'சந்திரிகையின் கதை'க்கு எதிரொலிபோல் 'கோபாலய்யங்காரின் மனைவி' என்று புதுமைப்பித்தன் ஒரு கதை எழுதியிருக்கிறார் என்பது உங்களுக்கு நினைவிருக்கும். இவற்றின் அடிப்படையில் பாரதியாரை முற்போக்காளர் எனவும் புதுமைப்பித்தனைப் பிற்போக்காளர் எனவும் சிலர் வகுக்கிறார்கள். உங்கள் கண்ணோட்டம் என்ன?

பதில் :

இவ்வாறு பாரதியைப் பற்றியும் புதுமைப்பித்தனைப் பற்றியும் எரிந்த கட்சி, எரியாத கட்சி ஆடுபவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். பாரதியைப் புதுமைப்பித்தன் பெரிதும் மதித்தார். இந்த நூற்றாண்டில் நல்ல இலக்கியம் படைக்க முனைந்த எந்தவொரு எழுத்தாளரும் எவ்வாறு பாரதியின் செல்வாக்கிற்கு ஆட்படத் தவறவில்லையோ அவ்வாறே புதுமைப்பித்தனும் தவறவில்லை. உதாரணமாக, அவர் கதை எழுதிய காலத்தில் ஓர் அதிர்ச்சி வைத்தியக் கதையாக விளங்கி, பெரிதும் சர்ச்சைக்குள்ளான கதையான 'பொன்னகரம்' என்ற கதைக்கு அடியெடுத்துக் கொடுத்தவரே பாரதியார் தான். ''கற்பு கற்பு என்று கதைக்கிறீர்களே, இதுதானய்யா பொன்னகரம்!'' என்று முடிக்கிறாரே கதையை. அதுவே பாரதியின் எதிரொலிதான்.

பேணுமொரு காதலினைக் கருதியன்றோ
பெண்மக்கள் கற்புநிலை பிறழுகின்றார்;
காணுகின்ற காட்சியெல்லாம் மறைத்துவைத்துக்
கற்புகற்பு என்றுஉலகோர் கதைக்கின்றாரே.

என்ற பாரதியின் அடிகள்தான் பொன்னகரம் கதைக்கான தோற்றுவாயும் விளக்கமும் ஆகும். இதேபோல் 'துன்பக் கேணி' என்ற அவரது நெடுங்கதைக்கு அடியெடுத்துக் கொடுத்ததும் பாரதியின் 'கரும்புத் தோட்டத்திலே' என்ற பாட்டுத்தான். "துன்பக் கேணியிலே எங்கள் பெண்கள் அழுங்குரல் மீட்டும் உரையாயோ?" என்று பாரதி கேட்டாரே. அதற்குப் பதில் எழுதுவதுபோலத்தான் கரும்புத் தோட்டத்துக்குப் பதிலாக, தேயிலைத் தோட்டத்தைக் களமாக்கி. 'துன்பக்கேணி' என்ற கதையில் தமிழ்நாட்டுப் பெண்கள் பட்ட துயரைக் கூறினார் புதுமைப்பித்தன். என்றாலும், 'கோபாலய்யங்கார் மனைவி' என்ற கதையை அவர் ஏன் எழுதினார்? பழைய கதைகளை எடுத்து அதற்கு ஒரு twist கொடுத்து, புதுமைப்பித்தன் எழுதியதற்கு அன்றிரவு, அகல்யை, சாப விமோசனம் எல்லாம் உதாரணங்கள். அதே போலத் தான் பாரதியார் கதைக்கும் அவர் ஒரு twist கொடுத்து, அதனை ஒரு நகைச்சுவைக் கதையாக மாற்றினார். இந்தச் செயலில் வேடிக்கைத் தன்மையைத் தவிர விஷமத் தன்மை எதுவும் கிடையாது. எனவே, இதை வைத்துக் கொண்டு மட்டும் முற்போக்கு, பிற்போக்கு என்று எரிந்த கட்சி, எரியாத கட்சி ஆட இடமில்லை. ஆனாலும் புதுமைப் பித்தன் விஷயத்தில் அவ்வாறு கட்சியாட இடமுண்டு. அதற்குக் காரணங்களும் வேறு விஷயங்களில்தான் உள்ளன.

கேள்வி :

புதுமைப்பித்தன் யாப்பையும் ஏற்றுக் கொள்ளவில்லை, வசன கவிதையையும் ஏற்றுக் கொள்ளவில்லை என்று புதுமைப் பித்தன் கவிதைகளுக்கு எழுதிய முன்னுரையில் சாராம்சமாகக் கூறி இருக்கிறீர்கள். யாப்பையும் துறந்த, வசன கவிதையும் அல்லாத இன்றைய புதுக் கவிதைகளைப் புதுமைப்பித்தன் வரவேற்றிருப்பாரா? புதுமைப்பித்தனின் கவிதை முயற்சிகள் தற்கால இலக்கியத்தில் என்ன பாதிப்பை ஏற்படுத்தி இருக்கிறது?

யாருடைய கவிதைகளை அவருடைய முயற்சிகளின் தொடர்ச்சியாகப் பார்க்கிறீர்கள்?

பதில் :

புதுமைப்பித்தனே 'பாட்டும் அதன் பாதையும்' என்ற கட்டுரையில் ''குறிப்பிட்ட யாப்பமைதி பழக்கத்தினுலும் வகையறியா உபயோகத்தினுலும் மலினப்பட்டு வரும்போது ரூபத்தின் மீது வெறுப்பு ஏற்படுவது இயல்பு. ரூபமில்லாமல் கவிதை இருக்காது. கவிதை யுள்ளதெல்லாம் ரூபம் உள்ளது என்று சொல்ல வேண்டும். இன்று ரூபமற்ற கவிதை எனச் சிலர் எழுதி வருவது எவற்றையெல்லாம் ரூபமென்று பெரும் பாலோர் ஒப்புக் கொள்கிருர்களோ அவற்றுக்குப் புறம்பான ரூபத்தை அமைக்க முயல்கிருர்கள் எனக்கொள்ள வேண்டுமே ஒழிய அவர்கள் வசனத்தில் கவிதை எழுதுகிருர்கள் என்று நினைக்கக்கூடாது. அவர்கள் எழுதுவது கவிதையா இல்லையா என்பது வேறு பிரச்னை. இன்று வசன கவிதை என்ற தலைப்பில் வெளிவரும் வார்த்தைச் சேர்க்கைகள் வசனமும் அல்ல, கவிதையும் அல்ல'' என்று எழுதியிருக்கிருர். இன்று புதுக் கவிதை என்று பெயரை மாற்றிக்கொண்டு வந்துள்ள படைப்புக் கள் பழைய வசன கவிதைப் பாணியிலேயே பெரும்பாலும் இருக்கின்றன. எனவே இந்தப் படைப்புக்களைப் புதுமைப்பித் தன் வரவேற்றிருப்பார் என்று நான் கருதவில்லை.

புதுமைப்பித்தன் அவரே சொன்ன மாதிரி ஒரு புதிய ரூபத்தில் கவிதை எழுதும் முயற்சியைத் தொடங்கி வைத்தார். எனினும் அவர் அவ்வாறு எழுதிய கவிதைகளில் 'நிசந்தானே சொப்பனமோ?' 'ஓடாதீர்!' 'காதல் பாட்டு,' 'மாகாவியம்' என்ற நான்கும்தான் உருப்படியானவை, என்ருலும், அவருக்கே இது தொடக்கம்தான். ஒருவேளை அவர் உயிரோடு இருந்திருந்தால் இதே பாணியில் மேலும் வலுவான சோதனை களைச் செய்திருக்கலாம். அவரது கவிதைகளால் அதிகமான பாதிப்பு எதுவும் தமிழ் இலக்கியத்தில் ஏற்பட்டுவிடவில்லை. என்ருலும், காலஞ்சென்ற திருலோக சீதாராமும் நானும் அவரது கவிதையின் உருவ ரகசியத்தைப் புரிந்து கொண்டு அந்த வழியில் நடை பயின்று சில கவிதைகளை எழுதியிருக் கிருேம் என்று நினைக்கிறேன். என்னைப் பொறுத்தவரையில்

இந்த ரூபத்தைப் பல விதத்திலும் வளர்த்துப் பயன்படுத்தி யிருக்கிறேன் என்றும் நினைக்கிறேன். என்னைப் பின்பற்றி இந்த ரூபத்தைக் கையாண்டு சிலர் அடியொற்றி வருவதை யும், வர முயல்வதையும் பார்க்கிறேன்.

**கேள்வி :**

புதுமைப்பித்தன் அதிக வெற்றியடைந்த இலக்கியத் துறை எது? சிறு கதையா? குறு நாவலா? நாடகமா? கவிதையா?

**பதில் :**

புதுமைப்பித்தன் சிறுகதை, குறுநாவல், நாடகம், கவிதை எல்லாம் எழுதியிருந்தாலும், அவர் பெரு வெற்றியடைந்த ஒரே துறை சிறுகதை மட்டும்தான். அதில் சந்தேகமில்லை. அவர் எழுதியுள்ள 'சிற்றன்னை' என்ற குறுநாவலும் அவரது மேதாவிலாசத்துக்கொத்த சிறந்த படைப்பு எனச் சொல்ல முடியாது. நாடகம், கவிதை முதலியவை யெல்லாம் அவரைப் பொறுத்தவரையில் சோதனை நிலையோடு நின்றுவிட்டன என லாம். சிறு கதையைத் தவிர, அவர் நாவல் துறையிலும் வெற்றி பெற்றிருக்க வாய்ப்பு இருந்தது. நாவல் எழுதுவதற் கான அனுபவம், திறமை, வாழ்க்கையைப் பரந்த வீச்சில் பார்க்கும் பார்வை, பலவிதமான பாத்திரங்களையும் வடிக்கும் திறமை எல்லாம் அவருக்கு இருந்தன. ஆனால் நாவல் எழுதுவ தென்றால் இவற்றோடுகூட, அதில் முழுமூச்சாக ஈடுபட்டு, அதனை எழுதி முடிப்பதில் தொடர்ச்சியான விடாமுயற்சியும், திட்டமிட்டுச் செயலாற்றுவதும் அவசியமாகும். ஆனால் புதுமைப்பித்தன் அப்படியெல்லாம் திட்டமிட்டு எதையும் செய்ததும் இல்லை; அவரது போக்குக்கும் அப்படி யெல்லாம் திட்டமிடவும் முடியாது. எனவேதான் Forsyte Saga மாதிரி பல தலைமுறைக் காலத்தை உள்ளடக்கி அவர் எழுதத் திட்ட மிட்டிருந்த 'அன்னையிட்ட தீ!' என்ற நாவல் கூட, நாலாவது அத்தியாயத்தைத் தாண்டாமல் அரைகுறையாக நின்று விட்டது.

**கேள்வி :**

**அவருடைய சிறந்த சிறுகதைகள் என நீங்கள் எதை மதிக் கிறீர்கள்? அதற்கு என்ன விளக்கம் தருவீர்கள்?**

பதில் :

சிறந்த சிறுகதைகள் எவை எனக் குறிப்பிடும் முன்னர் புதுமைப்பித்தனின் பொதுவான சிறப்புக்கள் என்ன என்பதை யும் குறிப்பிட வேண்டும் என்று நினைக்கிறேன்.

முதலாவதாக, வாழ்க்கையில் பிறர் எதிர்நின்று பார்ப்ப தற்கே கூசிய சமுதாயப் புன்மைகளைச் சாட்டையடி கொடுப்பது போல் எதிர்த்துச் சாடியதில் புதுமைப்பித்தனே தமிழ்ச் சிறு கதை உலகில் முதல் எதார்த்தவாதியாகவும் கலகக் கார ராகவும் விளங்கினார். அவரது கதைகள் பலவும் சமுதாயத்தை நோக்கி ஆணித்தரமான கேள்விகளை எழுப்பின. அழுகி நாற்றமெடுத்துப் போன சமுதாய நியதிகள், சம்பிரதாயங் கள், ஊழல்கள் முதலியவற்றைக் கீறிப்பிளந்து காட்டின. இந்த மாதிரியான விஷயங்களைச் சுட்டிக்காட்டி, 'கவந்தனும் காமனும்' கதையில் அவர் எழுதியுள்ளதைப் போல், ''சும்மா நாசுக்காகக் கண்களை மூடிக்கொள்ளாதீர்கள்'' என்று இடித்துக் கூறி, இதற்கு நீங்களும்தான் பொறுப்பு என்று சொல்லாமற் கூறின. இந்த நோக்கிலே பார்த்தால் 'கவந் தனும் காமனும்', 'பொன்னகரம்', 'துன்பக்கேணி' 'கல்யாணி', 'வழி' 'மகாமசானம்', 'ஆண் சிங்கம்' முதலிய கதைகள் சிறந்தவை என்று கூறலாம்.

இரண்டாவது, அவர் காலத்திய எழுத்தாளர்கள் பலரும் வெறுமனே காதல்-கத்திரிக்காய் என்று பொதுவாகக் கதை பண்ணிக்கொண்டும், கருத்தாழமற்ற சாதாரணக் குடும்பக் கதைகளை எழுதிக்கொண்டும் இருந்த சமயத்தில் அவர் ஒருவர் தான், சமுதாய அமைப்பின் பொருளாதார உறவுகள், முரண் பாடுகள், சுரண்டல் முதலியவற்றினால் வாழ்க்கையில் எழும் பிரச்சினைகளை மையமாகக் கொண்டு கதைகள் எழுதினார். ''வறுமை என்பது முதலாளித்துவத்தின் விலக்க முடியாத நியதி. வியாதியும் கூட. மனித சமூகத்தின் அபார, அற்புதக் கற்பனையான தெய்வம் என்ற பிரமை தனக்கு ஆக்கவும், வளர்க்கவும். அழிக்கவும் சக்தி இருக்கிறது என்று வேண்டு மானால் பெருமையடித்துக் கொள்ளலாம். ஆனால் இந்தக் குசேல வியாதியைப் போக்கும் சஞ்சீவி மனிதன் வசம்தான் உண்டு'' என்று தமிழ் இலக்கிய உலகில் முதல் குரல் கொடுத்

தவர் அவர்தான். ஆனால் இந்த சஞ்சீவி எங்கே யார் வசம் இருக்கிறது என்பதை அவர் சுட்டிக் காட்டாவிட்டாலும், தொட்டுக்கூடக் காட்டாவிட்டாலும், இந்தக் குசேல வியாதி யின் ஆணி வேர் எங்கிருந்தது என்பதை அவர் உணர்ந்தே இருந்தார். ''பட்டணத்திலே மாவிலைக்கும் கூட காசு கொடுத் துத்தான் வாங்க வேண்டும். மாவிலைக்குமா விலை என்று மலைத் துப் போகாதீர்கள். மாவிலைக்கு விலையில்லை என்று வேண்டு மானால் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் மரத்தில் ஏறிப் பறித்து வீடு கொண்டு வந்து கொடுப்பதற்குக் கூலி கொடுக்க வேண்டுமா இல்லையா? நாங்கள் படித்த பொருளாதார சாஸ் திரப்படி இந்த உழைப்பின் மதிப்பை அந்த இலையின்மீது ஏற்றி வைத்துப் பார்க்க வேண்டும். அதுதான் விலை என்பது. பட்டணவாசிகள் மண்முதல் மாங்காய் வரை எல்லாப் பொருள் களையும் விலை கொடுத்து வாங்க முயற்சிக்கிறார்கள். இதுதான் அழகு, நாகரிகம்!'' என்று 'விநாயகர் சதுர்த்தி' என்ற கதையிலே அவர் எழுதினார். 'இரும்பு யுகம்' என்று அவர் குறிப் பிடும் இன்றைய சமுதாய அமைப்பில் எல்லாமே விலைக்கு வாங்கப்படுவதுதான் நாகரிகமாக இருக்கிறது என்பதை அவர் கண்டார். இந்த உணர்வின் பயனாகத்தான் அவரது கதைகள் பலவும் பொருளாதார உறவின் விளைவாக எழும் பிரச்சினைகளை அடி நாதமாகக் கொண்டிருந்தன. இவ்வாறு பார்த்தால் 'மனித எந்திரம்', 'ஒருநாள் கழிந்தது', 'இது மெஷின் யுகம்', 'நியாயம்தான்', 'செல்லம்மாள்', 'நாசகாரக் கும்பல்' முதலியவை எல்லாம் சிறந்த கதைகளாக விளங்கு கின்றன எனலாம்.

மூன்றாவதாக காலஞ்சென்ற நண்பர் கு. அழகிரிசாமி புதுமைப்பித்தனைப் பற்றி எழுதும்போது, ''இருபதாம் நூற் றாண்டின் தமிழ்க்கவிதைக்குப் புதுமையும் புத்துயிரும் கொடுத் தவர் பாரதி. தமிழ் வசனத்துக்குப் புதுமையும் புத்துயிரும் கொடுத்தவர் புதுமைப்பித்தன். ஆனால் பாரதிக்கு முன் தமிழில் மிகச்சிறந்த கவிச் செல்வங்கள் இருந்தன. புதுமைப் பித்தனுக்கு முன் மிகச் சிறந்த வசனச் செல்வங்கள் இருந்தன எனச் சொல்ல முடியாது. புதுமைப்பித்தனின் இலக்கியம் தமிழ் நாட்டு வசன இலக்கியத்தின் சொத்து. அவர் வசன

இலக்கிய மன்னர்'' என்று எழுதினர். இந்தச் சிறப்பும் புது மைப்பித்தனுக்கு உண்டு. சொல்லப்போனல், ஏனைய பல எழுத்தாளர்களின் கதைகளைப்போல், சரித்திரக் கதையானுலும் சமூகக் கதையானுலும் தம்புராவை மாதிரி வசன நடை ஒரே சுருதியில் பேசிக் கொண்டிராமல், கதையின் கரு, காலம், களம், பாத்திரம் ஆகியவற்றுக்கேற்ப, புதுமைப்பித்தனின் தமிழ்நடை சுருதி மாறிப் பேசும். பொதுவாக இந்தச் சிறப்பு அவரது பெரும்பான்மையான கதைகளுக்கு உண்டு. சிற்பியின் நரகம், அன்றிரவு, சாப விமோசனம் முதலிய கதைகள், மற்றும் நெல்லை வட்டார வழக்கைக் கொண்டு அவர் எழுதிய பல கதைகள் யாவும் இந்தச் சிறப்புக்கு உள்ளானவை.

இவை தவிர கதை சொல்லும் முறை, கதை அமைப்பில் புதுப்புது வடிவங்கள் முதலியனவற்றுக்கும் சிறந்த உதாரணங் களாக அவரது பல கதைகளைச் சுட்டிக் காட்ட முடியும்.

சிறப்பைக் கூற வந்த நான் அவரது கதைகளில் புகுந்துவிட்ட ஒரு குறையையும் சுட்டிக் காட்ட வேண்டும் என்று நினைக்கிறேன்.

ஆரம்ப காலத்தில் சமூகத் தீமைகளை அங்கீகரிக்காது அதற்குச் சாட்டையடி கொடுத்துக் கலகக் கொடி தூக்கிய புதுமைப்பித்தனின் கதைகளில் ஒரு தர்மாவேசமும் ஆத்திர மும் இருந்தன. ஆனல் வாழ்வின் பிற்பகுதியிலோ இந்த ஆவேசம் அடங்கி, தர்ம விசாரம் என்ற பெயரில் லௌகிகச் சம்பிரதாயங்கள் சிலவற்றுக்கு வளைந்து கொடுக்கும் போக்கு அவரது கதைகளில் தென்பட்டது. உதாரணமாக அவர் முதலில் எழுதிய 'அகல்யை' கதையில் ''சந்தர்ப்பத்தினல் உடல் களங்கமானல் அபலை என்ன செய்ய முடியும்? மனத் தூய்மையில்தான் கற்பு'' என்று கூறி, அகல்யையை மன் னித்த அவர், பல ஆண்டுகளுக்குப் பின்னல் உருவ அமைதி யிலும் சொல்லாட்சியிலும் பன்மடங்கு சிறந்த முறையில் எழுதிய 'சாப விமோசனம்' என்ற அகல்யை பற்றிய கதையில் ''சாபத்துக்குத்தானே விமோசனம், பாபத்துக்கு இல்லையே'' என்று மனம் குமைந்து மீண்டும் அகலிகையைக் கல்லாக்கி விடுகிறுர். முன்னதில் லௌகிக நியதிகளையும் மீறி இதய நீதி பேசும் புதுமைப்பித்தன், பின்னதில் இதயத்தையுப்

லௌகிக தர்மம் எனப்படுவதற்கு இரையாக்கி விடுவதைப் பார்க்கிறோம்.

இதைப் போலவே, 'காலனும் கிழவியும்' என்ற அவரது முற்காலக் கதையில், "உன்னால் என் உசுரத் தானே எடுத்துக்கிட்டுப் போவமுடியும். யோசிச்சுப்பாரு, ஒண்ணெ வேறையா மாத்த முடியும். உன்னாலே அழிக்க முடியுமா? அதை உன்னைப் படைச்ச கடவுளாலேயே செய்ய முடியாதே!" என்று எமனிடமே எதிர்ச்சவால் விடுத்து, materialism பேசும் கிழவியைப் பார்க்கிறோம். ஆனால் புதுமைப்பித்தன் கடைசியாக எழுதிய கதை எனக் கருதத் தக்க 'கயிற்றிரவு' என்ற கதையிலோ, "நான் ஓடினால் காலம் ஓடும். நான் அற்றால் காலம் அற்றுப் போகும். காலம் ஓடுகிறதா? ஞாயிறு — திங்கள் — செவ்வாய் — நான் இருக்கும் வரைதான் அதுவும். நான் அற்றுப் போனால் காலமும் அற்றுப்போகும். வெறும் கயிற்றரவு!" என்று தன்னளவே உலகம் என்று தனிமனித வாதத்தின் உச்ச நிலையில் நின்று existentialism பேசும் புதுமைப்பித்தனைக் காண்கிறோம். இதிலும் முன்னதில் இருந்த புரட்சித் தன்மை பின்னதில் குடியோடிப் போகிறது. அவரே குறிப்பிட்ட அவரது கதைகளின் 'நம்பிக்கை வறட்சி', அதன் தர்க்கரீதியான விளைவாக அவரை எப்படிப்பட்ட தனிமைவாதத்திற்கு கொண்டு போய் நிறுத்துகிறது என்பதையே இவை யாவும் புலப்படுத்துகின்றன. இது இன்றைய எழுத்தாளர்களுக்கு ஓர் எச்சரிக்கையும் பாடமும் ஆகும் என்றுதான் கருதுகிறேன்.

**கேள்வி :**

புதுமைப்பித்தன் எழுத்துக்களில் இன்னும் அச்சேறுதவை எவை? அவற்றை அச்சில் கொண்டுவர நீங்கள் ஏதேனும் முயற்சி எடுத்து வருகிறீர்களா?

**பதில் :**

புதுமைப்பித்தன் எழுத்துக்களில் இன்னும் புத்தக வடிவில் வெளிவராதவை அவர் எழுதிய புத்தக மதிப்புரைகள், மற்றும் ரசமட்டம் என்ற புனைபெயரில் அவர் தினமணியில்

கல்கியோடு நடத்திய வாக்குவாதக் கட்டுரைகள், அபூர்ணமாக நின்று விட்ட 'அன்னை இட்ட தீ' என்ற நாவலின் சில அத்தியாயங்கள் ஆகியவைதான். இவற்றையெல்லாம் நான் ஏற்கெனவே சேகரித்துக் கொடுத்தாயிற்று. அவை இன்னும் புத்தகமாக வெளிவராததற்கு நான் பொறுப்பாளியல்ல.

கேள்வி:

புதுமைப்பித்தன் எழுத்துக்களைப்பற்றி உருப்படியான மதிப்பீடுகள் புத்தக உருவில் வந்துள்ளதா? உதிரியாக வந்துள்ள கட்டுரைகளில் எவை உங்களுக்கு ஏற்றுக் கொள்ளும் படியாக இருந்தன?

பதில்:

ஒரு சில புத்தக வடிவில் வந்துள்ளன. என் பார்வையில் பட்ட வரையில் இரா. தண்டாயுதம் 'தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள்' என்ற தலைப்பில் எழுதியுள்ள நூலில் புதுமைப்பித்தனைப் பற்றிப் பல பக்கங்களில் சற்று நீளமாகவே எழுதியிருக்கிறார். திருநெல்வேலி தனித்தமிழ்க் கழகம் நடத்திய 'புதுமைப்பித்தன்' பற்றிய கட்டுரைப் போட்டியில் முதற்பரிசு பெற்ற 'பொதியவெற்பன்' என்ற இளைஞரின் கட்டுரையும் நூல் வடிவில் வந்துள்ளது. சுமார் 100 பக்கமுள்ள இந்த நூல் இளைஞர் ஒருவரின் முயற்சி என்ற முறையில் பாராட்டத்தக்கதாகவே உள்ளது. அண்மையில் மதுரை பல்கலைக் கழகப் பேராசிரியர் ஒருவர் புதுமைப்பித்தன் பற்றிய திறனாய்வு ஒன்றை எழுதியுள்ளதாகக் கேள்விப்பட்டேன். நான் அதனை இன்னும் பார்க்கவில்லை. வெளிநாட்டிலும் புதுமைப்பித்தனைப் பற்றிய மதிப்பீடுகள் நடைபெற்றுள்ளன. உதாரணமாக, சோவியத் நாட்டில் எல். பைச்சிக்கினா என்ற பட்டமேற் படிப்பு மாணவர் ஒருவர் புதுமைப்பித்தனைப் பற்றி ஓர் ஆய்வுரை எழுதி முடித்திருக்கிறார். இதுவும் என் பார்வைக்கு இன்னும் கிட்டவில்லை. உதிரியாக வந்த கட்டுரைகளில் பலவும் யானை பார்த்த குருடர்கள் சொன்ன கதையாகத்தான் உள்ளன. ஏதாவது ஒரு அம்சத்தைப் பாராட்டுவது அல்லது குறை கூறுவது என்ற முறையில்தான் உள்ளன. புதுமைப்பித்தனைப் பற்றி

அவர் வாழ்ந்த காலதேச வர்த்தமானத்தில் பின்னணியில் விரிவாக ஒரு விமர்சன நூல் எழுதுவதற்கான விஷயமும் உண்டு; அவசியமும் உண்டு.

**கேள்வி:**

பல்கலைக் கழகங்கள் புதுமைப்பித்தனைத் தகுந்த முறையில் மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்துள்ளதா? இல்லையெனில் இனியேனும் இம்முயற்சியை மேற்கொண்டு என்ன பணியாற்ற வேண்டும் என நீங்கள் கூற முடியுமா?

**பதில்:**

நமது பல்கலைக் கழகங்கள் இப்போது தற்கால இலக்கியங்களையும் கணக்கில் எடுத்துக் கொள்வதாகச் சொல்லப்படுகிறது. மதுரைப் பல்கலைக்கழகத் தமிழ் எம். ஏ. மாணவர்களுக்கு, 'புதுமைப்பித்தன் கதைகள்' சிலவற்றைப் பாடமாக வைத்திருப்பதாகக் கேள்வி. எனினும் நமது பல்கலைக்கழகங்களில் நடைபெறும் இலக்கிய ஆராய்ச்சிகளின் பாணியும் பந்தாவுமே வேறு. பெரும்பாலும் அந்த ஆராய்ச்சிகளின் ஒரு குறிப்பிட்ட பாணியில் தலைப்புக்களை classify பண்ணிவிட்டு, பிறகு பட்டியல் போடும் விவகாரமாகத்தான் உள்ளது. எனவே புதுமைப்பித்தனைப் பற்றிய நல்ல ஆராய்ச்சிகளை நமது பல்கலைக் கழகங்களிடமிருந்து எதிர்ப்பார்ப்பதைவிட, பல்கலைக் கழக மரபுக்கு அப்பாற்பட்ட முறையில் வெளியே நடைபெறுவதுதான் பயனுள்ளதாக என்று நம்புகிறேன்.

**கேள்வி:**

கடைசியாக நீங்கள் புதுமைப்பித்தனை எப்பொழுது பார்த்தீர்கள்? அது பற்றிக் கூறுவீர்களா?

**பதில் :**

புதுமைப்பித்தனை நான் கடைசியாகப் பார்த்தது 1947ம் ஆண்டு மத்தியில். அப்போதுதான் அவர் கைப்புருவைக் கொண்டு மணிப்புருவைப் பிடிப்பதுபோல், சினிமாவில் வந்த கொஞ்சப் பணத்தைக்கொண்டு, தாமே சினிமாத் தயாரிப்பாளராக அவதாரம் மேற்கொண்டு, மணிப்புருவும் கிட்டாமல் கைப்புருவையும் பறிகொடுத்து நின்ருர். இதன்பின் நான் திருநெல்வேலி வந்து விட்டேன்; அவரும் புனு போய்விட்டார்

இவ்வாறு இருவேறு திசையில் பிரிந்த நாங்கள் மீண்டும் சந்தித்துக் கொள்ளவில்லை. 1948 ஜூன் மாதம் நான் திருநெல்வேலியில் இருந்த காலத்தில், புதுமைப்பித்தனுக்கும் எனக்கும் நண்பரான திருவனந்தபுரம் சிதம்பரத்தின் மூலம் புதுமைப் பித்தன் தம்மை வந்து பார்க்குமாறு தகவல் அனுப்பியிருந்தார். நான் ஒரு வாரத்தில் திருவனந்தபுரத்துக்கு வருவதாகச் சொல்லியனுப்பினேன். ஆனால் புறப்படுவதற்கு முன்னால் நண்பர் சிதம்பரத்திடமிருந்து ஒரு தந்தி வந்தது. 'புதுமைப் பித்தன் நேற்றிரவு காலமாகி விட்டார்' என்பதுதான் செய்தி. அவரைக் கடைசி காலத்தில்கூடப் பார்க்க முடியாமல் போய் விட்டதே என்ற அங்கலாய்ப்புதான் மிச்சமாயிற்று.

**கேள்வி:**

புதுமைப்பித்தனின் இலக்கியம் அவருக்குப் பின் வந்த இலக்கியத்தைப் பாதித்துள்ளதா? இனி வரும் நாட்களில் அவரது பாதிப்பு விரிவடையும் எனக் கருதுகிறீர்களா? அல்லது சுருங்கும் என மதிக்கிறீர்களா? ஏன்?

**பதில் :**

புதுமைப்பித்தன் தமிழ்ச் சிறுகதை இலக்கிய வளர்ச்சியிலும் வரலாற்றிலும் ஒரு மைல்கல்; ஒரு திரும்பு முனை; ஒரு சகாப்தம். அதில் சந்தேகமில்லை. எவ்வாறு பாரதி தமிழ்க் கவிதை உலகில் நடை, வடிவம், உள்ளடக்கம் முதலியவற்றில் புதியன புகுத்தி இருபதாம் நூற்றாண்டின் தமிழ்க் கவிதைக்குத் தலைமகனாக விளங்கினாரோ, அதேபோல் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்துக்கு சிறப்புமிக்க தலைமகனாக விளங்கியவர் புதுமைப்பித்தன்.

அடிமைத்தனத்தின்மீது வெறுப்பு, வாழ்க்கைப் புதரின் முட்களில் விழுந்து தவிக்கும் மக்களின்மீது பரிவு, சமுதாயத்தில் நிலவும் செல்லாகிப்போன சம்பிரதாயங்கள், சடங்குகள், சட்டங்கள் ஆகியவற்றின்மீது ஆத்திரம் முதலியவை புதுமைப் பித்தனின் எழுத்துக்களிலும் குடிகொண்டிருந்தன. இலக்கிய உலகில் அவர் ஒரு கலகக்காரராகவும், அதே சமயம் தாம் கண்ணால் கண்ட வாழ்க்கையைப் பிரதிபலித்துக் காட்டுவதில் அவர் ஓர் எதார்த்தவாதியாகவும் விளங்கினார்.

எனவே அவர் காலத்திலும் அவருக்குப் பின்னும் தமிழில் எதார்த்த இலக்கியம் படைக்க விரும்பிய எந்தவொரு எழுத்தாளரும் புதுமைப்பித்தனின் செல்வாக்குக்கு ஆளாகாமற் போகவில்லை எனலாம். இந்தப் பாதிப்பு கூடவோ, குறையவோ, துலாம்பரமாகவோ, மறைமுகமாகவோ இருக்கலாம். நானும் கு. அழகிரிசாமி, வல்லிக்கண்ணன், ஜெயகாந்தன் மற்றும் பல எழுத்தாளர்களும் இந்தச் செல்வாக்குக்கு ஆளானவர்கள் தான்.

சுருங்கச் சொன்னால் சமுதாய உண்மைகளைக் கருப்பொருளாகக் கொண்டு தமிழில் சிறுகதைகளை எழுத முற்பட்ட இலக்கிய கர்த்தாக்களுக்கும் புதுமைப்பித்தனின் சிறுகதைகளே பாலபாடமாகவும், மூலபாடவும் விளங்கின, விளங்கி வருகின்றன என்பதே அவரது தனிச் சிறப்பாகும். அதே சமயம் அவரிடம் தென்பட்ட பலவீனங்களும், சில வக்கிரப் பார்வைகளும், தனிமனித வாதமும் இன்றைய எழுத்தாளருக்கு ஒரு பாடமும் எச்சரிக்கையும் ஆகும்.

கதை எழுதும் உத்தி, கதையின் வடிவம், கதையில் இடம் பெறும் கருப்பொருள், சமுதாயச் சூழ்நிலை, காலம், களம் ஆகியவற்றுக்கேற்ப கதையின் நடையை மாற்றும் சிறப்பு, வைரம் பாய்ந்த சொல்லாட்சி, வளமிக்க வசனநடை, மற்றும் எதார்த்தமான பிரதிபலிப்பு முதலிய பல அம்சங்களில் வருங்கால எழுத்தாளர்களும் புதுமைப்பித்தனிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டியவை எவ்வளவோ உண்டு. எனவே வருங்காலத்திலும் அவரது பாதிப்பு தொடர்ந்து இருந்து வரும் என்பதில் ஐயமில்லை. அவர் அடியெடுத்துக் கொடுத்த பாதையில், போட்டுக் கொடுத்த அஸ்திவாரத்தில், தெம்பும் திராணியும் மிக்க புதிய புதிய இலக்கியங்கள் தோன்றத் தோன்றத்தான், அவரது பாதிப்பு புதியன புகுதலுக்கு இடம் விட்டு விலகிக்கொள்ளும். அந்தப் பாதிப்பினால் ஆலம் விழுதுபோல் தரையிறங்கி வேர் பாய்ச்சித் தனிமரமாகும் கிளை மரங்கள் தோன்றத் தோன்றத்தான் அந்தத் தாய் மரத்தின் பாதிப்பும் முற்றுப்பெறும் என்றே நான் கருதுகிறேன்.

—முற்றும்—

